உ

சிவமயம்.

இராமநாதபுரம் சமஸ்தானம்
தேவஸ்தானம்

# திருவுத்தரகோசமங்கைத்
# தல புராணம்

## செய்யுளும், வசனமும்.

தேவஸ்தான வெளியீடு.

 1974.



விலை Rs. 2-00

உ

சிவமயம்.

# இராமநாதபுரம் சமஸ்தானம் தேவஸ்தானம்



# திருவுத்தரகோசமங்கைத் தலபுராணம்.




செய்யுள் ஆக்கம்:-

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ

மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகருடைய சிஷ்யர் ஒருவர்





உரை நடை ஆக்கம்:-

பசும்பொன் வித்துவான்

திரு. கு. ஆறுமுகம் பிள்ளை,

தமிழாசிரியர்,

அரசர் உயர்நிலைப்பள்ளி,

இராமநாதபுரம்.





தேவஸ்தான வெளியீடு.





1974

உ

சிவமயம்.

# உள்ளுறை.



புராண காலத்திற்குப் பின் இத்தலத்தில்
அண்மையில் நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சிகள்





திருஉத்தரகோசமங்கை தலபுராணம்.

## நான்காம் பதிப்பு.

# பதிப்புரை.

திருவுத்தரகோசமங்கை மிகப்பழமையான சிவத்தலம் பக்தரெலாம் பார்மேல் சிவபுரம்போல் கொண்டாடும் சிவ ராஜதானி. தெக்ஷிண கயிலாயம் எனப்பெயர் பெற்ற இத் தலத்தில் மரகத நடராஜர் மக்களுக்குத் தன்னருளை வாரி வழங்கிக்கொண்டிருக்கிறார். மணிவாசகப் பெருமானுடன் நெருங்கிய தொடர்புகொண்ட இத்தலம் திருவாசகத்தில் 38 இடங்களில் பாராட்டப் பெற்றபதி. இத்தலபுராணம் முதல் முதலாக 1959-ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டு மூன்று பதிப்புகள் ஏற்கனவே அச்சிடப்பட்டு வெளியாகி வந்திருக் கின்றன. இப்பொழுது பல ஆஸ்திகப் பெருமக்களின் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு நான்காம் பதிப்பு வெளி யிடலாயிற்று.

முதலில் இத்தலபுராணத்திற்கு, உ.ரை ஆக்கம் எழுதித் தந்தவர், இராமநாதபுரம் இராஜா உயர்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியரும், வித்துவானுமான காலஞ்சென்ற பசும் பொன் கு. ஆறுமுகம் பிள்ளை அவர்களே யாவர். அதன்பின் தேவை ஏற்பட, இரண்டு. மூன்று பதிப்புகள் வெளி வந்தன. இப்பொழுது இந்த நான்காம் பதிப்பு வெளியிடப்படுகிறது. இதனை இராமநாதபுரம்—தேவஸ்தான—சமயப் பரப்புன ராகப் பணியாற்றிவரும், சிவநெறிச் செல்வர் திரு. கோ. பெருமாள் பிள்ளை அவர்கள், முந்தைய பதிப்புகளுடன் ஒப்பு நோக்கித் தந்தார். அவர்களுக்குத் தேவஸ்தானம் சார்பில் நன்றி.

நான்காம் பதிப்பை நல்ல முறையில் அச்சிட்டு உதவிய இராமநாதபுரம் சரசுவதி அச்சகத்தாருக்கும் எங்கள் உளம் கனிந்த நன்றி உரித்தாகுக.

இந்த நான்காம் பதிப்பில் இலக்கணப் பிழைகளும் வேறு குறைகளும் காணப்பட்டால், மெய்யன்பர்கள் அவைகளை எங்களுடைய கவனத்திற்கு எழுதித் தெரிவித்தால் நாங்கள் பணிவன்புடன் அதனை ஏற்று அடுத்த பதிப்பில் திருத்தங்கள் செய்து வெளியிடச் சித்தமாயிருக்கிறோமென்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

குறிப்பு:- சென்ற 70 ஆண்டுகளாக இந்தப் புராதனக் கோவிலின் சுவாமி சன்னிதி திருப்பணி நடைபெறுமல் இருந்து வந்தது. இப்பொழுது மாட்சிமை தங்கிய சேதுபதி மன்னரவர்களின் தலைமையில் திருப்பணிக்குழு ஒன்று அமைக்கப்பெற்று, 1970-ஆம் ஆண்டில் திருப்பணி தொடங்க இதுவரை ரூ. 5 லக்ஷம் செலவுசெய்து வேலை நன்கு நடைபெற்று வருகிறது. ஆறு மாதங்களில் மேலும் ரூ. 5 லக்ஷம் செலவு செய்யத் திட்டம் செய்யப்பட்டிருக்கிறது. இந்தத் திருப்பணி வேலைக்காக ஏற்படும் மொத்தச் செலவு ரூ. 20 லக்ஷம். சிவநேயச் செல்வர்கள் தங்களால் இயன்ற பொருளுதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இவ்வாலயத்தில், கடந்த நான்கு ஆண்டுகளாக, ஆந்திர நாட்டிலிருந்து வந்த, ஓய்வுபெற்ற அரசாங்க அலுவலர் ஒருவர், இராஜ கோபுரத்தினடியில் தவம் இயற்றிக் கொண்டிருக்கிறார்; அவர் தம்முடைய அநுபவங்களை, ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். ஆங்கிலம் தெரிந்த அன்பர்கள் அதைப் படித்துப் பயன்பெற வேண்டுமென்று கருதி, அப்பெரியார் ஆங்கிலத்தில் எழுதியுள்ளவற்றைத் தொகுத்து இந்நூலின் இறுதிப் பக்கங்களில் சேர்க்கப்பட்டுள்ளது. அன்பர்கள் அதனையும் படித்துப் பயன்பெற வேண்டுமென கேட்டுக்கொள்கிறோம்.

இங்ஙனம்,

இராமநாதபுரம்,
1—1—1974.

**P. S. லக்ஷ்மண ராவ்.**
தீவான் & அட்மினிஸ்ட்ரேட்டிவ் செக்ரட்டரி,
இராமநாதபுரம் தேவஸ்தானம்.

# முகவுரை.

திருஉத்தரகோசமங்கை மிகப் பழமையான சிவத்தல மென்பது "மண் முந்தியோ மங்கை முந்தியோ" என்று தொன்று தொட்டு வழங்கிவரும் பழஞ் சொல்லிலிருந்து அறியக்கிடக்கிறது.

இத்தலத்தின் தனிச்சிறப்பும் பெருமையும், மணிவாசகப் பெருமானுல் "பார்மேல் சிவபுரம்போல் கொண்டாடும் உத்தரகோசமங்கை ஊர்" என்று பாடியருளிய திருவாசகத் தால் நன்கு விளங்கும். இத்தலத்தைப்பற்றித் தக்கமுறையில் புராணமெழுதி வெளியிடவேண்டுமென்று கருதி பல ஆண்டு களாக முயன்றும் போதிய வரலாற்றுக் குறிப்புகள் ஆதாரங்கள் கிடைக்கவில்லை வடமொழியிலுள்ள ஹாலா சிய க்ஷேத்திர புராணத்தில் சில பகுதிகள் திருவுத்தரகோச மங்கையைப் பற்றியனவாக இருப்பதாகச் சொல்லப்படுகிறது 64 திருவிளையாடல்களில் ஒன்ருகிய வலைவீசிய லீலை நடந்த பரதவர்கள் அடர்ந்த கடற்கரைப்பகுதி திருஉத்தரகோச மங்கைக்கு அண்மையில் இருப்பது யாவரும் அறிந்ததே. ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் அம்பிகையைப் பரதவர் மகளா கச் சபித்துப் பின் சாபவிமோசனம் செய்து, மணந்து இத் தலத்திலேயே தங்கி வேதப்பொருளைப் பிராட்டிக்கு உப தேசம் செய்தும், அத்தலத்திலிருந்த சிவனடியார்கள் சிவ யோகிகள் அறுபதினுயிரவருக்கு ஞானேபதேசம் செய்து வீடு நல்கியும் அங்கயற்கண் நங்கையொடு மதுரை சார்ந்த தாகப் புராணம் கூறுவதை அன்பர்கள் கவனத்திற்குக் குறிப்பிடுகிறேன்.

### திருவிளையாடற் புராணம்.

### வலைவீசின படலம் 62, 63, 64-ம் பாடல்கள்.

*பெண்ணினை வதுவைக்கீந்த பெருந்துறைச் சேர்ப்பற் கன்று*
*தண்ணளி சுரந்து நல்கித் தருமமால் விடைமேற் ருேன்றி*
*விண்ணிடை நின்ருன் சென்ருன் வேத்திரப் படையா ஞேடும்*
*உண்ணிறை யன்பரோடு முத்தர கோச மங்கை* 26

அங்கிருந் தநாதிமூர்த்தி யாதிநான் மறைக ளேத்துங்
கொங்கிருங் கமலச் செல்விக் குரைகழல் வணங்கிக் கேட்பப்
பங்கிருந் தவட்கு வேதப் பயனெலாந் திரட்டி முந்நீர்ப்
பொங்கிருஞ் சுதைபோ லட்டிப் புகட்டினுன் செவிக ளார: 63

அவ்வேலை யன்புடையா ரறுபதினு யிரவர்க்கு மளித்துப் பாச,
வெவ்வேலை கடப்பித்து வீடாத பரானந்த வீடு நல்கி
மைவேலை யனையவிழி யங்கயற்க ணங்கையொடு மதுரை சார்ந்தான்.
இவ்வேலை நிலம்புரக்க முடிகவித்துப் பாண்டியனென்
றிருந்த மூர்த்தி. 64

பல ஆண்டுகளுக்குமுன் தர்மபுர ஆதீனகர்த்தராயிருந்த ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகருடைய அணுக்கத் தொண்டர் ஒருவரால் எழுதப்பெற்று இராமநாதபுரத்தில் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ள புராண அச்சுப்பிரதியை உற்று நோக்கியதில் அதன் செய்யுட்கள் மிகக்கடினமானதாயும், வாசிப்பவர்களுக்கு எளிதில் பொருள் விளங்கக்கூடாததாயுமிருப்பதை உத்தேசித்து தக்க முறையில் வசனமெழுதி அத்துடன் சேர்த்து வெளியிடுவதும் உசிதமென்று தீர்மானித்தபடி இந்நூல் வெளிவருவதாகும்.

இதில் மணிவாசகப் பெருமானுடைய திருவாசகத்தில் இத்தலத்தைப்பற்றி பரவிவரும் செய்யுட் பகுதிகளையும் திருப்பதிகங்களையும் அருணகிரியார் இத்தலத்தைப்பற்றிப் பாடியுள்ள திருப்புகழ்ப் பாடல்களையும் சிவநேசச் செல்வர்களுடைய விருப்பத்திற்கிணங்க முதற்கண் சேர்த்திருக்கின்றோம்.

இந்த தலபுராணத்திற்கு நல்ல சிறந்த முறையில் வசனமெழுதித் தந்த பெரியார், பசும்பொன் வித்வானும் இராமநாதபுரம் அரசர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியருமான உயர்திரு. கு. ஆறுமுகம் பிள்ளை யாவார். இவருடைய சிறந்த தமிழ்ப் புலமையையும், சைவப்பற்றும் அடியார் பக்தியும், உயர்ந்த பண்பாடுகளும், இவர் எழுதியுள்ள "பணிவாயில், தோற்றுவாய், புராண வசனம்" முதலியவற்றிலிருந்து

நன்கு புலப்படும். இவர் ஆற்றியது பெரும் சிவத் தொண்டாகும். அன்னருக்குத் தேவஸ்தானம் சார்பில் எங்கள் உளங்கனிந்த நன்றி பெரிதும் உரியதாகும்.

இப்புராண வெளியீடு மாஜி திவான் ஸ்ரீமான் J. பாலாஜி ராவ் அவர்கள் காலத்தில் ஒருவாறு துவக்கப் பெற்றதாயினும் பின்னர் அப்பதவியை ஏற்று நிர்வாகம் நடத்தி வந்த உயர்திரு. M. V. இராகவேந்திரராவ், B. A., அவர்களால்தான் பூர்த்தியானது. இதற்கு அவர்களுடைய ஆக்கமும் ஊக்கமும் உயரிய தமிழ்ப்பற்றும் தெய்வ சிந்தனையுமே முக்கிய காரணங்களெனக் கூறுவது மிகையாகாது.

இந்நூல் அச்சுப் பிரதிகளை அவ்வப்போது ஒப்பு நோக்கியும் பிழை திருத்தங்கள் செய்து பணியாற்றிய நயினார் கோவில் முத்தமிழ் வித்வான் உயர்திரு. வி. சத்திவேல் ஆச்சாரியாருக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்நூலை அழகுபட அச்சிட்டு புத்தக ரூபமாக்கித்தந்த மதுரை சம்பத் அச்சகத்தாருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

காலத்திற்கேற்ப இந்நூலில், திருவுத்தரகோசமங்கை ஆலயத்தைச் சிறப்பிக்கும் ஏழுநிலை இராஜகோபுரம், சுவாமி சன்னதிமுன் ஐந்துநிலைக் கோபுரம், அம்மன் சன்னதி முன் மொட்டைக் கோபுரம், அக்கினி தீர்த்தம் 'பதரி' என்ற பழம்பெரும் இலந்தை மரம் உள்ளடங்கிய சகஸ்திரலிங்கம் கோவில், பாஸ்கர சேதுபதி அவர்களாலும், அவர்களுடைய முதன்மைப் பத்தினியார் இராணி மங்களேஸ்வரி நாச்சியார் அவர்களாலும் உபயமாக அவ்வப்போது அளிக்கப்பெற்ற சில உயர்ந்த திருவாபரணங்களின் படங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகத்தை வாசிக்கும் அன்பர்கள் ஆங்காங்கு காணும் பிழைகளையும் பதிப்பிலுள்ள குறைகளையும் குறிப்பு எழுதி உபகரித்தால் தேவஸ்தானத்தார் நன்றியோடு ஏற்று அடுத்த பதிப்பில் திருத்தியமைத்து நல்ல முறையில் வெளியிட அனுகூலமாக இருக்குமென்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

இங்ஙனம்,

இராமநாதபுரம்,
20—7—1959.

**M. இராமநாத பிள்ளை,**
எண்டோமெண்ட் சூப்ரின்டென்டென்ட்,
இராமநாதபுரம் தேவஸ்தானம்.






ஸ்ரீ முத்துராமலிங்க சேதுபதி (துரைராஜா)

ஸ்ரீ இராஜ ராஜேஸ்வர சேதுபதி ஸ்ரீ பாஸ்கர சேதுபதி

ஸ்ரீ ஷண்முக ராஜேஸ்வர சேதுபதி

உ

வேலுண்டு வினையில்லை மயிலுண்டு பயமில்லை.

குகனுண்டு குறைவில்லை.

# மணி வாயில்.

மனிதனென்ன ஆட்டு மந்தையா எந்தப் பட்டியில் வேண்டுமானு லும் அடைக்கலாம் என்பதற்கு? அல்லது பொன்னு தங்கமா எந்தப் பெட்டியிலும் பூட்டலாமென்பதற்கு? என்று விடுதலை வினுவுகிறது.

மானிடனென்ன விலங்கா பறவையா மனம்போன போக்கெல்லாம் போய் மாயையில் மாய்வதற்கு? என்று வாழ்க்கைக் கட்டுப்பாடு வரம்பு கோலுகிறது. முன்னது அரசியல், பின்னது ஆன்ம இயல். அரசியலுக் கடிப்படை தேசப்பற்று. ஆன்ம இயலுக்கடிப்படை தெய்வப்பற்று. ஆன்ம இயலை இங்கு ஆராய்வோம். தெய்வத்துணையைப் பற்றினுல் ஆன்மா கடைத்தேறும் இல்லையானுலில்லை.

கடவுள் என்ற ஒரு பொருளுண்டா இல்லையா? இருந்தால் நம் கண்களுக்குத் தெரியாமலிருக்க முடியுமா? என்று வினுக்கள் மிக எளிதாக இந்நாட்டில் இக்காலத்தில் எழுகின்றன. மனிதன் இருக்கின்றுன்; இயங்குகின்றுன்; செயற்கரியனவெல்லாம் செய்கின்றுன்—உலகங்கண்டு வியப்புற. எதனுல்? அவனுள்ளேயிருக்கும் ஆன்மாவின் துணைகொண்டு. அது இயக்க இயங்குகின்றுன். அது இயற்றுவிக்க இயற்றுகிறுன். அது இல்லையானுல் வெட்டி முறிக்கும் மரம்போல் வீழ்ந்துபடுகிறுன். இது உல கறிந்த உண்மை. அப்படியானுல். அது கண்ணுக்குத் தோன்றவில்லையே கருத்துக்கெட்டவில்லையே என்பதுகொண்டு அத்தகைய ஆன்மா என்ற ஒரு பொருள் இல்லையென்று துணிந்து கூறமுடியுமா எவராலும்.

இவ்வுடலினுள்ளே, மறைவாக உயிரென்பதொன்றிருந்து இயக்கு வது போல. இவ்வுலகினுள்ளே புலன் பொறிகளுக்கெட்டாமல் அறிவா ராய்ச்சிக் கப்பாற்பட்டு! உலகுக்குயிராய் உயிரினுக்குயிராய் ஒரு பொருளிருந்து இயக்க அண்டங்களெல்லாம் அதனதன் எல்லைக்கோடு களின் வழியே அணுப்பிசகாமல் இயங்குகின்றன. இல்லையேல், அவை தாமாகவே இயங்குவதெவ்வாறு? உய்த்துணர வேண்டும், ஊன்றிநோக்க வேண்டும்.

I. "வழியடியோம்
கண்ணகத்தே நின்று களிதருதேனே
கடலமுதே! கரும்பே! விரும்படியார்
எண்ணகத்தாய் உலகுக்கு உயிரானுய்"

-மாணிக்கவாசகர்

மனிதன் பெறுதற்கரிய பிறவியைப் பெற்றிருந்தும் அடைதற்கரிய அவனருளை அடையாமல், அவமே மாய்ந்து மடிகின்றான் — புற்றீசல் போல—புழுப்போல அரசர்களும் அவலக் கவலைகளுற்று, அல்லலுற்று அழிதுயருற்று மாய்வதை விழியெதிர்கண்டும், இந்த மாயப் பிறவியின் மாய மயக்கில் மாறி மாறி மயங்கி மாவாதனையுற்று மண்ணொடு மண்ணாய் மறைந் தொழிகின்றார்கள். இம் மயக்கக் கருங்கடலை—பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கு ஒரு வழியில்லையா? உண்டு என்கிறார் ஓர் தெய்வப் புலவன். யாருக்கு? இறைவனடி சேர்ந்தார்க்கு.

> ''பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
> இறைவன் அடிசேரா தார்'' —வள்ளுவன்.

எனவே ஓர் கப்பலின் துணையின்றிக் கடலைக் கடக்க முடியாது கடவுளின் துணையின்றிக் கவலையைக் கடக்க இயலாது. கவலையில் அமிழாத ஒருவனைக் காணல் உலகிலரிது—ஆண்டிமுதல் அரசர்வரை, எவரையும் கவலை விடவில்லை. கவலை உலகைக் கறையானாயரிக்கிறது. கவலை உயிரோடு தொடர்புகொண்ட நோயாகிவிட்டது அதுவே பிறவிப் பெருநோய். அதற்கொரு மாற்று மருந்து ஆற்றும் வழியில்லையா? இருக்கிறது என்கிறான் வள்ளுவன். எவருக்கு? ''தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு,'' மற்றவர்களுக்கு? மனக்கவலை மாற்றலரிது''.

அவன் தாளைச் சேர்வது எவ்விதம்? வழிபாடு மேற்கொண்டாலன்றி மறுவழியில்லை, அதுவும், ஒன்றில் மனம் சென்று பதிந்தாலன்றி ஆகாது உருவமற்ற ஒன்றில் வெட்ட வெளியில்—வெறும் விண்ணில், மனம் ஊன்றுவது எவ்விதம்? எனவேதான் உருவ வழிபாட்டை உகந்தார் உயர்ந்தோர். இதன் மூலமாகவே எழுந்தன ஆலயங்கள். அங்கே பரமாத்மா அருள்மேனி தாங்கி அல்லலுற்று வருகின்ற அன்பர்களுக்கு இரங்கி அருள்புரிந்து ஆறுதல் தந்து இகபர சாதனங்களை வழங்குகின்றான்.

அவைகளிலே ஒன்று நாம் இங்கே காணும் திருஉத்தரகோசமங்கை ''இத்தலம், பாண்டிநாட்டுப் பழம்பெருந் தலங்களிலொன்று'' என்று சான்றுகள் பகர்கின்றன. ''மண் தோன்றியபோதே மங்கை தோன்றியது'' என்ற பழமொழியும் நிலவுகிறது. இராவணன் காலத்திற்கு முன்னரே இவ்வாலயம் இருந்து வருவதாகச் சரித்திரம் பேசுகிறது. இராவணன் இல்லக்கிழத்தி—நல்லறப் பெண்டு—தவமகள் வண்டோதரியின் தவச்செயல் இதன் 8-ம் அத்தியாயத்தில் இடம் பெறுகிறது,

மேலும் வண்டோதரியின் பெயர் திருவாசகத்திலும் காணப் படுகிறது. அவள் அழகில் மிக்கவளாயும் தவமகளாய் இருந்தாள் எனவும் தெரிகிறது.

"ஆர் கலிசூழ் தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்குப்
பேரருள் இன்பம் அளித்த பெருந்துறை மேயே பிரானை"

என்று திருவாசகம் பேசுகிறது. இதுவும் அன்றி உத்தரகோசமங்கை ஆலயத்தில் மங்களநாதன் மூலத்தானத் திருமதிலில் பொறிக்கப் பெற்றிருக்கும் கல்வெட்டுக்களிலும் வண்டோதரியின் பெயர் வரையப் பட்டிருப்பதை யாவரும் காணலாம்.

இலந்திகைப் பள்ளி, இலவந்திகைப் பள்ளி என்ற பெயர்கள் சங்க காலத்து இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. இவைகள் 'இலந்தை; என்ற சொல்லில் நின்றும் மருவி எழுந்த மரூஉப் பெயரென்பது ஒருதலை "பாண்டிநாடே பழம்பதியாகும்" என்கிறார் சுவாமி மாணிக்கவாசகர். இப் பழம்பெரும் நாட்டில் எந்த ஒரு கோணத்திலாவது வேறு ஒரு தலத்திற்கு இப்பெயர் அமைந்திருப்பதாய்ப் புலப்படவில்லை. மேலும் இது போல் இலந்தையைத் தல விருட்சமாக உடைய ஒரு பெருந்தலம் இருப்பதாகவும் தெரியவில்லை.

எனவே. சங்ககால இலக்கியங்கள் கூறும் இலவந்திகைப் பள்ளி என்பது இவ் வுத்தரகோசமங்கையையே குறிப்பதாகும். கீழ்வரும் சான்றுகளால் இது மறுக்க இயலாத தொன்று. இவ்விலவந்திகைப்பள்ளி பாண்டிய மன்னர்களது அரசிருக்கையாக இருந்து வந்திருக்கிறது. இதற்குச் சான்றாக புறநானூறு 55, 56, 57 முதலிய பாடல்களில் இல வந்திகைப் [1]பள்ளி [2]துஞ்சியநன் [3]மாறன் பேசப்படுகிறான் இவன் உத்தர கோசமங்கையில் இருக்கும்போது வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்ற பாண்டிய மன்னன். வெள்ளியம்பலமாம் மதுரையிலிருந்து அரசாண்டமை தெரிகிறது. இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை நக்கீரனார், மருதனிள நாகனார் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் முதலான சங்கப் புலவர்கள் பாடியுள்ளார்கள்.

மங்களநாதனது சுற்றுச் சுவர்களில் வண்டோதரியின் பெயர் பொறிக்கப்பட்டிருத்தல் போன்றே இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன் மாறன் பெயரும் செதுக்கப் பெற்றுள்ளது. இதை யானுங் கண்டேன். காண்கின்றேன். யாவரும் காணலாம். இவ்விதம் சுவாமி சந்நிதானத்

1) பள்ளி=இடம். 1) துஞ்சிய=இறந்த. 3) மாறன்=பாண்டியன்.

திருமதில்களில் செதுக்கப் பெற்றிருக்கும் மிகுதியான சில எழுத்துக்களை கல்வெட்டாசிரியர்கள் ஆராய்ந்து நோக்கினுள் இத்தல சம்பந்தமாக மறைந்து கிடக்கும் அரிய பல செய்திகள் வெளிப்படலாம்.

இத்தலத்திற்கு உத்தரகோசமங்கையென்று பெயரேற்பட்ட காரணத்தை, இந்நூலின் இறுதியான வலைவீசிய அத்தியாயம் சொல்லுகிறது. இப்பதியின் தலவிருட்சம் இலந்தையாகும். இதற்கு வடமொழியில் பதரி என்ற பெயருண்டு. இத்தலம் அக்காலத்தில் இலந்தை வனமாக இருந்தபடியால் வெதிரிகாரணியம் என்ற பெயரையும் உடையதாயிற்று.

இதற்கு இலக்காக, ஆங்குள்ள ஆயிரம் லிங்க மூர்த்தங்களுள்ள (சகஸ்ரலிங்க)சந்நிதியில், ஓர் முதிர்த்த வயதுடைய பழம்பெரும் இலந்தை தழைத்துக் கிளைத்து நிற்பதை இன்றுங் காணலாம், அது பன்னெடுங்காலம் நின்று வருவதாக, வர்ழையடி வாழையாய் வருகிற பரம்பரை: தலைமுறை தலைமுறையாகச் சொல்லிவைத்துச் செல்கிறது. அதனை நோக்கும்போது எடுத்த எடுப்பிலேயே எத்தனை காலவெள்ளத்தை இது கடந்து நிற்கிறதோ என்ற வியப்பை மூளச்செய்கிறது. இப்பதி, வெதிரிகாரணியம் என்ற பெயரோடு பன்னிரு திருநாமங்களைக் கொண்டதாய்த் திகழ்கிறது.

இவ்வூர் முற்காலத்தில் பச்சைப்பசேலென்ற 1 பழனங்களையும் நறுமணப் பூஞ்சோலைகளையும், வானளாவிய மரங்களையும், பசுமடங்களையும் வானுயர்ந்த மாட வரிசைகளையும், பல அற நிலையங்களையும் கொண்டு திகழ்ந்திருந்ததாக இந்நூலால் அறிகிறோம். இவ்வூர் இராமநாதபுரத்திலிருந்து தென்மேற்கில் பத்துக்கல் தொலைவில் உள்ளது. இதற்கென ஒரு சிறு புகைவண்டி நிலையம் உண்டு. அதிலிருந்து நேர் தெற்கே நாலுகல் தொலையில் இருப்பது அவ்வாலயம்.

மேலும், இத்தலத்தைப் பற்றி, ''அணி பொழில் உத்தரகோசமங்கைக்கரசே'' என்றும், வெறி வாய் அறுகால் உழுகின்ற பூம்பொழில் உத்தரகோசமங்கைக்கரசே'' எனவும் ''தெங்குலவு சோலைத் திருவுத்தரகோசமங்கை'' யாகவும் ''பத்தரெல்லாம் பார்மேல் சிவபுரம்போல் கொண்டாடும் உத்தரகோசமங்கையூர்'' எனவும் மணிவாசகப் பெருமான் பாவார நாவாரப் பாடுகின்றார். எனவே இப் பிறவிப் பெரும் ஞானி இங்கு நிலவிய காலத்து அதாவது கி.பி 3ஆம் நூற்றாண்டில் இப்பதி அத்தகைய வளமுடையதாய்த் திகழ்ந்திருக்கின்றது எனத் தெரியவருகிறது. அதே நேரத்தில் திருப்பெருந்

1) பழனம்=வயல்.

துறையைப் பாடுங்கால் ''செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ் திருப் பெருந்துறை'' எனவும், ''சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ் திருப்பெருந்துறை'' என்றும் விதந்து பாடுகிருர். எனவே. உத்தரகோச மங்கை எழிலும் பொழிலும் சூழ்ந்ததாகவும், திருப்பெருந்துறை. வயல் வளம். கயல்வளம் வாய்ந்ததாயும் தெரியவருகிறது.

பாண்டியநாட்டுப் பழந்தலங்களிலெல்லாம் இது மிகப் பழந்தலமென்று பாராட்டப்பெற்றும் தேவாரப்பாடல் இல்லாதிருப்பது ஆராய்வுக் குரியதோர் செய்தியாம். ஒருவாறு இருந்து இறந்து போனதாகக் கருதப்படும் தேவாரப் பதிகங்களிலே இத்தலப் பதிகமும் ஒன்ருயிருக்கலாமா என்று அறிஞர்கள் அனுமானிக்கிருர்கள். ஆனல் அருணகிரியார் திருப்புகழ் அதனை அழகு செய்கிறது.

இறைவன் ஆணைப்படி. பின்பிறப்பிலே மாணிக்கவாசகர் இங்கு வந்து ''கன்னற்பாகில் கோத்தேனில் கனியிற் கனிந்து'' கவியாகிற திருவாசகத் தீம்பாடல்களால் தேவன் உள்ளத்தைத் தெவிட்டாமல் தித்திக்கச் செய்தார் என்பது மாத்திரமல்ல; அன்பால். உள்ளம் உடைந்து, உடைந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து. அது உருகியுருகி, ஊற்றிருந்தொழுகும் கண்களோடு பத்திபரவசராய் அம்மகான். மங்களநாதனது மலரடிக்கீழ் மணிவாசகமாகிய வாடாமலர்களால் அருச்சித்து ஆராதித்தார் என்றும் கூறலாம்.

அப்பிள்ளைப் பெருமான், சிவபெருமான் அளித்த சிவகாமத் திருமுறையை விடாது பற்றியபடியே அக்கினி தீர்த்தக்கரையில் அருந்தவம் ஆற்றினர் என்று அவரது முன்னைத்தோற்ற வரலாறு மொழிகிறது. இவற்றையெல்லாம் உற்று நோக்கையில் அச்சைவப் பெரியாரது முன்னைப் பிறப்பும் பின்னைப் பிறப்பும், இத்தல வரலாற்ருேடு விரவி விட்டதாகவே தெரிகிறது அதனல்தான், அப்பிறவிப் பெருஞானிக்கு அவைகளின் நினைவுச் சின்னமாக அங்கே ஆலயமிருக்கிறது அக்கினி தீர்த்தக்கரையில், இவற்றையெல்லாம் இந்நூல் எட்டாம் அத்தியாயம் சிறிதே எடுத்துரைக்கிறது.

அப்பெரியார், அத்தலத்தில் பாடிய ''நீத்தல் விண்ணப்பமும்'' தில்லை ''திருப்பொன்னூசலும்'' அன்பர்களின் உள்ளத்தில் அமுதூறித் தித்திக்கச்

---

2) ''உத்தம மாவளங்கொள உத்தரகோசமங்கை
உற்றினிதாயிருந்த பெருமாளே''

—அருணகிரியார்

செய்கின்றன. மேலும் "உத்தரகோசமங்கையுள் இருந்து வித்தக வேடங்காட்டிய இயல்பும்" என்ற மணிவாசகத்தின் உண்மையை, மேற்கண்ட அத்தியாயத்தில் வருகிற காட்சி கொடுத்த நாயகன் என்பது மெய்ப்பிக்கிறது.

மகேந்திரம் என்பது உத்தரகோசமங்கை என்றும் 'மன்னுமாமலை மகேந்திர மதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்" என்ற மணிவாசகம் உத்தரகோசமங்கையில் அம்பிகைக்குச் சிவபெருமான் ஆகம உபதேசம் செய்ததைச் சுட்டுகிறதென்றும் சொல்கிறார்கள். இதை, தமிழ் உள்ளளவும் தமிழ்மகன் உள்ளவரையும் மறக்க முடியாதவரும், தமிழ்மொழி தழைக்க வழிகோரியவருமான டாக்டர் உயர்திரு, உ. வே. சாமிநாதையரவர்களது நூல் நிலையத்தார் வெளியீடாகிய திருவாசகப் பேருரை கிட்டவட்டமாகத் தெரிவிக்கிறது. "மற்றவை தம்மை மகேந்திரத்திருந்து உற்ற ஐம்முகங்களாற் பணித்தருளியும்" என்ற திருவாசகமும் அதனை அரண் செய்கிறது என்பதும் ஆன்றோர் கருத்து. இக் கருத்துக்களெல்லாம், சைவம் தழைக்க தமிழ் தழைக்கச் சரமாரியாகத் தனதானம் செய்து நிலவுகிற திருப்பனந்தாள் ஆதீன மகோன்னத தம்பிரான் சுவாமிகளது திருக்குறிப்பேயாகும்.

அத்தலத்தின் பேரால் "மங்களேசுவரி பிள்ளைத் தமிழ்" [3] என்றதோர் நூலும், பிலவ ஆண்டு சித்திரையில் (1901ல்) வெளியாகியுள்ளது. அதுவே இரண்டாம் பதிப்பாக 1956லும் நிலவுகிறது. அதன் வாக்கு ஈடுசோடில்லாததாகக் காணப்படுகிறது. நமது ஞானசாகரம்—ஓதாதுணர்ந்த மூர்த்தி—பெரியார் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளது வாக்காயிருக்கலாமா என்று யூகிக்க இடந்தருகிறது. அப்பேர்பட்ட நூலது. ஆசிரியர் யாரெனத் தெரியவில்லை. அவ் விரண்டாம் வெளியீடு அறப்பெரும் பணிகள் அளப்பரும் வகையில் ஆற்றும் திருப்பனந்தாள் ஆதீன சுவாமிகளது கட்டளைப்படி வெளியிடப்பெற்றதாகும்.

இராமநாதபுரம் வட்டாரத்திற்குச் சிரிம்பினி நாடு என்று ஆதிப் பெயர் இருந்திருப்பதாகத் தெரியவருகிறது. இதை, 9வது திருமணம் புரிந்த அத்தியாயம் தெரிவிக்கிறது இதன் நான்கெல்லை யாதோ? ஆகவே, சிரிம்பினி நாடு என்ற பெயர்தான், பின்னர் செம்பிநாடு என்று

---

3. 1901-ல் வெளியீடு, தணிகைமணி ராவ்பகதூர் ஸ்ரீமான் வ.சு. செங்கல்வராய பிள்ளையவர்களின் தந்தையார் வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்களால் சிவதரும கைங்கரியப் பிரசுரமாக வெளிவந்ததாகும். இப்பிள்ளைத் தமிழையன்றி இத்தலத்திற்கு மற்றோர் பிள்ளைத் தமிழும் இருப்பதாய்த் தெரியவருகிறது.

மருஉப் பெயராக மருவி வந்திருக்கலாம் என்று அனுமானிக்க இடந் தருகிறது. ஆனல் அதன் ஆதிப்பெயர்க் காரணம் யாதாயிருக்கலாம் என்று சற்றும் புலப்படவில்லை அதனல்தான் செம்பிநாட்டு மக்கள் செம்பிநாடர் என்று அழைக்கப் பெற்றுர்கள். செம்பிநாடு, திருவுத்தர கோசமங்கை போன்ற தெய்வத் தலங்கள் பலவற்றை தன்னகத்தே கொண்டு திகழ்வதால் சிறந்த நாடு போலும்!

திருக்குற்றாலம் [1] தாம்பிரச்சபை, மதுரை வெள்ளியஞ்சபை, சிதம் பரம் பொற்சபை, உத்தரகோசமங்கை மரகதசபை. இங்கே அமர்ந் திருக்கிற நடராசப் பெருமான் மரகத வடிவாயமைந்திருக்கிருர். ஆத லால் இரத்தின சபாபதியனுர், சிதம்பரப் பொன்னம்பலத்தில் ஆடல் புரியுமுன்னரே நடராசப்பெருமான், புலித்தாள், பதஞ்சலி முனிவரிருவ ருக்கும் ஆதியில் நடனக்காட்சி நல்கியபடியால் இத்தலம் ஆதிசிதம்பர மாயிற்று. பெருமான் ஆதிசிதம்பரேசன் ஆனுன்.

திருவுத்தரகோசமங்கைத் தலபுராணத்தின் உரை நடையாக்கமே இந்நூல். அப் புராணம், தர்மபுர ஆதீன மகாசந்நிதானம்—ஸ்ரீமாசிலா மணி ஞானசந்த பரமாசாரிய தேசிகர் காலத்துத் தம்பிரான்களில் ஒருவ ரால் பாடப்பெற்றிருப்பதாகத் தெரியவருகிறது. அத்தம்பிரானவர்கள், தமது பரமாசாரிய ஞானதேசிகரது பாதங்களில், குருகாணிக்கையாக, நன்றியின் சின்னமாய் அன்பு மலரை யருச்சித்துக் குரு வணக்கம் செய்கி ருர். இதனை, 5 வது அரித்துவசன் சாபந்தீர்ந்த அத்தியாயத்தில் 140-ம் பக்கம் காணலாம். மேலும் தம்பிரானவர்கள் அந்நூலிலே வாழ்த்துப் பகுதியில், குருவணக்கப் பாடலில் ''மாசிலாமணி ஞானசம்பந்தன் பூங்கழல்கள் வணக்கம் செய்வாம்'' என்றும் பாடியுள்ளார்- இதைத் தவிர, பாடிய அவரது பெயரோ வேறு விவரமோ ஒன்றும் அறிவதற்கில்லை.

இத்தலத்தைப் பற்றி இப்பகுதியிலும் சரி வேறு எப்பகுதி மக்க ளிடையேயும் சிறந்ததோர் எண்ணம் நிலவி வருவதுண்மையே இராமேசு வரத்தைப் போல இதுவும் ஒரு உயரிய யாத்திரைத்தலம். இத்தகைய வரலாருகிய இந்நூலை அத்தல புராணத்திலிருந்து உரைநடையாக்கிய பணி, தமியேனைச் சார்ந்ததாயினும், ஆக்குவித்து பேறும் புகழும் படைத்த உயர்திரு. திவான் ஸ்ரீ J. பாலாஜிராவ் அவர்கட்கும் அதன் பின்னர் அப்பதவி ஏற்ற உயர்திரு திவான் ஸ்ரீ M ராகவேந்திரராவ் B A

---

1. தாம்பிரத்தில் உயர்ந்தது வெள்ளி; இதிலும் உயர்ந்தது பொன் பொன்னிலும் உயர்ந்தது இரத்தினம் எனவே; ஏனைய தலங்களிலும் உத்தரகோசமங்கை மரகதமாக விளங்குகிறது

அவர்கட்கும் எழுத அனுமதி கோரியபோது தடையின்றி வழங்கிய எங்கள் முதன்மையாசிரியர்—மேதகு. M. ராஜா அய்யர் M.A., L.T. அவர்கட்கும் உருவாகுவதில் ஆர்வம் வைத்து, என்னை இடையிடையே தூண்டியும் ஊக்கியும் வந்த தேவஸ்தான சூப்பெரிண்டெண்ட் ஸ்ரீ M. இராமநாத பிள்ளையவர்கட்கும் எனது நன்றி யுரியதாகும்

இதனை எழுதும்போது ஏற்பட்ட ஒருசில ஐயப்பாடுகளை தெளிவு செய்துகொள்வதில் எனக்குத் துணைபுரிந்த சுவாட்சு உயர்நிலைப்பள்ளி முதன்மைத் தமிழாசிரியர் அன்பர் திரு. மா. குருசாமி அவர்களுக்கும் நன்றி செலுத்துகிறேன்.

இஃதோர் ஆத்திக நூலென்பது யாவருமறிந்ததேயாம். இதனை அன்பால் படிக்கும், படிக்க பக்கநின்று கேட்கும் அன்பர்கள் இதிலுள்ள குற்றங் களைந்து குணத்தை மட்டும் கொள்ளுமாறும். இந்நூலைப் பெரு மிதமாக வாங்கி ஆதரிக்கும்படியும் வேண்டுகிறேன்.

அரசர் உயர்தரப்
பலநோக்குப்பள்ளி,
இராமநாதபுரம்.
12—11—'57.

ஆசிரிய ஊழியன்,
பசும்பொன் வித்துவான்,
**கு. ஆறுமுகம்,**
தமிழ் ஆசிரியர்.



# இராமநாதபுரம் சமஸ்தான நிர்வாகிகள்

# 1967-1974.



P.S. லக்ஷ்மணராவ், (திவான் & அட்மினிஸ்ட் டிரேடிவ் செக்ரடரி)
M.V. இராகவேந்திரராவ் B.A., (முன்னுள் திவான் & அட்மினிஸ்ட் டிரேடிவ் செக்ரடரி)
லேட் M. இராமநாதபிள்ளை, (முன்னுள் எண்டோமெண்ட் சூப்பிரண்டெண்ட்)

1) ராஜகோபுரம் 7 நிலை. உயரம் 120 அடி. 2) அக்னி தீர்த்தம்
3) சுவாமி சன்னிதி முன் கோபுரம் நிலை. உயரம் 64 அடி.



சகஸ்தரலிங்கம்கோவில், பதிரிகா என்ற இலந்தை
மரம் (ஸ்தல விருக்ஷம்)

## திருவுத்தரகோசமங்கை பற்றிய

# திருவாசகப் பாசுரங்கள்.

### தில்லையில் அருளிய
### கீர்த்தித் திருவகவல்

*நிலைமண்டில ஆசிரியப்பா*

பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும் (48—50)

பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும். (118—120)

### I உத்தரகோசமங்கையில் அருளிய
### நீத்தல் விண்ணப்பம்.

பிரபஞ்ச வைராக்கியம்

*கட்டளைக் கலித்துறை*

கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின் தோல்
உடையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பி ரானென்னைத் தாங்கிக்கொள்ளே. (1

கொள்ளேர் பிளவகலாத்தடங் கொங்கையர் கொவ்வைச்செவ்வாய்
விள்ளே னெனினும் விடுதிகண் டாய்நின் விழுத்தொழும்பின்
உள்ளேன் புறமல்லே னுத்தர கோசமங் கைக்கரசே
கள்ளே னொழியவுங் கண்டுகொண் டாண்டதெக் காரணமே. (2

காருறு கண்ணிய ரைம்புல னாற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னு முத்தரகோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க என்னை வளர்ப்பவனே. (3

---

I. உத்திரம்—உபதேசம்
கோசம்—இரகசியம்
மங்கை – மங்களநாயகி } உபதேசமாக, பிரணவ இரகசியப்பொருளை மங்களேசுவரிக்கு, இறையனார் அருளிச் செய்த இடம்:-உத்தரகோசமங்கை அல்லது மங்களேசுவரிக்கு இரகசியப் பொருளை, உபதேசித்த இடம்.

வளர்கின்ற நின்கரு ணைக்கையில் வாங்கவு நீங்கியிப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதிகண்டாய் வெண்மதிக் கொழுந்தொன்
றொளிர்கின்ற நீண்முடி யுத்தர கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னுமின் னும்மன்ன தோற்றச் செழுஞ்சுடரே (4

செழிகின்ற தீப்புகு விட் டிலிற் சின்னமொழி யாரிற்பன்னுள்
விழுகின்ற என்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி யுத்தரகோச மங்கைக் கரசே
வழிநின்று நின்னரு ளாரமு தாட்ட மறுத்தனனே. (5

மறுத்தனன் யானுன் னருளறி யாமையி லென்மணியே
வெறுத்தெனை நீவிட் டிடுதிகண் டாய்வினை யின்றொகுதி
ஒறுத்தெனை யாண்டுகொ ளுத்தர கோசமங் கைக்கரசே
பொறுப்பரன் றேபெரி யோர்சிறு நாய்கள்தம் பொய்யினையே. (6

பொய்யவ னேனைப் பொருளென ஆண்டொன்று பொத்திக்கொண்ட
மெய்யவ னேவிட் டிடுதிகண் டாய்விட முண்மிடற்று
மையவ னேமன்னு முத்கர கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி யேன்பவந் தீர்ப்பவனே. (7

தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரரு ளென்கொலென்று
வேர்க்கின்ற என்னை விடுதிகண் டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை யுத்தர கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற அஞ்சொடச் சம்வினை யேனை யிருதலையே. (8

இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வல னேந்திப் பொலிபவனே. (9

பொலிகின்ற நின்றுள்புகுதப்பெற் றுக்கையைப்போக்கப்பெற்று
மெலிகின்ற என்னை விடுதிகண் டாயளி தேர்விளரி
ஒலிநின்ற பூம்பொழி லுத்தர கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித் தாய்புர மாறுபட்டே. (10

மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன்மனத்தே
ஊறுமட் டேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந்தகையே. (11

நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள யானைம் புலன்கள்கொண்டு
விடுந்தகை யேனை விடுதிகண் டாய்விர வார்வெருவ
அடுந்தகை வேல்வல்ல வுத்தர கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேனுண்ணுந் தெண்ணீ ரமுதப் பெருங்கடலே. (12

கடலினுள் நாய்நக்கி யாங்குன் கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை விடுதிகண் டாய்விட லில்லடியார்
உடலில மேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
மடலின்மட் டேமணி யேயமு தேயென் மதுவெள்ளமே. (13

வெள்ளத்துள் நாவற்றி யாங்குன்னருள் பெற்றுத்துன்பத்தின்றும்
விள்ளக்கி லேனை விடுதிகண் டாய்விரும் பும்மடியார்
உள்ளத்துள் ளாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
கள்ளத்து-ளேற்கரு ளாய்களி யாத களியெனக்கே. (14

களிவந்த சிந்தையொ டுன்கழல் கண்டுங் கலந்தருள
வெளிவந்தி லேனை விடுதிகண் டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்
ஒளிவந்த பூங்கழ லுத்தர கோசமங் கைக்கரசே
எளிவந்த எந்தைபி ரானென்னை யாளுடை யென்னப்பனே. (15

என்னையப் பாவஞ்ச லென்பவ ரின்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண் டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
அன்னையொப் பாயெனக் கத்தனொப் பாயென் னரும்பொருளே. (16

பொருளே தமியேன் புகலிட மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண் டாய்மெய்ம்மை யார்விழுங்கும்
அருளே யணிபொழி லுத்தர கோசமங் கைக்கரசே
இருளே வெளியே யிகபர மாகி யிருந்தவனே. (17

இருந்தென்னை யாண்டு கொள்விற்றுக்கொளொற்றிவையென்னினல்லால்
விருந்தின னேனை விடுதிகண் டாய்மிக்க நஞ்சமுதா
அருந்தின னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப் பட்டு மடங்கினர்க்கே. (18

மடங்கவென் வல்வினைக் காட்டைநின் மன்னருட் டீக்கொளுவும்
விடங்கவென் றன்னை விடுதிகண் டாயென் பிறவியைவே
ரொடுங்களைந் தாண்டுகொ ளுத்தர கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுரித்தஞ்சுவித்தாய்வஞ்சிக் கொம்பினையே. (19

கொம்பரில் லாக்கொடி போலல மந்தனன் கோமளமே
வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர் நண்ணுகில்லா
உம்பருள் ளாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
அம்பர மேநில னேயனல் காலொடப் பானவனே. (20

ஆனைவெம் போரிற் குறுந்தூ றெனப்புல னலைப்புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண் டாய்வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை யுமமு தத்தையுமொத்
தூனையு மென்பினை யும்முருக் காநின்ற வொண்மையனே. (21

ஒண்மைய னேதிரு நீற்றையுத் தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண் டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென்றுஞ் சேயாய் பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை யாண்மைய னேயலிப்பெற்றியனே. (22

பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்றன்னைத் தாங்குந ரில்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின் றேனெனக் குள்ளவனே. (23

உள்ளன வேநிற்க இல்லன செய்யுமை யற்றுமனி
வெள்ளன லேனை விடுதிகண் டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய் புலனின்கட் போதலொட்டா
மெள்ளென வேமொய்க்கு நெய்க்குடந்தன்னை யெறும்பெனவே. (24

எறும்பிடை நாங்கூ ழெனப்புல னாலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர் வுற்றவ ருப்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே. (25

பெருநீ ரறச்சிறு மீன்துவண் டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண் டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுண் மலைச்சிறு தோணி வடிவின் வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை வானக்கொழுமணியே. (26

கொழுமணி யேர்நகை யார்கொங்கைக் குன்றிடைச் சென்றுகுன்றி
விழுமடி யேனை விடுதிகண் டாய்மெய்ம் முழுதுங்கம்பித்
தழுமடி யாரிடை யார்த்துவைத் தாட்கொண் டருளியென்னைக்
கழுமணி யேயின்னுங் காட்டுகண் டாய்நின் புலன்கழலே. (27

புலன்கடி கைப்பிக்க யானுந் திகைத்திங்கொர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனை விடுதிகண் டாய்விண்ணு மண்ணுமெல்லாங்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய் தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை யாயென் றொழுகுலமே. (28

குலங்களைந் தாய்களைந் தாயென்னைக் குற்றங்கொற் றச்சிலையாம்
விலங்கலெந் தாய்விட் டிடுதி கண்டாய்பொன்னின் மின்னுகொன்றை
அலங்கலந் தாமரை மேனியப் பாவொப் பிலாதவனே
மலங்களைந் தாற்சுழல் வன்தயி ரிற்பொரு மத்துறவே. (29

மத்துறு தண்தயி ரிற்புலன் தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட னாரச்செஞ் சாந்தணி சச்சையனே. (30

சச்சைய னேமிக்க தண்புனல் விண்கால் நிலநெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய னேயொண் படஅரவக்
கச்சைய னேகடந்தாய்தடந் தாள அடற்கரியே. (31

அடற்கரி போலும் புலன்களுக் கஞ்சி யழிந்தவென்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண் டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு தாக்குங் கறைக்கண்டனே. (32

கண்டது செய்து கருணைமட் டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண் டாய்நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போற் பணித்துப் பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெனந் தாய்களை யாய்களை யாய குதுகதுப்பே. (33

குதுகுதுப் பின்றிநின் றென்குறிப் பேசெய்து நின் குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப் பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே. (34

பரம்பர னேநின் பழவடி யாரொடு மென்படிறு
விரும்பர னேவிட் டிடுதிகண் டாய்மென் முயற்கறையின்
அரும்பர நேர்வைத் தணிந்தாய் பிறவியை வாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மன மஞ்சிப் பொதும்புறவே. (35

பொதும்புறு தீப்போற் புகைந்தெரி யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண் டாய்விரை யார்நறவந்
ததும்புமந் தாரத்திற் றாரம் பயின்றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தே னவிர்சடை வானத் தடலரைசே. (36

அரைசே யறியாச் சிறியேன் பிழைக்கஞ்ச லென்னினல்லால்
விரைசேர் முடியாய் விடுதிகண் டாய்வெண் ணகைக்கருங்கட்
டிரைசேர் மடந்தை மணந்த திருப்பொற்ப் பதப்புயங்கா
வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை தான்வந் தடர்வனவே. (37

அடர்புல னிற் பிரிந்தஞ்சி யஞ்சொனல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண் டாய்விரிந் தேயெரியுஞ்
சுடரனை யாய்சுடு காட்டர சேதொழும் பர்க்கமுதே
தொடர்வரி யாய்தமி யேன்றனி நீக்குந் தனித்துணையே. (38

தனித்துணை நீநிற்க யான்றருக் தித்தலை யானடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணை யேயென்றன் வாழ்முதலே யெனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்றுய ராக்கையின் றிண்வலையே. (39

வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியினொற்றைக்
கலைத்தலை யாய்கரு ணாகர னேகயி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாள்மண வாளவென் வாழ்முதலே. (40

முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந் நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண் டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்சிவ னேமுறை யோமுறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங் காவென் சிவகதியே. (41

கதியடி யேற்குன் கழல்தந் தருளவும் ஊன்கழியா
விதியடி யேனை விடுதிகண் டாய்வெண் டலைமுழையிற்
பதியுடை வாளரப் பார்த்திறை பைத்துச் சுருங்க அஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக் குஞ்சடை மன்னவனே. (42

மன்னவ னேயொன்று மாறறி யாச்சிறி யேன்மகிழ்ச்சி
மின்னவ னேவிட் டிடுதிகண் டாய்மிக்க வேதமெய்ந்நூல்
சொன்னவ னேசொற் கழிந்தவ னேகழி யாத்தொழும்பா
முன்னவ னேபின்னு மானவ னேயிம் முழுதையுமே. (43

முழுதயில் வேற்கண் ணியரென்னு மூரித் தழன்முழுகும்
விழுதனை யேனை விடுதிகண் டாய்நின் வெறிமலர்த்தாள்
தொழுதுசெல் வானற் றொழும்பரிற் கூட்டிடு சோத்தெம்பிரான்
பழுதுசெய் வேனை விடேலுடை யாயுன்னைப் பாடுவனே. (44

பாடிற் றிலேன்பணி யேன்மணி நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற் றிலேனை விடுதிகண் டாய்வியந் தாங்கலறித்
தேடிற் றிலேன்சிவ னெவ்விடத் தானெவர் கண்டனரென்
றோடிற் றிலேன்கிடந் துள்ளுரு கேனின் றுழைத்தனனே. (45

உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத் தீயினைப்பாய்
விழைதரு வேனை விடுதிகண் டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் றேய்மதியன்
பழைதரு மாபர னென்றென் றறைவன் பழிப்பினையே. (46

பழிப்பினின் பாதப் பழந்தொழும் பெய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண் டாய்வெண் மணிப்பணிலங்
கொழித்துமந் தாரமந் தாகினி நுந்துர்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே. (47

தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென்னி னுத்தர கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே. (48

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையு மீசற்கென்று
விரிப்பிப்ப னென்னை விடுதிகண் டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் றோலுடைப் பிச்சனஞ் சூண்பிச்ச னூர்ச்சுடுகாட்
டெரிப்பிச்ச னென்னையு மாளுடைப் பிச்சனென் றேசுவனே. (49

ஏசினும் யானுன்னை யேத்தினு மென்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பின்
தேசுடை யாயென்னை யாளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலமுண் டாயமு துண்ணக் கடையவனே. (50



தில்லையில் அருளிய

# திருப்பொன்னூசல்.

ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா

சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை யேறி யினிதமர்ந்து
நாரா யணனறியா நாண்மலர்த்தா ளடியேற்
கூராகத் தந்தருளு முத்தர கோசமங்கை
ஆரா வமுதி னருட்டா ளிணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூச லாடாமோ (1

மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்றங்கு தேவர்களுங் காணா மலரடிகள்
தேன்றங்குத் தித்தித் தமுதூறித் தான்றெளிந்தங்
கூன்றங்கி நின்றுருக்கு முத்தர கோசமங்கைக்
கோன்றங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூச லாடாமோ. (2

முன்னீறு மாதியு மில்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி யிமையோர்கள் தாம்நிற்பத்
தன்னீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி யுத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (3

நஞ்சமர் கண்டத்த னண்டத் தவர்நாதன்
மஞ்சுதோய் மாடமணி யுத்தர கோசமங்கை
அஞ்சொலாள் தன்னோடுங் கூடி யடியவர்கள்
நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்
புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூச லாடாமோ, (4

ஆனே அலியோ அரிவையோ என்றிருவர்
காணக் கடவுள் கருணையினாற் றேவர்குழாம்
நாணுமே யுய்யவாட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக வுண்டருளு முத்தர கோசமங்கைக்
கோனார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூச லாடாமோ. (5

மாதாடு பாகத்த னுத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையா னடியாருட்
கோதாட்டி நாயேனை யாட்கொண்டென் றொல்பிறவித்
தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பாற்
போதாடு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (6

உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் றன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி யாடு மணிமயில்போல்
என்னத்த னென்னையுமாட் கொண்டா னெழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (7

கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால வமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து
ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்
சீலந் திகழுந் திருவுத்தர கோசமங்கை
மாலுக் கரியானை வாயார நம்பாடிப்
பூலித் தகங்குழைந்து பொன்னூச லாடாமோ. (8

தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொள்வான்
பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பொன்முலையீர் பொன்னூச லாடாமோ (9

தில்லையில் அருளிய

## திருத்தசாங்கம்

தா தாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்
மா தாடும் பாகத்தன் வாழ்பதியென்–கோ தாட்டிப்
பத்தமெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடு
உத்தர கோசமங்கை யூர். (3

திருப்பெருந்துறையில் அருளிய

## திருப்பள்ளியெழுச்சி

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அதுபழச் சுவையென அமுதென அறிதற்
கரிதென எளிதென அமரரு மறியார்
இதுவவன் றிருவுரு இவனவ னெனவே
யெங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்

மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னு
எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே (7



உ
சிவமயம்.

# அருணகிரியார் திருப்புகழ்.

தத்தன தானதந்த தந்தன தானதந்தா
தத்தன தானதந்த தனதான.

வெற்பென வேயெழுந்து செப்பென வேதிரண்டு
மெத்தென மோடிகொண்ட தனமாதர்

மெய்ப்படு கோலமுங்கண் மைப்படு சாலமுஞ்செய்
வித்தையு மேநினைந்து மயலாகி

[1] அற்பக லாவலைந்து கற்பதெலாமுலைந்து
ளற்பமு மானமின்றி அழிவேனு!

அக்கினி ரூபமைந்த திர்த்திகை மாதர்தந்த
அற்புத பாலையுண்ட குமரேசா!

பொற்பதி காவலிந்தி ரற்குற வேலெறிந்து
பொய்ப்படு சூர்பிளந்த அதிதீரா!

[2] புட்பதி யேறுகொண்டல் அச்சுத னூர்மகிழ்ந்த
புத்தமிர் தானசெஞ்சொல் மருகோனே!

[3] உற்பல மோகொடுங்க ணைக்கிணை யோவெனுங்கண்
உத்தம தேவதந்தி புணர்மார்பா!

உத்தம மாவளங்கொள் உத்தரகோசமங்கை
உற்றினி தாவிருந்த பெருமாளே!

---

1. அல்பகல்=இராப்பகல்.
2. புள்பதி=பட்சியரசன் (கருடன்) 3) உற்பலம்=கருங்குவளை மலர்

உ

தத்தன தானந் தனதன தந்தத்
தத்தன தானத் தனதன தந்தத்
தத்தன தானத் தனதன தந்தத் தனதான.

கற்பக ஞானக் கடவுண்மு னண்டத்
திற் [1]புதசேனைக் கதிபதி யின்பக்
கட்கழை [2]பாகப்பமமுது வெண்சர்க்கரை பால்தேன்

கட்டிள நீர்முக் கனிபய றம்பொற்
றெப்பையி னேறிட்டருளிய தந்திக்
கட்டினை யாய்பொற் பதமதி றைஞ்சிப் பரியாய

பொற்[3]சிகி யாய்கொத் துருண்மணி தண்டைப்
பொற்சரி நாதப் பரிபுர என்றுப்
பொற்புற வோதிக் கசிவொடு சிந்தித் தினிதேயான்

பொற்புகழ் பாடிச் சிவபத மும்பெற்
றுப்பொருள் ஞானப்பெருவெளி யும்பெற்
றுப்புக லாகத் தமுதையு முண்டிட் டிடுவேனு!
[3]தெற்ப முளாகத் திரள்பரி யும்பற்

குப்பை களாகத் தசுரர்பி ணந்திக்
கெட்டையு மூடிக் குருதிகள் [4]மங்குற் செவையாகித்
திக்கய மாடச் சிலசில பம்பைத்

தத்தன தானத் தடுடுடு வெண்கச்
செப்பறை தாளத் தகுதொகு வென்கச் சிலபேரி

[5a]உற்பன மாகத் [6]தடிபடு [7]சம்பத்
தற்புத மாகத் தமரர்பு ரம்பெற்
றுட்செல்வ மேவிக் கனமலர் சிந்தத் தொடுவேலா!

உட்பொருள் ஞானக் குறமக ளும்பற்
சித்திரை நீடப் பரிமயில் முன்பெற்
றுத்தரகோசத் தலமுறை கந்தப் பெருமாளே

---

1. புத சேனை = தேவ சேனை. 2. பாகு அப்பம அமுது.
3. தெற்பம் = போர்ச்செருக்கு. 4. மங்குல் = திசை 5. சிகி = மயில்
5-a. உற்பனம் = தோற்றம். 6. தடி = மின்னல். 7. சம்பம் = இடி.

# திருவுத்தரகோசமங்கைத் தலபுராணம்

## பாயிரம்

### வாழ்த்து

வசையறுசுதி வடித்துநாத்தழும்பு மறையவர்வாழ்க வான்பொழிக
அசையாணிமிடற்ற வானிரைபொலிக வமரருமுனி வருஞ்சிறக்கத்
திசைநெடுஞ்சுவரிற் புகழ்ச்சுதை தீற்றுஞ்செய்யகோனரபதிவளர்க
விசைபடுதரங்க முடுத்தபார்கழைக விடைவலா னடியர்வாழியவே. (1

### கடவுள் வணக்கம்.

### ஆதிசிதம்பர சபா நடேசர்துதி.

பூமேவுமடற்கமலப் பொகுட்டுறையுமந்தணனும் பொலிவினோங்கித்
தேமேவுபசுந்துளவத் திருமாலுங்காண்பரிய செல்வரேனும்
பாமேவுபதஞ்சலியும் புலிப்பதனுங்கண்டுதினம் பணிந்துபோற்ற
மாமேவுமணிமன்று ணடர்புரிபொற்பதமிறைஞ்சி வழுத்கல் செய்வாம் (2

### சிவகாமசுந்தரி

உலகமுழுதும்பயந்துங் கன்னிமைநீங்கா திறைபாலுவந்துவைகி
மலகிலுயிர்க்கருள்சுரந்து பேரறமெண்ணான் கியற்றி யனைத்துங் காக்குந்
திலகநுதற்செங்கனிவாய் சிவகாமசுந்தரியாந் தேனைச்செம்பொன்
மலையரையன் குலவிளக்கை யிருள்தீரவெமதகத்துள் வைத்துவாழ்வாம்
(3

### மங்களநாதர்

ஒருபொருளாய்ப் பலவுருவா யொளியாகி யானந்தவுண்மையாகிக்
கருதரிதாய்த்தெரிவரிதாய்க் காரணகாரியங்கடந்த கருணையாகிப்
பொருளின் மறைக்கொழுந்தாகி யுபநிடதப்பொருளாகிப் புவனிபோற்ற
வருதிருவுத்தரகோசமங்கையர னடிக்கமலம் வணங்கல் செய்வாம். (4



கூத்தப்பெருமாள் 3’ 9½”
வருஷம் ஒருமுறை ஆருத்ரா தெரிசனத்தன்று புறப்பாடு.

### மங்களநாயகி

காரேறு கருங்குழலுந் திருநுதலுஞ்சுடரிலைவேற் கண்ணுங்கஞ்சத்
தாரேறுதிருமார்புங் கரும்புருவத்தடந்தோளுங் கருணைகாட்டி
நீரேறுசடாமவுலிப் பெருமான்றனொருபாக நீங்காதோங்கும்
வாரேறுபூண்முலையாண் மலர்ப்பதமுமெந்நாளும் வழுத்தல் செய்வாம். (5

### கற்பக விநாயகர்

தளராதபேரன்புத் தளைபிணித்தியோகமெனுந் தறியிற்சேர்த்தி
யுளமாயபெருங்கூடத் தணைத்தெனதென் கவளமளித்துவந்து போற்றி
வளையாழிமடையுடைந்த தெனக்கடாந் திறந்தொழுகமதமாறுத
துளையார்கைப்பொருப்பை மலைக்கொடிபயந்த கற்பகத்தைத்
தொழுதுவாழ்வாம். (6

### சுப்பிரமணியர்

வெள்ளிவரை நடப்பதெனப் பதம்பெயர்க்குநான்மருப்பு வேழமூர்ந்து
தள்ளருஞ்சீர்விண்ணரசு தலையெடுப்பக்கவிழிணர்மாத் தடிந்தவேலோன்
கொள்ளைவரிவண்டலம்புங் குழலெழில் சேர்குறமடந்தை கொங்கை
தோயுங்
கள்ளவிழ்தார்ச் செவ்வேள்தனடிபணிந்து பிறவிவனங்கடத்தல்
செய்வாம். (7

### திருஞான சம்பந்தர்

காரமணரிருட்குறும்பு கரந்தொளிப்பவிலங்குதிரைக் கடல்வாய்சூழ்ந்த
பாரடையநீற்றினொளி நிலவெறிப்பப் புகழ்நிலவுபரவாநிற்பச்
சீரளவுந்தமிழ்ப்பதிகத் தின்னமுதப்பொழியுமதிச் செல்வன்வான்றோய்
தாரணியும்பொழில்புடைசூழ் சண்பையர்கோன்பதகமலந் தலைமேற்
கொள்வாம். (8

## திருநாவுக்கரையர்

தொலையாதபவக்கடல் யாங்கடத்துமெனப் பிறர்க்குணர்ச் சொல்வார்
நிலையாதபுறச்சமயக்குறும்ப ரிறுதறப்பிணித்த நெடுங்கல்லோடு [போல
மலையாடுபெரும்பரவையமுந்தாதக்கன்மிதப்பா யாழிநீந்தித்
தலையாயபொருளுணர்ந்த வாகீசர்மலர்ச் சரணஞ்சரணமாதோ. (9

## திருநாவலூரர்

அனைத்துலகும் பணிகேட்பத் தனிமுதன்மைபூண்டுறையுமலகில்சோதி
கனைத்திருமுகுரற்றிரைந்த கவுஞெசிநோக்கசைந்தடையக் கழிமுப்பெய்தி
யெனக்கிவன்மற்றடியன் விலைக்கலங்காண்மினந்தணிரென்றீர்த்
தாட்கொண்ட
வினைப்பகைஞர்நாவலூர் நாவலர்தாட்டுணை துணையாவேட்டுமன்றே. (10

## திருவாதவூரர்

நிரைசிறந்த நெடுங்குடுமிப்பொலங்கிரியிற் கயலெழுது நிருப்னேவ
விரைசெல்வாம்பரிகொணர்ந்து வருகெனப்போய்ப் பொருள்கொடுபோய்
விழைவினெய்தித்
தரைவிளங்குப்பெருந்துறையிற் குருந்துறைமான் மழுக்கரந்த
தலைவற்போற்றி
யுரையிறந்தமெய்ப்பொருள்பெற் றுயர்ந்தோரைத்தாழ்ந்தவரை
யுளத்துள்வைப்பாம், (11

## இந்நூலாசிரியரதுகுரவர்

ஆசில்சீரகச்சமயக் கமலங்கள்வாய்திறப்ப வவிச்சையென்னு
முசுபேரிருள்சரப்பப் புறச்சமயக்குமுதங்கண் முகங்கள்கூப்பத்
தேசுலாஞ்சிவஞானச் சுடர்பரப்பி யிரவியெனத் திகழுற்தன்மை
மாசிலாமணிஞான சப்பந்தன் பூங்கமழல்கள் வணங்கல்செய்வாம். (12

## அவையடக்கம்

பரம்பரன் வகுத்த புராணமுவாறுட் பவுடியோத்தரத்துமுற்பாதத்
தருந்தவர்விழையுங் கேத்திரகண்டத் தணிபிறைச்சடையுமைக்களனுங்
கரங்களோர்நான்கு மணிப்பிரம்புழையுங் கணிச்சியுஞ் சுரிகையும்
படைத்து
நிரந்தரங்கயிலை காவல்பூண்டுறையு நெடுந்தகை நந்தியெம்
பெருமான் (13

அன்னவற்பழிச்சி வணங்கியைப் பொறியி னடத்துறும்பெரிசநற்குமாரன்
முன்னைநாள்வினவ நவின்றவாறெடுத்து முழுதுணர்சூதனென்
றுரைப்போன்
தன்னிகரிகந்த நைமிசவனத்துச் சவுனகன்முசலியோர் கேட்பப்
பின்னமின்றுரைத்த மங்கலபுரியின் பெருமையென் சிறுமையா
னுரைக்கேன். (14

மறுவறவிளங்குங்கனகமு மிருப்பு மலர்தலையுலகபொன் னென்னுஞ்
செறிகதிர்ப்பரிதி யல்லதில்விளக்குந் தீபமுஞ்சுட ரெனுமதுபோ
லறிவினிற்பழுத்த முதுமொழிப்புலவோ ராய்ந்தினிதுரைத்த தீந்தமிழும்
பொறியிலேன்விரகின் றுரைத்த புன்றமிழும் புராணமென்
றெடுத்துரைப்பதுவே. (15

## புராண வரலாறு

உவமையில்பரமஞான முணர்ந்திருநந்திமுன்னர்த்
தவமலிசனற்குமாரன் சாற்றுமெம்பெரும முன்னுட்
பவமறுவியாக்கிரபாதன் பதஞ்சலி கதை தொகுத்து
நவில யாங்கேட்டோ மின்னும் நவின்றபாதவத்தின் மேலோர். (16

எத்தலத்திருந்தாருண்மை எழுத்தஞ்சும்பிரணவத்தோ
டெத்தலத்திறைவன்கூறக் கேட்டனரெண்டோளண்ண
லெத்தலத்தவர்க்கு முன்னின் றின்னருள்புரிந்தான்முற்றுங்
கைத்தலக்கனியிற்கரண்போய் கழறுதி விரித்தீண்டென்ன. (17

மணிப்பிரம்பொலிப்ப விண்ணோர் மகுடகோடிகளினேற்றுந்
தணிப்பருப்புகழோனன்னோர் சரிதையிற்பிறவுங்கூட்டி
யுணர்த்தியவண்ணமிப்போ துரைப்பல்யானுங்கட்சென்னுப்
பணைத்தெழுமுலைப்பாந்தகன் பாங்குறைமுனிவர்க்கோதும். (18

விரையகிற்துறநிஞ்சந்தூர் வேழவெண்மருப்புமுத்துந்
திரைகரைபுரட்டும்வையைத் தென்கரைமருங்கில்யாரும்
பரவுதிப்பியமாய்த்தூய்தாய்ப் பாவங்கள் யாவும்போக்கு
முரைகெழுதலமொன்றுண்டாங் குந்தியிலுதித்தமேலோன். (19

## தலவிசேடம்.

இராசதமாசுதீர்ப்பா னெந்தையுள் ளுவக்கமாறு
பராவருந்தவஞ்செய்தானுற் பற்பலாயிரமாண்டேகத்
தராதலக் கீழிநின்றுந் தருமிராதந்தரப்பேர்
விராயகற்பத்திற்சோதி விட்டொளிரிலிங்கமொன்று. (20

முளைத்ததுமறைவலான்முன் முயன்றநற்றவத்தான்மேரு
வளைத்தவிற்றடக்கைவீரன் மற்றதனடுவட்டோன்றி
யளித்தனன்சிவஞானத்தோ டயர்வில்சாத்துவிகமெய்திக்
களித்தனனவனும்தன் கடிபொழிலுடுத்தமுதூர். (21

## வேறு

பிரமாபுரமென் றன்றுமுதற் பிறங்கிற்றுலகமீக்கூறச்
சரதமுணர்ந்தவியாதனு மச்சாத்விகத் தானத்தடைந்து
கரையில்சுருதிக் கதிகாரியாவான் கடவுள்வருடநூ
றனைவிழைந்துநனிநோற்ரு னடலேறுயர்ந்தோன்மகிழ்கூர்ந்து (22

வேதமனைத்தும் பொருள்விளங்க விளங்குமறிவு பணித்தனனப்
போதமுனியுங்களிப்பளம் பொதுநுமிலந்தைமுதல்வைகி
யோதுமறைகண்முழுதுமுணர்ந் துலவாவுண்மைக்கதிவழங்குந்
தீதிலருண்ஞானமும் பெற்றுன் சீவன்முத்தனுயினனுல். (23

அந்நாட்டொடங்கிநிலவலயத் தவ்வூர்வெதிரிகாரணிய
மென்னுநிற்ப விளங்கியதா லெதிரில்புலித்தாண்மாமுனியு
முன்னுவினை தீர்பதஞ்சலியு முடன்வந்தவட்சேர்ந்துணர்வுடையோர்
செந்நாத்தழும்புமஞ்செழுத்தின் சித்திவிழைந்துதவம் புரிந்தார். (24

நிலவுபொழியு முயற்கூடு நிமிர்புன்சடையிற் சுமந்தாடு
முலைவில்கருணைப் பெருமானு மூவகை சிறந்து வெளிநின்று
தலைமைபிரியாக் குடிலையொடு தன்பேரெழுத்தைந் தையுமுரைத்தா
னலைவில்கருத்தர் பெற்றுயர்ந்தாரவருட்புலித்தாண்மாமுனிவன். (25

வேறு

பின்னலஞ்சடைமுடிப் பிரானைவேண்டின
னென்னதுபெயரினு லிந்தவான்பதி
மன்னியவருள்கென வரதநல்கலா
லந்நகர்வியாக்கிர புரமென்றுயதே. (26

வேறு

வீதிதொறுமணிமாட மிடைந்தொளிரத் தலப்பெருமை
யோதிலதிசயமிகவுமுளது விழைந்தடைந்தோர்க்குத்
தீதிலருணெறியுணர்த்திச் சித்துநவாய்வைகுதலா
லாதிசிதம்பரமென்று மலர்தலைமானிலம்புகலும். (27

நணைக்கமலத் தவசிநந்த நான்முகத்தோன் கற்பத்து
மணைத்துலக மழிபோழ்து மழியாத தந்நகரம்
புனிற்றுமதிக்கண்ணியொடும் பூங்கொன்றைமுடிசூடி
யெனக்கினியானுவந்துறையு மிலிங்கங்கண்யாவையினும். (28

ஓரிரண்டுபாதாள்வாசியா யுறையுமிவற்
றோரிலிங்க மகிலேச முத்தரபாற்காசியிடத்
தோரிலிங்கங்கயிலாயந் தென்றிசைக்கணுரைத்தலத்
தோரிரண்டுதிருநகரு முயர்கதிவீடளிக்குமேல். (29

அப்பதிகட்கெஞ்ஞான்று மரிதுவமைமிகையில்லை
மெய்ப்புலவர்புகழ்ந்தேத்தும் வேகவதிவலப்பாலின்
மைப்படிதண் கடம்பவன மதுரைநனிசிறந்தோங்கு
முப்பதியின் றென்பாலின் யோசனையோரிரண்டளவில் (30

அறைகடல்சூழ்நிலமடந்தைக் காதாரவிலக்கணமாய்ச்
சிறையளிவீழ்பூம்படப்பைத் திருச்சுழிமா நகர்தோன்றும்
பிறையிலங்குசடைமுடியோன் பிரளயாகேசுரனென்
றுறையுமவணதன்குணபால் யோசனைநான்களவின் கண். (31

முந்துநாம்புகன்றுரைத்த முதுபதிமங்கலபுரியென்
றிந்தநாள்முவுலகு மெடுத்தியர்பவோங்கியது
வந்துளாரனைவோர்க்கு மங்கலமுற்றுந்தருமாற்
பைந்துழாய்விடைக்கொடியோன் பாங்கிருந்தமடக்கொடியும். (32

அங்கணர்க்கு மங்கலந் தந் தருளுதலாலெவ்வுயிரு
மங்கலதாவிநியொன்று வைகுவளவ்வுழியடைந்து
புங்கவருந்தபோதனராய்ப் பொலிந்த கவுதமன்முதல்
துங்கநெறிமுனிவரருந் தொலையாதபத்தியராய் (33

முத்திபராயணராகி முத்தலைவேற்படைதிரிக்குந்
கைத்தலனைவழிபட்டுக் கைதொழுதுபிறர்க்கெய்தா
மெய்த்திருஞானம்பெற்றார் வெவ்வினைமானுடர்க்கங்கண்
சித்துருவனுறையிலிங்க தெரிசினமற்றரிதன்றே. (34

சிற்பரனையோர்போது தெரிசித்தோரவ்வளவி
லற்புகழுத்தியையடைவ ரதுசரதப்பரத நவீல்
பொற்பதன்காதையையவினவிற் போகமு முத்தியுமளிக்கும்
பற்பலவாருயிர்கட்கும் பழமறையந்தணிர்கேண்மின், 35

சிரந்தையொலி யேழ்முழக்குஞ் செங்கையோன்கதைநவினைப்
பரந்தெழுவேட்கைபிரதனுற் பாக்கியசாலியரன்றே
வரந்தைவினைவினைதீர்ப்ப கதிசயநல்குவதனைத்துஞ்
சுரந்தவளப்பொலிதலத்தோர் தொல்கதையாப்புகழ்கிற்பாம். (36

பாயிரம் முற்றிற்று.

## முதலாவது

## வேதமித்திரன் சுவர்க்கமடைந்த அத்தியாயம்.

உலங்கெழுதிணிபுயத் துதியர்கோனுறை
நலங்கிளர்கேரள நாட்டில்வாழ்பவன்
குலம்பொலிபிருகுவின் குலத்திற்றோன்றிய
விலங்ககன்மார்பினன் வேதமித்திரன் (1)

விரிதருமறைபுகல் வேள்வியாற்றுதற்
குரிமையுலொருவனே யுறுதிதேர்கலா
னரிதயர்மகவினை யாற்றுவித்தலின்
மரபியல்வைதிக வழிவழீஇயனன் (2)

பெருவரையன்னதோர் பிரமராக்கத
வுருவுடையலகையா யுள்ளி லுள்ளமு
மெரிதருவிந்த வெற்பிடையருஞ்சுரத்
தருளிலிகாண்டலு மாவிவவ்வுவான். (3)

உலிதருகாலையி லூழ்வயத்தினல்
வழிவருசுருதிநூல் வாதம்வல்லவர்
மொழிதெரிபுராணமெய்ப் பொருளுமுற்றினர்
விழிமியகுணத்தின ரிருவர்வேதியர் (4)

கங்கைநீர்படிந்தது கவர்ந்த காவினர்
பொங்குசீர்வியாக்கிர பூரேசன்மாக்கதை
தங்களின்விளம்புபு வருநர்சார்வரும்
வெங்கடத்தனையனை விழியினேக்கினர் (5)

வெருவருமனத்தராய் விலங்கியாங்கொரு
தருமுதனின்றனர் தளர்ந்துதீப்பசிப்
பருவரலினைப்பினன் பாழிமொய்ம்புடைத்
திருவிலிகண்டுயிர் செகுக்குமிச்சையால். (6)

அன்னவர்மருங்குசென் றண்மினனவர்
பன்னுசீர்க்காதைபுன் செவியிற்பாய்தலுந்
தன்னுடனடுங்குபு தணியுந்தீத்தழ
லென்னவோர்கணப்பொழு தெல்லைநின்றனன். (7)

வேறு

அறந்தருகதைசிறு தங்கட்கேட்டலாற்
றுறந்துமுன்செய்வினைத் துரிசுங்கூற்றினு
மறம்புரியலகையின் வடிவுநீத்தனன்
பிறங்கொளிவிளங்குதே வுருவம்பெற்றனன். (8)

ஒல்லைதன்குலத்திய லுணர்வுமேயினன்
கொல்விகல்விடையுடைக் குழகன்மான்மியச்
சொல்லமுதனைச்செவித் துணைகொடுண்டன
னல்லறீர்ந்தனையவ ரடிவணங்கினன். (9)

சிற்றிலைவன்னியின் முதலிற்றீவினை
யற்றவன்கன்னலொன் றளவைநின்றனன்
மற்றவர்பார்த்தலு மறைவல்லாளர்க
ளுற்றனரற்புதம் பயமுமுற்றுளார். (10)

பிறையெயிற்றழல்விழிப் பிரம ராக்கதத்
திறலுடைவடிவமெத் தீங்கினெய்தினை
நிறையொளியுருவமீண் டியாதினேர்ந்தனை
முறைமையினடங்கலு மொழிதி நீயென. (11)

கேரளநாட்டினேன் கிளைமுந்நூலணி
யாரணர்குலத்துளே னுதிவேதமு
நேரகல்சாத்திர நிலையுமோர்ந்துளேன்
பாரகத் தருமகம் பலசெய்விப்பனால். (12)

யாகநல்வினைத்திறத் தியலுநிட்டையென்
பாகவூழ்வலியிரூற் பசும்பொன்வேட்கையா
லூகியாதொருமுறை யுணர்வுமாழ்கினே
னுகையால்வேத சாத்திரமொன்றுய்கிலான் (13)

விப்பிரனொருவனை வேட்பித்தேனவ
னெப்பருவேள்விமுற் றியபினெய்யென
வப்பெருங்கிருதுவி னழல்விடுத்தனன்
மைப்படுசிந்தையான் வறிதிருந்தனன். (14)

அந்தவல்வினைதொடர்ந் தங்குநீத்தலு
நைந்தழியிடும்பைசெய் நரகம்பற்பல
முந்தனுபவித்தனன் முடிவிலெய்தினேன்
வெந்திறலலகையின் மெய்யைமெய்யிலேன். (15)

ஒருபதினுயிர மாண்டுழன்றனன்
மருவினன்விந்திய வனத்தினித்தலைப்
பருகுதண்புனலுமுண் பதமும் பெற்றிலேன்
றிருகுவெஞ்சினத்தோடு வேட்கைதீர்த்திலேன். (16)

இத்துணைக்காலமு மெளியற்கோர்யுக
மொத்துளதோர்கண முரைப்பதென்பிற
வத்தகுபரீக்ஷையா லளந்திடாதுதன்
கைத்தலத்தடைபொருள் கவருங்காதலால். (17)

உரனிலாவொருவனை யொருவன்வேட்பித்தாற்
பிரமராக்ஷதவுருப் பெறுதறிண்ணமென்
றரவநான்மறைகளு மறையுமம்மறை
விரவுவாதியர்களும், விளம்புவாரரோ. (18)

சொற்றதுமுழுவதுந் துணியுங்காட்சியிற்
பெற்றனுபவித்துளேன் பிழையில்கொள்கையீ
ரிற்றைஞான்றும்மையா னெதிர்தலாலிணை
மற்றிலான்வியாக்கிர புரியின்மான்மியம், (19)

நுங்கள் வாய்க்கேட்டலா னுவல்கணத்திடை
யிங்குவீடடைந்தன னிளநிலாத்தவழ்
கங்கைவேணியனகர்க் காதையெவ்வயிற்
றங்குபுகேட்பினும் பலமித்தன்மைத்தே. (20)

அப்பதிவதியுனர்க் கறைதல்வேண்டுமோ
மெய்ப்பயன்சிறியனுல் விரித்தலொல்லுமோ
செப்பரிதியாண்டுமத் திருநகர்க்கணே
யொப்பிலந்தணர்வரைந் துறைதல்சீரிதே (21)

வேறு

அங்கிதீர்த்தத்திளுடலும் வியாக்கிரபுரிவாழ்
மங்கைபாகனைக்காண்டலு மத்தலவரைப்பிற
றங்குவாசமுமெவர்க்கெய்துந் தருமத்தின் விளைவாற்
பொங்குநீர்நிலத் தவரதிபாக்கியர்போலும். (22)

உவவுநாண்மதியனந்தகோடிகள் குழீஇயொன்று
யவனிவாய்க்கிடந்தகல் விசும்பளாவியதனைத்தாய்த்
தவளநீற்றொளிதூத்துகில் பொதிந்தென்த்தயங்கும்
பவளவெற்புறைகயிலைமால் வரையின்மேற்பயில்வார். (23)

ஈண்டுமேலவர்க் காண்பயனெதிர்புலனுக
காண்டலாயினதியாவர்க்கும் பெரியவர்க்கலத்தல்
வேண்டுஞ்செல்வங்க ளனைத்தையுந்தருமெனமேளுட்
பூண்டநூல்களிற் கேட்டதும்பலித்ததிப்போது (24)

அறைந்தயாவையு முண்மையேநீவிராண்டடைமின்
சிறந்தபார்ப்பதி மங்களபுரமெனத்திசைபோய்
நிறைந்தசீர்நிருத் தாம்பரமென்னவும்நிலவிக்
கறங்குதண்புனற் றீர்த்தமூன்றொடுவளங்கவினி. (25)

சவிதுளும்பரதன சபையுடையதுத்தலனி
லவிரொளிப்பொலன் விமானமூர்ந்தாண்டுதோறடைந்து
கவையடிக்குவிதிமில் விடைக்கிங்களிற்கதிர்கால்
சவியுடைக்கலைநிறை தினத்தறநெறிதழைப்ப. (26)

மும்மையாகியதீர்த்தத்து மூழ்குவல்யானும்
எம்மையாண்மங்க லோச்சுரற்றிருமுனீசானத்
தம்மலர்த்தட மக்கினிதீர்த்தமத்தீர்த்த
மெய்ப்மையான்வெளி தோற்றலாலெவற்றினும்விசேடம் (27)

முகைமுறுக்குடைந்தொழுகு தேனுண்டளிமூசுந்
தகையலர்க்கொன்றை தம்பிரான்சந்நிதிக்குணபாற்
பகலலர்த்துதண்டாமரைத் தொகுயாற்பயின்று
திகழ்வதோர்தடம் பிரமதீர்த்தப்பெயர்செல்ல (28)

கமலயோனியா லன்றிராதந்தரகற்பத்
தமைவதப்புனிதப் புனலாதலாலப்பேர்த்
திமையவில்லிதன் வடபுலத்திறையவீசானத்
துமைவகுத்ததம்பிரண்டிடைக் கழியினென்றுளதால். (29

தெளிபுனற்சதா சீதளதீர்ந்தமென்றதனு
லொளிவளைக்கையுஞ் சீதளையெனும்பெயருற்றுள்
நளிர்நடத்ததன் கீழ்கரைநாமமங்கலையாய்க்
களியுடைப்பெருங் காளிவைகுவள் புறங்காக்கும். (30

அனையதீர்த்தங்கண் மூன்றினுமாடன்மீப்புகல்வ
ரெனைவகைப்புராணங்களு முணர்ந்தவரென்னுக்
கனல்விழிக்கொடும் பேயுருத்துறந்தலர்கதிர்போற்
புனையுந்தேவுருப் பெற்றவன்புக்கனன்சுவர்க்கம். (31

புனிததீர்த்தயாத்திரை பரமெனக்கொடுபோது
முனிவரோரிருவரு மவன்மொழிந்தவைகேளா
வினிதுவந்தனையோ னுழைநிகழந்ததுமெண்ணுக்
கனியும்பத்தியி னதிகராய்க்கங்குலும்பகலும். (32

.அன்னகாதையே விளம்புபு செலவயர்ந் தடைந்தார்
பொன்னின்மூதெயில் விளிம்புசூழ் வியாக்கிரபுரிவாய்ப்
பன்னுமூவகைத் தீர்த்தமும் விதிப்படி படிந்தா
ரென்னைமுன்னர் நின்றியன்ற தானமும் பிறர்க்கீந்தார் (33

கங்கைசூடருட்கடலெதிர் கண்டுகண்களித்துப்
பொங்குமன்பொடு தொழுதனர்பழிச்சினர் புகழ்ந்தார்
அங்கண்வானுலகணைந்த வேதியன்கதையாங்கண்
தங்குநான்மறைமுனிவரர்க் கொருங்குசாற்றினரால். (34

மூன்றுதிங்களினள வவணுறைந்தனர்முனியா
தான்றதம்மனத் தியலுமிச்சையின் வழியகன்றார்
சான்றகேள்வியீ ரின்னமா நகர்த்தனிப்பெருமை
யான்றுணிந்து முற்றுரைப்பதெங்ஙனஞ் சிறிதிசைக்கேன். (35

இயற்கைமாந்தர் கண்ணிமைப்பள வாகுதலிமைக்குஞ்
செயற்கைவேலேயிற் பாகமாகுதல் செழும்புனல்பாய்
வயற்படப்பைசூ ழூத்தலத்தியாவரேவதிவார்
புயற்களத்திறை நிறைவிலொன்ருயவர் பொலிவார். (36

ஐயமின்றிதற்கைகயமேற் றுலகுடனுள்வோன்
செய்யதாள்களிற் போந்தொடுங்கினனெத் தெளிமின்
மெய்கொள்சீர்க்கதை கேட்பினுஞ்மிறெழுந் தொலிக்கும்
பொய்கைமாநகர் நோக்கினுமக்கணப் போதில். (37

வேறு

ஐந்துகூற்றுமா பாதகராயினும்
பந்தநீடுறு பாதகராயினுஞ்
சிந்தைவெவ்வினே யாவையுஞ்சிந்துவ
ருய்ந்துவாழ்வ ருரைத்ததுதிண்ணமால்; (38)

பயிலுமப்பதி பஞ்சக்குரோசமாஞ்
செயிரிலேந்தெழுத் தின்சித்திநல்கலா
லியல்வலோர்சித்த க்ஷேத்திரமென்பரா
லயருந்தன்ம மணுவரைமேருவே. (39

அயிந்திராதியெண் டிக்கினுமம்புமுன்
றியன்றவீழ்ச்சி யிடைத்திசைகாவலர்
வியந்திறைஞ்சு மிலிங்கமம்மேலவ
ருயர்ந்தபேரொடு நாவிரண்டுள்ளன. (40

முந்துபூருவதிக்கின் மிழவுத்தோ
ளிந்திரன்வழிபட்டதிளந்தளிர்
அந்தண்மல்லிகையாய்கொடிசுற்றிமுன்
தந்தசெவ்விந்தழும்பறிசின்னமாய். (41

திகழ்ந்துதோன்றுந்தெரிசனமாத்திரத்
தகன்றதிப்பியஞானமளித்திடும்
புகன்றதன்றிருமுன்னர்ப்புணரிசூழ்
சகந்தழைப்பச்சதமகன்கண்டது. (42

நலங்கிளர்ந்தொத்தநாற்கோணுடையதாய்
விலங்கும்புள்ளுமனேகவிதத்தன
கலந்துகொட்பக் கடிகமழ்பல்பொழில்
வலந்துசார்வதியென்னும் பெயரதாய். (43

மணிகொழித்தனன்வார்புனற்றீர்த்தமொன்
றணியனைத்தும்படைத்துளதன்புகூர்ந்
திணையிலத்தலத்தெய்தி நீர்மூழ்குநர்
துணியினிந்திரதீர்த்தந்துளைந்துமுன். (44

உடலக்கண்ணனுடன்சசிதேவியை
யடைவிற்றூழ்ந்து வணக்கியனுக்கைபெற்
றிடரறுக்குநற்றீர்த்தங்களியாவையுங்
கடவர்மூழ்கக்கதிவிழைகொள்கையார். (45

பாகசாதனப்பண்ணவர்கோன்றினத்
தேகுதிங்கடொறுமிந்திரதடத்
தாகந்தண்ணெனவண்மகிழ்ந்தாடுவார்
போகமுற்றும்பொருவிலநண்ணுவார். (16

ஆங்கணெய்திமார்க் கண்டனனேகநாள்
நீங்கநீங்கலனித்திரலிங்கமா
யோங்குமாத வீசன்முன்னுரைத்திறப்
ப்ாங்கினைந்தெழுத் தும்பரிந்தோதுபு. (47

காயொளிச்செங் கனலின்வடிவமா
யேயதானவி லிங்கமெனும்பெயர்
மேயநங்கள் வியாக்கிரநா தனைப்
போயிறைஞ்சுவ நண்பகற்போதெலாம். (48

பிருங்கியென்னும் பெயருடையோனுமாங்
கருந்தவம்புரிந் தம்பிகைபாகனைத்
திருந்தவர்ச்சனை செய்துமுன்பொய்யுட
லிருந்துமுத்த னெனநிகழ்ந்தானரோ, (49

ஆக பாயிரம் உள்பட திருவிருத்தம் 85.
முதலாவது வேதமித்திரன் சுவர்க்கமடைந்த அத்தியாயம்
முற்றிற்று.

———

## இரண்டாவது

## கந்தருவகன்னியர் பிரமசாபந்தீர்த்த அத்தியாயம்.

திருமகிழ்ந்திறை கொண்ட சாங்கல தேயமொன்றுளது தேயமப்
பெருவளங்கெழு நாட்டகத்திடை பெருகுதீம்புன லிடையரு
திருதமுன்றேடு முன்றினும்பணை யிணர்தழைத்தலர் கமழ்தருந்
தருவினப்பல புடைமிடைந்தது கருமமோர்வடி வாயது. (1

நலமலிந்தது சோணபத்திரை யென்னு நன்னதி யொன்றதன்
குலவுதென்கரை யிற்சிறந்தது கொள்கைதூய சுமந்துவென்
றுலகுடன்புக ழிருடிவைகிய விறையுளத்தலை யன்னவ
னிலவுதொல்குல னிற்சனித்தவ னீதியானிலை பேதியான். (2

ஒருவனந்தணன் யோகமித்திர னென்றபேருடையோனுளன்
பிரமசாரி நயிட்டிகன்விரதன் பெருந்தவ முயல்பவன்
முரிதிரைப்புனன் மும்மைவேலையு மூழ்குவன்மொழி சமிதையிற்
புரிவனுகுதி நவில்வனுன்மறை போதகன்பணி காதலன். (3

ஐயமுண்பது சாந்திராயண மாதிநோன்பு நிகழ்த்துவன்
மையிலர்பொறி யோடுமுட்கர ணங்கடன்வய மாக்குவ
னுய்யுநன்னெறி யாயயோக வழிக்கருத்தினன் யோகநூன்
மெய்யுணர்ந்தவன் மெய்யினின்றெழு காலைநிற்ப விலக்குவன். (4

ஆதனங்கள் சுவத்திகஞ்சுரி சங்கமாமயில் குக்குட
மோதுகேமன் மடங்கல்பங்கயம் யோககண்டொடு முசலமாம்
பேதமுற்பிற வும்பயின்றிடை பிங்கலைப்பெயர் நாடியிற்
போதிரேசக பூரகங்கள் புரிந்துதுர்பகமுஞ் செய்வான். (5

இன்னதன்மைய யோகியற்றின ரெழுகமேல்வையின் யாழ்வலோ
னர்மனைங்கம ழியாகனென்பவ னல்குமோல்கு நுணங்கிடைக்
சன்னிமார்விழி வேலெறிந்துயிர் கவருமோகினி யாவினர்
மன்மதன் படையாயினர் மதனுகமத்துறை போயினர். (6

வனத்திலாடல் குறித்தெழுந்து மகிழ்ந்துசெல்பவர் செல்வழி
முனைத்தமுழ்வலி யாலடைந்தனர் முனிவனுச்சிர மந்திரித்
தெனைத்துநோக்ககி லாமல்யோகி லிருந்ததிண்ணிலை யறிஞனைக்
கனைத்துவண்டிமிர்பொம்மலோதியர் கண்டனர் நகைகொண்டனர். (7

முற்றுநீக்துறை பெருமைதேர்ந்ததும் முகிழ்நகைத்துவரிதழ்நலார்
பற்றுகாமவெந் தீச்சுடச்சுடப் படுதுயர்க்கடல் வீழ்ந்தனர்
சுற்றினுர்நிறை நாணழிந்தனர் துணைவிமார்நுமக் கியாமெனு
வுற்றணைந்துபன் முறைவனைக்கையா லொருவர்போன்றுடன்
றழுவினுர். (8

சேர்ந்துபற்பல விகாரபேத படுத்தடுத்தனர் செய்யவு
மோர்ந்திலன்புலன் வேறுபட்டில னேடரிக்கய லுண்கணுர்
சார்ந்திழைத்திடு மிழிவினுன்முது தவநெறிக்கடை தடையினைக்
கூர்ந்தசிந்தையின் முன்னருன்னுபு கோதறுங்குண மாதவன். (9

இவணெருங்கி வனைத்தமாதரை யெங்கனர்விடு வித்துமென்
றவலமிக்கல மந்துபின்ன ரகத்திலோர்வழி யெண்ணினன்
கவையடிக்கழுதாகுகென்று கறுத்துடன்றுசபித்தனன்
றவமுஞற்றுர வோற்பிழைத்திடு சாபமெய்திய தையலார். (10

ஆங்கணைம்பொறி வென்ற வீரனை யடிவணங்கி யொடுங்கிநின்
றோங்கதர்முயி ருய்யுமாறுரை யாடுவாருயி ரியாவையு
மோங்கவின்னருள் புரிதயாபர வுயர்குலத்தி லுயர்ந்தவ
தீங்கில்கொள்கையின் முனிகள்புங்கவ சிறியரேமறியாமையால். (11

யாதுசெய்தன மதுபொறுத்தருள் யாங்கணின் பரிசாரக
ராதுமென்ன முனிச்சயித்தலி னம்பொரைந்துடை வில்லியார்
மோதுபோரி லுடைந்துநின் னுழை துன்னினர்முயல் தவநெறிக்
கேதமெய்து மெனக்குறித்தனை யெம்மையின்று சபித்தனை. (12

நின்னலர்ப் பதமிசைவிழுந்தன நிறைபுரிந் தெழுவிரகநோ
பின்னலுற்றதகற்றியெம்முள மெண்ணுமாறு நிரப்புவாய்
நன்னரின்னிசை யாழ்வலோர் மடவார்கள் யாமொருநீநரன்
பன்னுநான் மறையோன் மகன் பயிலேது வின்றி யோருழினுல். (13

ஆதரித்தன முன்னையூழ்வலி யார்தடுப்ப ருயிர்க்கெலாம்
பூதலத்துறை பெரியர்கண்ணளி புரிவதல்லது முனிவரோ
காதலித்து வரித்துவந்தடை கன்னியர்க் கருளாதவர்க்
கோதுநூல் பலவும்பெரும் புகருண்டெனத் துணிகிற்றவே. (14

புளிநரம்புளர் வீணைவல்லவர் மகளிர்யாம் புவிவானவர்
குரிசிலாதலின் யாழினெர்மண விதியினெம் மொடுகூடுவாய்
வருவதோர் பழுதின்றுமன்றன் மறுத்தியேலுடன் மடிதுமென்
றுருவவெள் வளையார்களித் தகமுரைதெரிந்து புகன்றனர். (15

தெள்ளியோனது கேட்டுவெவ்விய சினமொழிந் தருளுடையனுய்
பிள்ளையன்னமன் னிர்களிரிவண் பெரிதகிக்கிரமஞ்செய்தீ
ருள்ளுசாப மடைந்தநீரொழி யாதுழப்பது திண்ணமால்
விள்ளுமோநவில் பிரமசாபமெவற்றினும்மெறும் மிக்கதே. (16

நயந்துபின்ன ருரைத்தலிற்சில நாள்கழித்திடு சாபமும்
பெயர்ந்துபோக விடுப்பனீவிர்கள் பேயுருக்கொடு சேன்மினம்
வயங்குபொன்னேடுமணிகொழித்தெறி வைகையாற்றது தென்கரைப்
பயன்படும்பல்வளர்த்ததோர்பதி பதியனைத்தினுவிழுமிது. (17

வெகிரிகாரணியம்பிதாமகன்வீடு வேலையுமழிவிலா
ததனின் மங்களதாவினிப் பெயரன்னைமின்னுமிழ்வேலவன்
மதுகைமொய்ம்புடை நந்திமாறில் கணங்களோடுமகிழ்ச்சிகூர்ந்
தெதிரிலெந்தைவியாக்கிரேசனிருக்குமத்தலையெய்துவீர். (18

வேறு

யாழார்மொழியீரத்தலத்தி லியானுஞ்பிரமசரியைமுடித்
தூழானும்மைமணர்புரிவ னெறிக வலையெனவுரைத்துக்
காழார்மிடற்றேன்பரிபுரச் செங்கமலமிதயகமலத்திற்
சூழாவெழுந்தான்பொழிக்குறுர்பு தொலைத்தஞானச்சுடர்வாளோன். (19

திருந்தும்புனிதநீர்குடையச் செல்கேனென்றுமொழிபோக்கிப்
பரிந்துபயின்றும்பிறர்க்குரைத்தும் பன்னூற்றைறுயுநிறைபுலவோர்
வருந்திவடித்துத்தொடுத்தெடுத்த மதுரத்தமிழ்போற்றிசைதோறும்
விரிந்துகமழ்பூந்தண்டலைசூழ் வெதிரிவனத்திற் சென்றணைந்தான். (20

பிறழ்பற்பசுவாயுலறுகுழற் பிணர்மோட்டலகைபுருவினரா
யறிவுகுடிபோய்மருண்டொழுகு மந்தீங்கிளவிமடவாருங்
குறைவின்றேராண்டகன்றதற்பின் குறித்துமுனிவோனுரைமனங்கொண்
டெறிவாட்பரிதிபுடைவிலங்கு மெயில்சூழ்வெதிரிவனத்தடைந்தார். (21

எழுதாக்கிளவிமறைமுழுது மீனத்தென்றுணர்ந்தவரவோனும்
பொழிநீர்ப்பிரமதீர்த்திற் புக்குமுழ்கிவிதிமுறையின்
வழுவாவண்ணநித்தலுஞ்செய் கண்மமுடித்துவானந்தோய்ந்
தொழுகுபொலன்கோபுரத்திடப்பாலொருகோட்டிபத்தையடிதொழுது. (22

அணிகோயிலினுட்புகுந்திமையோ ராவிகுழைப்பவிடமுண்ட
மணிபோன்மிடற்றுத்தென்னமுதை வணங்கிமும்மைவலஞ்செய்து
திணிதோணந்திமுதல்கடைகாப்போரைட் பணிந்துதிங்கண்முடிப்
பணியாபரணனெதிர்நின்று பலகால்வேதத்துதியெடுத்து. (23

மாறுவநுக்கைகொடுபெயர்ந்து வரித்தேனலம்பநறவுடைந்து
சேருர்கமலத்தயன்படைத்த திருத்தநீர்குண்டிகைமுகந்து
நீருடமுகனெழுத்தைந்து நெறியாலபிமந்திரித்துநிலை
வேருயுழலுங்கழுதினத்தை விழித்தப்புனலாற்புரோக்கித்தான். (24

இறைவனருளாலருயிர்மறைப்போ டிருளென்றைந்துபொருளாகி
நிறைமந்திரத்தானனமுஞ்செய் வித்தானிகழத்தொழிலீரண்டின்
முறையினலகைநிலைநீத்கார் முன்னைத்தமதுவடிவடைந்தார்
பிறைகண்டனை யதிலகநுதற் பிணைபோனெடுங்கட்பெய்வளையார். (25

நாதவதிப்பேரணங்கினுட னம்பனடியையத்தொழுதிறைஞ்சிப்
போதநிரம்புமுனிவரர்கள் புவிவானவர்தம்பதம்பணிந்து
சீதநிலவுகதிருரிஞ்சுஞ் செம்பொன்னெயில்சூழந்நகரில்
வேதவிதியாலன்னவர்தோள் வேட்டான்யோகமித்திரனே. (26

குழகன்கோட்டத்தென்கீழ்பாற் குரோசபாகத்தளவையின்க
ணழகிதாயோராச்சிரம மமைத்தாருயிர்போற்கொழுநனே
தொழுதெய்வதமென்றிட்டிடையார் துணிந்துபரிசாரகஞ்செய்தார்
மழவெள்விடையோர்பூசித்து வதிந்தார்சின்னுளிடைநடப்ப. (27

புரிமென்குழலும்பணிமுலையும் பொருக்கலாற்ருவிடுகிடையார்
கரியமிடற்றுச் செஞ்சுடரைக் கைகள்கூப்பி யிரந்தெமது
துரிதமனைத்தும்போக்குதலாற் றுரிதாபகனென்றுன்னுமம்
பெரிதுநிகழ்தல்வேண்டுமெனப்பின்ருழ்சடையோனதுநேர்ந்தான். (28

வையம்பயந்தசிற்றுதர மலைப்பூங்கொடியும்வடிக்கண்ணு
ரையகமழுநறுமலர்க்கொண் டருச்சித்தமையாலன்னோர்க
ளுய்யவரந் தந்தெண்டிசையு முலகரேழுங்கிளர்ந்துரைப்பப்
பொய்யில்சுருதிபுகழ்தன்பேர் புட்பதனியென்ருயினளால். (29

ஆயும்பொருளுன்மறைவடித்தோ னங்கிதீர்த்தப்புனல்வடித்துத்
தோயங்கமழவிரையூட்டித் தொகுவாய்க்கடங்களொருநூற்ரு
லேயுநெறியான்முப்போது மிறையோற்காட்டிவைகல்தொறும்
நேயம்பெருகவழிபட்டு நெடுநாளாங்குவைகினுன் (30

வேறு

யாவனொருவ னோர்சடமுக் குடமைங்குடமேழ்குடமாத
லோவில்சுடர்ப்பாவகதீர்த்தத் தொளிவெண்டுகிலின்வடித்தெடுத்துத்
தூவெண்பொடியோன்முடிக்காட்டு மவனுத்தமனத்தொழிற்பயனைப்
பாவைபாகனுணர்வதலால் யாரேதுணிந்துபகர்கிற்பார். (31

நவிலுமறையந்தணர் நறும்புனல் கொடாட்டி
னவபிருதநானமுள ராய்நுகர்வர் போகம்
பலனுவகைசெய்யநா பாலரது செய்யிற்
புவன்முழுதாள்வரொளிர் பொன்முடிக விந்து. (32

பிறதமவெனப்பெரிது பேணி யியல்கின்ற
வறவினைவயிச்சியர்க ளடைவர் பொருளீட்ட
முறையினவர் பின்மொழியு முதறிவின்மாந்த
ருறுகண்வினை துன்பமுழ வார்பெறுவ ரின்பம். (33

ஞெண்டிறுதிமீனமுத னிச்சநறை வேருட்
கொண்டுகமழ்தண்புனல் கொழுங்கனிகொள்சாற்ருே
டண்டர்பெருமானையினி தாட்டியருள்வித்தான்
மண்டுபவநூறுதொடர் குன்மநிலைமாறும். (34

நுழைமயிரொழித்திழை நுணங்குதுகில்பட்டும்
பழமறைமுதற்கதவும் பண்பரெவரேனு
மொழுகொளிதுளுர்புபொல னுடையுடையோரா
யழகுகிளரெந்லை தபுவ னத்தமர்வர்பன்னுள் (35

குடப்புரைமடிக்கனை குரற்சுரபிகன்றே
டடுர்பணிசடைக்கட வு ளாடியகொடுப்போர்
விடுந்தகாமயிர்த்தொகையின் மிக்கபலயாண்டு
நடர்புரி பிரானுலகி னண்ணியுறைகிற்பார். (36

இடக்கையதிர்பேரியொலி காளமிவைமுதல
வுடைத்தொழினடப்பநிகழ் வித்தவர்தம்முள்ளத்
தடைத்தவிழைவின்படி யடைந்துகளிகூரத்
தடக்கபிலையாதிபத மெய்துபுசரிப்பார். (37

அன்னியதலத்திடையமர்ந்தவருநித்தம்
பொன்னெயில்வியாக்கிர புரத்திசையைநோக்கி
யுன்னுபுவலந்துதொழி னுண்டுபரிவேள்விப்
பன்னுபலனவ்வளவை பல்வினையுநீங்கும். (38

மங்களபுரேசனை வணங்கியயனுட்டிற்
றங்களுயிர்வீடுனர் தழற்கணுதலோன்வா
முங்கணுலகத்தலைதல் திண்ணமவண்வைகும்
பொங்குபுகழுத்தமர் திறப்புகல்வதென்னே. (39

சேண்டொடநிவந்தசிக ரத்துருவுசேணிற்
காண்டலுமிறைஞ்சுநர் தமைச்சிறிதுகாண்போர்
பூண்டவினைதீர்வதுமெய் போகமொடுவீடு
வேண்டுநர்களத்தலை விழைந்துறைதல்வேண்டும்.

**இரண்டாவது கந்தருவகன்னியா பிரமசாபம் தீர்த்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆக அத்தியாயம் (2) க்கு திருவிருத்தம் 125.

## மூன்ருவது.

## ஐந்தெழுத்துரைப்போர் விபூதிருத் திராட்சந்தரிப்போர் பேறுரைத்த அத்தியாயம்.

வள்ளவாய்க்கமலந்தோறு மடநடைக்குருகுசெப்ப
வெள்ளநீர்க்கிடக்கைசூழும் வியாக்கிரபுரியின்வைகிக்
கள்ளருத்துணர்ப்பூங்கொன்றைக் கண்ணுதலெழுத்தோரைந்து
முள்ளவாய்க்குழைந்தின்பூற வுரைப்பவர்பேறுசொல்கேன் (1

பிறங்கொளிக்குடிலையென்னும் பிரணவமுன்னர்த்தாகச்
சிறந்தரவொலியிற்கூடித் திகழுமந்திரமுலத்தை
யறங்கரைகுரவன்வாய்க்கேட் டக்கநன்மணிமெய்பூண்டு
நிறங்கிளர்வெண்ணீருடி நியாதமுமுறையினுற்றி. (2

தெரியலர்புரங்கண்மூன்றுஞ் சிவப்பவெண்முறுவல்கோட்டுங்
குரிசில்சந்நிதியினேர்பாற் கொடுவரிப்புலியின்பச்சை
கரியமானுரிவைமென்ருேல் கம்பளர்பலகைதூசோ
டுரியவாதனவிசேடத் தொன்றினிலினிதமர்ந்து. (3

உருத்திகழக்கமாத லொளிர்குசைக்கிரந்தியாதல்
மருத்தவல்புண்டரீக மணியாதல்படிகமாதல்
பொருந்தியவொழுங்குவாய்த்த புத்திரதீபியாதல்
நிருத்தகுபவளமாதல் செபவடர்வலக்கைசேர்த்தி. (4

தாயினுமினியமுர்த்தி தனதடிதியானித்தன்பா
லாயிரத்தெட்டுநூற்றெட் டிருபத்தெட்டுருவெற்று
ளேயினவரைந்துகொண்டாங் கிடையிலாவித்தலாதி
தீயனபுகாதுமும்மைத் திறத்தினிலொருமைபற்றி (5

செபிப்பவன் யாவனேனு மவன்சிவ வடிவேயாவன்
புவித்தலை யனையோற்காணிற் போக்கருந்துரிதநீங்குந்
தவப்பயின்றங்கமோடு சதுர்மறையுணர்ந்தபேறு
நிவப்புடைடைகுன்றேய்ப்ப நிதிபொழிபயனுமெய்தும். (6

பல்பயிர்விளைபொற்பூமி பணித்தடைபலனுங்கூட்டுஞ்
செல்பரிபுரவித்திண்டேர் சிறியகட்பெருங்கைவேழ
மல்குபாற்கபிலைநல்லான் மதரரித்தடங்கட்கன்னி
நல்குபேறனைத்துமோர்கா னவிலசெபமளிக்குமன்றே. (7

தேசிகன்விதியிற்கூறச் செவிநுழைந்திதயம்புக்கா
லாசிலைந்தெழுத்துப்பெற்றோ ருருத்திரனையமின்று
பூசுரன்வேந்தனுய்கன் பின்னவன்பொன்னனுருங்
காரைபோன்மிடற்றோனுமங் கழறுதற்குரியராவார். (8

பலபவத்தறங்களீட்டிப் பயன்படுசித்தியெய்தி
யலர்தலையுலகிற்றோன்று மருளுடை மாந்தார்க்கெல்லா
நிலவொளிபழுத்தநீற்றி னிகரிலைந்தெழுத்தினெம்மான்
மலர்விழிபணியிற்பத்தி வரும்வராதொழிந்தோர்க்கென்றும். (9

செற்றமும் விழைவுநீத்துச் சிவனடிக்கன்புபூண்டோர்
முற்றருந்தவத்தால்யாவர் குலத்திடைமுளைத்தாரேனு
மற்றவர்மரபினுள்ளோ ரனைவருமதியம்பூத்த
கற்றைவார்சடைக்காட்டெண்டோட் கடவுள்தன்புரத்திற்சேர்வார். (10

வேறு

சிவயாடித்திலக்கினிகோத் திரத்தில்வைதிகாக்கினியி
னவைதீர்விரசைமகத்திலமை நலங்கொணீருகுதன்மும்மைக்
குவர்வேற்படையோன் சந்நிதியிற் பூதியாதல்கைக்கொண்டு
பவவேர்களையுமைந்தெழுத்தா லபிமந்திரித்துப்பத்தியுடன். (11

சென்னிநுதலாதியவுறுப்பிற் றிரிபுண்டரநித்தலுநூலிற்
சொன்னநெறியாலணிந்தொழுகுந் தூயோர்நடக்கிற்பதந்தோறு
மென்னையுடையான் வெளித்தோற்று மிலிங்கமூர்த்தமொருகோடி
நன்னர்விதியாற்றாபித்தார் நண்ணுந்தருமநண்ணுவரால். (12

சிறப்பில்சிதடருரைகவராச் செவியர்சிறிதுமொழிவாயிற்
பிறப்பிலூமரிழிகுலத்திற் பிறந்தோர்துன்பப்பிறவி
யறுக்குஞ் சிவமந்திரமுரைத்தற் கருகரல்லாதவரேனு
நிறத்ததூவெண்பொடிபுனையி னிலமேற்சிறந்தாரவர்மன்றே. (13

வேறு

புனிதநன்னிலைமைவாய்ப்பப் புகலுமாசாராமில்லோ
ரெனினுமென்மலர்ப்போதேந்தி யிறைவனைவழிபட்டேத்திக்
கனியுமன்புடையரல்லா ராயினுங்கழியாத்துன்ப
வினையினுநீங்கித்தூயோ ராவர்வெண்ணீறுபூசின். (14

கதிபெறவிழைநதோர்கண்டி கிடைத்திலதென்னிற்காமுற்
றதனுருநலங்கொண்மண்ணி னமைவரவினிதமைத்து
விதிவழிகவளநீற்றிற் புரட்டுபுதரிக்கின்மெய்யே
யெதிரில்சீரக்கப்பூண்ட விருப்பயனெய்துமன்றே. (15

இருநிலத்துதித்தமாந்த ரெவ்வகைவிரகினாலு
முருவவெண்டிங்கட்கண்ணி யோண்சுடர்க்கடிபைபூண்க
தெரியினங்கவர்குலத்துத் தென்புலத்தோர்களெல்லாம்
பொருவறுசிவலோகத்திற புக்குவீற்றிருப்பர்மாதோ. (16

மூன்றாவது
ஐந்தெழுத்துரைப்போர் விபூதி ருத்திராட்சந்தரிப்போர்
பேறுரைத்த வத்தியாயம் முற்றிற்று ஆ திருவித்தம் (141)

---

நான்காவது

## தீர்த்தச் சிறப்புரைத்த அத்தியாயம்.

பொறிவரிப்பணடவிப் புயங்கநீண் முடிக்கிட ந்
தறைகுரற்கடலுடுத்த வவனியாதி யுலகிடைக்
கறைமிடற்றசென்னிறக் கடவுள்வாழ் பதிகளுள்
மறிதிரைத்திருத்தநீர்க ளெண்ணிறந்த வைகுவ. (1

யாவையுமளிப்பன வவற்றின்மூழ்க வெய்துமோ
பாவகாரியர்க்கறப் பயன்விளைகிலர்க் கலால்
மேவுமெய்முயற்சியா னவைகிடப்ப வேறுமுன்
டோவிலாததீர்த்த மானிடர்க்கெளிதி னென்றுவ. (2

தானமொன்று கருணையொன்று சாந்தியொன்று மெய்யுரை
யானதொன்று மகிழ்தலொன் றகிஞ்சையொன்று சமதையொன்
றூனிலைப்பொறியடக்க லொன்றுகாம வெகுளியா
மீனமொன்றுமில்லதொன் றினிதுகூற லொன்றரோ. (3

எதிலர்க்குதவலொன் றேதிலா ருடைப்பொருள்
காதலிப்பதின்மையொன் றயன்மனைக் கயற்கணார்
மீதுகண்படாமையொன்று விழைகுடுப்பநிறுவலொன்
றோதலொன்றுதந்தைதாய் குரவர்சொற்களோம்பலே. (4

மந்திரஞ்செவிக்தலொன்று கோட்சொல்வாய்விடுத்தலொன்
றுய்ந்துபோதல்கூடுமற் றிவற்றினென்றுமுண்மையே
சிந்தைசெய்யுமானத தீர்த்தமாயதரிதுமெந்
தெந்தயோகதீர்த்தமும் யோகசீலர்சார்வதே. (5

கன்னிமுதெயிலுடுத்த காசியாதிநகர்களில்
மன்னுதீர்த்தமுள்ளன வரத்தினிற்சிறந்தன
பன்னுதுங்கபத்திரை பகீரதிகவுதமை
பொன்னிகண்ணவேணிபஞ்ச கங்கையென்பபுலமையோர். (6

நதிகளாயவற்றினும் தடங்களாயவற்றினும்
அதிகமீதெனப்படு மங்கிதீர்த்தமன்னதுஞ்
சதுர்மறைக்கிழவன்முன் றரும்பிரமதீர்த்தமு
முதயனென்னவொளிரிலிங்க நயனமத்தினிலவுவ. (7

திசையிறைஞ்சுமுத்தர காசியோற்சிறத்தலா
லிசைபரந்துதெக்கண காசியென்றுபேர்பெறும்
விசையுடைப்பசும்பரி வெய்யவனயர்வுயிர்த்
தசைகொடிப்புரிசைசூ ழணிவியாக்கிரபுரம். (8

குடபுலத்தைநோக்கியுங் குணபுலத்தைநோக்கியும்
படருதன்னதத்தொடு நதியவட்பயிலவன்
விடனகன்றபாதலத் தியங்குகங்கை யாறுமத்
தடநகர்க் கண்ணுள்ளது சங்கமித் துயர்ந்ததே. (9

சங்குவெண்குழையினுன் சந்நேிப்பெரும்புன
லெங்கணுஞ்சுரநதிக் கேய்வகன்னல் வேலிசூழ்
மங்கலபுரியுறை மழுவலாளி முற்றிக
மூங்கிதீர்த்தமுத்திநல்க மாடல்செய்யு மளவையின் (10

வேறு

மானிடத்திற்காணவமக் காணளத்தி வாரிடமற் றதனிற்றெய்வ
மானதொருநூற்றுமடங் குதிகமதிற்சித்தரமைத் தருளிலிங்க
மீனமதுசெய்விகத்தோ டொக்குமிவற்றினிற்சுயம்புவெனுமிலிங்கம்
தானுயர்ந்ததைஞ்நூற்ருேடைஞ்நூற்று மடங்குரைத்தசுயம்பு தன்னில்.
(11

புராதனலிங்கங்கோடிகுணஞ்சிறந்த தவ்விலிங்கர்பொலிதலாலித்
தாரதலத்துளெல்லோருமிகுத்துரைப்ப பிரமபுரந்தனைத்துநீடும்
பராதுரியதீர்த்தங்களெவற்றினு மக்கினிதீர்த்தம்பலன்வழங்கும்
விராவிநயந்தாடுநர்க்கெவ்வேலேயினுநியதியின்றுவேலேமாதோ (12

அப்புனிதநீர்குடைந்துமுள்ளரைவள்ளிதழ்க்கமலத்தலங்கன்மாலே
மைப்படுகந்தரன்மங்கைநாயகற் கோர்முறைவழங்கின்மனத்துவேட்ட
துப்புரவந்நிலேயடைவர்குசுமமலர்கோய்த்தொளிர் நுண்டுகுநல்கி
லிப்புவியின்மைந்தர்பவுத்திரர்சூழநிலமுழுதாண்டின்பந்துய்ப்பார். (13

அர்மையினும் பிறைமுடிதத முக்கண்ன்போ லுருவுடை பராகிவானூர்
மொய்ம்மணி வேய்ந்தொளிபரப்பு கனகவிமானத்திவர்ந்துமுழவினர்த்து
பொம்மெனவிழ்ந்தொழுகருவிக்கயிலேயவரை மழுங்கனிபூம் பொழிலினீந்த
செம்மைநிறத்துகிலினிழை யெத்துணேயத்துணேவருடந்
திளேத்துவாழ்வார். (14

முன்புகல் சித்திரைமதியில் வெண்சுடருஞ்செஞ்சுடரும் மூயங்குநாளி
னன்பகலிலெள்ளறுக கோமயஞ்சென்னியிலிருத்திஞாலமீன்ற
பொன்பிதாவெம்முலேமடந்தை தேவிதீர்த்தத்தி லிதுபோந்துநின்று
மின்பொழிபல்கதிரோனே யுதித்தியமென்மந்திரத்தால் விதியிஞேதி. (15

மாசறநானம்புரிந்து பாதாளகேச்சுரனை வழிபட்டோர்க்குப்
பேசரியபிரமவதை யுடன்றீருநட்பினிடைப் பிழைப்பிற்றேன்று
மாசகலுமம்மதிற் கதிரவன்வாரத்துதயத்தங்கண்மூழ்கிப்
பூசுரர்க்கெண்ணீரண்டு படியுழுந்தளிக்கிலிரணநவை போகு மன்றே.
(16

அம்பதீயின்மதிநிரம்புதிதியினடு விற்பரிதியடையும்போழ்தின்
மெய்மறையின்மனுதவின்றப் புனல்படிந்துவிடையுயர்த்த
விமலன்வாழுஞ்
செம்மணிக்கோயிற்குணபா லரைக்குரோசத்தளவிற்றிருந்துமாற்கீழ்க்
கொய்ம்மலரோனியற்றிலிங்கந் தெரிசிப்போரந்தணர் வெங்கொலையிற்
றீர்வார். (17

உயர்ந்துதுளங்கிமில்விடைத்திங்களிற்றங்கணிறைதிதியோடுறுவிசாகத்
தியங்கு பகலிடைப்பொழுதி னிளந்தளிர்ப்பாசறுகரிசிசிரத்தின்மீக்கொண்
டயன்குயின்றபிரமதீர்த்தம்படிந்து நறுந்ததியோடளாயமூரல்
தயங்குபுரிநூன்மார்பி னந்தணர்க்கீபவர் நிரயஞ்சார்வதின்றே. (18

மறைக்கிழவனுலகடைய விழைத்தனரே லெய்துவரம் மாநீராடி
நறைக்குழலிநாதவதி யடிவணங்கி யுமாகர்ந்த னளினம்போலுஞ்
சிறப்புடையபதம்பணிந்து சிராத்தவினை புரிந்தனரேற்பிதிர்க்களெல்லா
நிறச்சுடர்வெய்ய வன்மதிய முள்ளளவுந்திருத்தியராய் நிலவுவாரே (19

கழைக்கரும்புகண்ணுடைத்த சாறடுதீஞ்சுவைவிசயங்கரைந்த
தெண்ணீர்
புழைக்கொடுமுக்குயர்ந்தணந்து புடையகன்றகுன்னலின்மென்
சுரையின்வாக்கிப்
பிழைப்பிலறநெறியொழுகு‌ந் தாபதர்க்கற்றையஞான்றுபெட்பினீவோ
ரீழைத்தகொடுவினைப்பிணிப்பு நிங்குவர்நன்னலம்பெறுவர் யாவரேனும்.
(20

அப்பிரமதீர்த்தத்தி லானியிற் பூருவபக்கத் தசுரரேத்து
மொப்பில்சுரவன் வாரத்துதய வேளையில்விண்டு கிராந்திதாங்கிச்
செப்பருமச்சுவாகாந்த மனுமுலமானுவாதல் செபித்துமுழ்கி
மெய்ப்பொருளாகியஞான நாயகனைப்பொன்முலையை வீழ்ந்து
தாழ்ந்தோர். (21

அலகில்பெருந்திருவுறுவ ராறிரண்டுதலைமுறை சந்ததியுமோங்கி
நிலைபெறுமாடியிற் கலைகணிறையுவளி னப்புனல்தோய்ந் தாவின்பாலா
னலமலிந்த வேதிரிவனநாதனை யாட்டிக் கபிலைநறிய நெய்யும்
பலனெடுக்கன்னலு மளவிப்பதனமைத்த பாயசமு நிவேதித்தோர்கள்.
(22

தாங்கரியகுன்மமெனும் பிணிதீர்வ ராவணியிற் சனிவாரத்தில்
வீங்குசுகிரரவி யகல்விசும்பகடுதோய் போழ்தின் மேருவில்லாய்
வெங்குதனி முதல்வனையு மலையீன்ற கருப்பினையுந் தயிலநெய்யாற்
பாங்குபெற வபிடேகர்பண்ணுவித்துமுடிதாழ்ந்து பணிந்துபோற்றி (23

திருவளர்சந்நிதிநின்று செஞ்சுடர்ச் செல்வன் புதல்வ னுவகைபூப்பக்
கருநிறத்தகப்பளமுங் காரிரும்பு மந்தணர்தங் கையினீவார்
வெருவருமந்தனில்வினையு மிடும்பையிலர் மிருகமதித்திங்களாண்டில்
வருதொறுமுந்துரைத்த பரிசாங்கியற்றி முடிந்தசனிவாரந்தன்னில். (24

இயன்றளவைநான்மறை தேரிருபிறப்பாளர்க் கடிசிலினிதீந்திங்ஙன்
முயன்றவர்தம் மரபில்வழி யுள்ளளவுமுதுமகன்செப் சிறுமையில்லை
தயங்கொளியா யெங்குநிறைந் தெப்பொருளுமாய்வேறாய்த்தழுவிநின்ற
புயங்கதர னுழைச்சிறந்தபேரன்பாற் பாக்கியத்தாற் பொலிவ ரென்றும்.
(25

வேறு

கன்னிமதியில் வெண்டிங்கட் கலைதேய்பக்கத் தட்டமியின்
முன்னாறைந்த தீர்த்தத்தின்முழ்கி யெழுதா மறைப்பொருளின்
பொன்னங்கழல்க ளர்ச்சித்துப் புரிந்துபிண்டோதக மறையோர்க்
கன்னமளிக்கி லவர்பிதிர்க்க ளடைவார் சுவர்க்கத்தந்நிலையே. (26

அறையும்பிரமதீர்த்தத்துக் கனிலதிசையி லந்நகாக்கோர்
சிறையப்பளவிற் கவுமார தீர்த்தமுளது சூர்தளங்கப்
பறவைவரையின் மார்பிடந்த பரிதியொள்வேற் படைத்தடக்கை
யிறைவன்புதல்வ னிருமிதத திமையோர்வியப்ப நிலவுவது. (27

பகல்காலிரவி விருச்சிகத்திற் படர்திங்களினத் தடப்படிந்து
மகவான்மகளுங்குறமகளு மணக்குந்திணிதோண்மணவாள
னிகர்பாயெறிக்கும் பொலன்கழல்க ணெஞ்சத்திருத்தித்
தொழுதிறைஞ்சிப்
புகழ்வார்க்களிக்குங் கனிமதுரம் பொழியுங் கவிதைபொழிவளமே. (28

ஆங்கட் சிறுபாசிலைவன்னி மூலத்துறையு மடல்வலியாற்
ருங்கற்கரிய கவுமார சத்திசெவ்வே ணிறீஇனன்
பூங்கட்கொடிப்பேர் நாதவதிபுரிவோர் நாநமுத லெவையுங்
கோங்கிற்குவிந்து பணைத்தமுலைக் கொப்பினநுக்கை
பெறல்வேண்டும். (29

சுவையார் தீம்பாற்பாயசமுந் தூவெண்ணிறத்த கோதுர்பை
யவையா லமைத்தபோனகமு மன்பினவட்கு நிவேதிப்போர்க்
கெவராயினும் வெம்போருட்றி யிகலுந்தெவ்வர் நிலையழிவ
ரவர்பாற் செல்வமுழுதடையு மரிதொன்றுளதோ வன்னவர்க்கே. (30

பறவாப்பூவை மலர்ந்தனைய பசியகழுத்து மயிலூர்ந்து
சிறைவாரணப்புட் கொடியுயர்த்த சேயோன்விதித்த தீர்த்தநீர்
முறையாலாறுமதிநடப்ப மூழ்கின் மகப்பே றில்லோரும்
அறைவாய்வகுத்த மணிச்சதங்கை யடிப்பொற்சிறுவற் பெறுவாரே. (31

*நான்காவது தீர்த்தச் சிறப்புரைத்த வத்தியாயமுற்றிற்று.*

*ஆக திருவித்தம் 172*

---

## ஐந்தாவது
## அரித்துவசன் சாபதீர்த்த அத்தியாயம்.

மகதவள நாட்டதிபன்மதிக்கடவுள் வழிவந்தோ
னிகலெறி வேலரித்துவச னெனும்பெயரோ னருங்கற்பி
னிகரமைந்த புகழ்ச்சுமதி யுயிர்க்கொழுந னெறிபோகிப்
புகரிகந்த பேரமைச்சர் புரோகிதர் தன்கிளையோடும். (1

மழையுரிஞ்சு நெடுங்குடுமி மாடநிரை புடைசூழ்ந்து
விழைதகு காம்பிலிநகரில் வீற்றிருந்து தெவ்வேந்தர்
கொழுநிதிக் குப்பையுமணியுங்கொணர்ந்து கடைத்தலையுணங்க
முழுதுலகம் பொதுநீக்கி முழுச்செங்கோல் செலுத்துநாள். (2

பரவுபெருந் தவமுயன்று பகையறவுன் புலந்தென்பு
நிறைகிளர்ந்து விளங்குருவ னிமிர்ந்துபுரி புன்சடையோன்
விரசிலுரு பயிர்நீண்டடோன் வெண்பொடியன் கண்டிகையன்
மரவுரியன் மான்றேலன் மறுவறுநன் னெறிநின்றோன். (3

எண்ணருஞ்சீர்த் துருவாச னென்னுமுனிவரன் யாண்டும்
புண்ணிய நன்னீராடன் மேற்கொண்டு பொருதிரைசூழ்
மண்ணடைய வுழிதந்து வளங்செழு காம்பிலிமுதூர்
நண்ணினன் வெப்பசியலைப்ப வருந்துபு நன்பகற்போழ்தில். (4

இன்னடிசில் விழைந்துருமேற் றெதிர்பிளிறுங் களியானை
மன்னர்பிரானுறைகோயில் வாயிலடைந்தன னடைந்தோர்
கன்னலள வவணிற்பக் கனைகழலோ னுணராது
மின்னிழையா ருவளகத்தில் வினைவலியின் வைகினன். (5

நெடித்ததுபோழ் தெமையோரா னிருபனவ மதித்தனனூண்
கொடுத்திலனென் றுநத்தழன்று குமாகண்ட னடைகவென
வடித்தொளிர் வாட்படையோன்பான் மாதவனெய் தெனச்சாபம்
விடுத்தயல் போயினனிங்ஙன் விளைந்துநிகழ் பொருண்முற்றும். (6

ஆண்டு வதிபவர்பிகவு மஞ்சிவருந்துபு கடிபோய்த்
தூண்டுநுதி வாம்புரவிச் சுடர்முடியோற் குணர்த்தினு
ரீண்டியுழை யிருப்போரு மிசைத்தனர் கேட்டலமந்து
மாண்டமணித் தவிசெழுந்து வளபணையின் புறப்போந்தான். (7

ஒய்யென நேடின்னிருள்சீத் தொளிருமழற் பிழம்பேய்க்குஞ்
செய்யநிறத் துரவோனைக் கண்டனன் சேவடிவீழ்ந்து
வையமளிப்போன் பலகா லிரந்துரைப்பான் மறைவல்லோய்
பொய்யில்தவத் துறையோழுகும் புங்கவபண் ணவரேறே (8

வறிதுமுணர்ந்திலனினது வரவுதெரியாதிழைத்த
சிறுமை பொறுத்தருள் கிலேயேற் றீயேற்கு நீயன்றி
யுறுபுகலுண்டோ சாபமொழிப்பை நீலை தளராமே
பொறைமலிந்த பப்புருவின் புதல்வவென முனிவோனும். (9

அருள்சுரந்து சூதியெனு பணங்கரசி யமைத்தளித்த
பெருகுசுவை யமிழ்தயின்று பெரிதுவந்து பகைமன்னர்
குருதிதுடித்தூன் சுதைத்துத் தசைகுதட்டுங் கூர்வேற்கை
நிருபரனுக் குய்யுமா றோந்திதனை நிகழ்த்துவான். (10

மறைக்கிழவர் விடுகடுஞ்சொல் வச்சிரமொய்ம்பினும் வலிது
பறைக்கரிது குறற்காலாய் பன்முறைவீழ்ந் திவண்வேண்டுஞ்
சிறப்புடை நின்னிலைகண்டு சிந்தைமகிழ்ந்தன மஞ்சே
லறத்தொழிலோ யிச்சாப மகலுமா லுரைத்துங்கேள். (11

உரவு நீர்க்கடல் சூழுலகத் திடைப்
பரமன் வாழ்கின்ற தானங்கள் பற்பல
விரவுவோர் பெரும் பாவங்கள் வீட்டுவ
பிரம சாபமும் போக்கும் பெருமைய. (12

வீடளிப்ப வெவற்றினு மேம்பட
நாட நின்றது நர்மாற் றுணிந்ததொன்
றீடில்சையா மெனுங்கிரியிற்பிறந்
தோடுகாவிரித் தென்றிசை யுள்ளது. (13

அந்தண்வையை யதன்வலப் பான்மலர்க்
கொந்துசூடுங் குழலங் கயற்கண்ணி
சந்தவெம்முலை முழ்கு தடப்புயச்
சுந்தரேச னிருப்பதோர் தொன்னகர் (14

உலகமூன்று முரைசெல வீறுடை
மிலகுபொன் முளரிததுட மென்றொரு
நிலவுதீர்த்த முடைத்து நிகழ்த்துமவ்
வலர்பதிக்கிரு காதத் தளவையின். (15

திருநிறைந்த திருச்சூழி தோன்றுமவ்
வுருவநிணகர்க்கி யோசனை நான்கென
வரையுமெல்லையில் மன்னுவ தத்தலம்
பிரதி காச புரமெனும் பேரது. (16

ஆதிமங்கள தேவனமர்வது
பாகிவெண்பிறை யேய்ந்த படர்சடைச்
சோதிபோரம யத்திற் சுரிகுழன்
மாதர்நோக்கின் மலைமகள் கேட்பவே. (17

வேறு

இரகசியத்துரைத்தமையா லப்பெயர் விண்ணவர்முதலோ ரிசைத்த
பிரதியெனலுத்தரமா மிரகசியங் கோசமெனப் பேசலாகுந் [தென்ப
தரைவலயத்தன்னதனு லுத்தரகோசப்பெயருந் தழைப்ப நீடுந்
திரையெறிதீம்புனற் கங்கை சூழ்கிடந்த காசியெனச் சிறந்ததன்றே (18

தேனிமிரும் பொலன்பொருட்டு முண்டகத்தோ னிறுதியினுஞ்
சிதையாதும்ப
ரானவரியாவரு மடுத்து வணங்குவது பெருஞ்புகழ்வேட்டளிப்போர்
கானிமிருந்தருமுதல பருவம்வரை யாதலர்க் கா கனியுநல்கு [போலக்
மானுழுவை கலுழனர வேனையவும் பகைதீர்ந்து மருவிவாழும். (19

மாசிலாமணி ஞானசம்பந்தன் கருணைபொழி வதனங்கண்டோர்
பாசநோன்பிணி துரப்ப தெனப்புதியோ ரடைந்தவர்வெம்படு
நோய்மாற்று
மேசில்பா மடந்தைநடம் புரிமதுரவாக்கொடுநா லெல்லைகண்ட
வேயசைநாவலர் தொடுத்த தமிழ்த்தொடைபோல ணம்பலவு
முடையதம்மா. (20

வேறு

பூதமுள்ளன யாவையு மின்பமே புணரப்
பாதுகாத்தலிற் பூரணி யப்பெயர் படைத்த
தோதுமத்தலத் துதவகதீர்த்த மொன்றுளது
வேதவேதியர் நிறைந்துபல் கணங்களால் விளங்கும். (21

அங்கணு னிருத்தார்ப ரேச்சுர னெதிராக
மங்களேச்சுரன் சந்நிதி வடகூணபாலிற்
றங்குமற்றது காண் பளவையிற் றரியாது
பொங்குவல்வினைப் பாதகங் கதுமெனப் போகும். (22

வெங்கதிர்ச்செல்வன் விரிச்சிகத் தீயைந்த திங்களின்வா
யங்கவன் றினத் துதயவேலையி னதிபதியாஞ்
செங்கை யைந்துடைச் சிறுவனைப் பிரளயேச்சுரனைத்
தங்கைகூப்புபு தண்டுபோ னிலனுறத் தாழ்ந்து. (23

புனிதநெஞ்சொடு பிரம மந்திரத்தையுட் புகன்று
பனிமலர்த்தட மும்மடி வலஞ்செய்து பருவாய்க்
கனைகடுங்குரல் ஞானியூர் கடவுளை வழிபட்
டனுமதங்கொடு தண்டுலந்தில மறுகணிந்து. (24

யாவர் மூழ்கினும் பிரமசாபத்தினை யிகந்தோ
ராவரிம்முறை யப்புனல்படிந் துலகாளுங்
காவல் வெண்குடை நளனு முன்னகுடனுற் கலந்த
வீவில்புன்மையும் பெயர்த்தனன் வியத்தகு விறலோய். (25

நர்மநுச்சையா னீயிவ ணீங்கியந்நகர்புக்
கிர்மெனச்சூருர் பரற்றுபூந் திருத்த நீரெய்தி
யர்மதிக்கணத் தினத்துரைத் தாங்கு மூழ்கினையேல்
வெம்மைசெய் கடுஞ்சாப நிற்பிரிவது மெய்ம்மை. (26

வேறு

ஐயமின்றிதற் கென்றுகூறலு மார்கடந்தடுஉ மாளிமொய்ப்பினுன்
மையலொன்றிய கவலைதீர்ந்தனன் மதிதெருண்டன னுவகைபூத்தனன்
செய்யகோலிறைக் கருளினனவரஞ் செயிரில்கொள்கைமா
தவர்குழாமுறை
சையநீடுபொன் னிமயமால்வரைச் சாரல்சென்றனன் முனிவரேறனன். (27

சாபநீங்குமா றருள்வரங்கொடு தனதுகோயில்வாய் நின்றெழுந்தனன்
கோபவெங்களிற் றியானைமன்னவன் குமரகண்டனு லுணர்வுமாழ்குபு
மாபெருஞ்சரிப்பலதினஞ்செல வல்லைநண்ணினுன் மறைமுக்கரு
யூபவேள்வியிற் புகைவிசும் பருதொழுகுமுத்தர கோசமங்கையே. (28

ஆகரித்தருள் விழிபடைத்தவர்க் கறிவினுட்பிரி யாதுநின்றமெய்ப்
போதருபனை மங்களேசனைப் பூண்முலைப்பெயர்ப் பொர்மலோதியைத்
தீதகற்றுமக்கினிதிருத்தமாந் தெய்வநீரினைக் கண்டுகண்களித்
தோதவொப்பிலா மகிழ்சிறந்தன னுண்ணிறைந்துபின் முறை
விளம்புவான். (29

முனிவரன்புகல் சாபநீங்குத லேதுவாகமுற் புரிபெருந்தவக்
கனிபயத்தினுழ் வலியினிப்பதி காண்டலாயதுமிகவுமற்புத
மெனவுரைத்தனன் முந்துகூரியாங் கெரிமுளைத்தகண்புனலின்முழ்கலுந்
துனிவிளைத்திடுஞ் சாபமொல்லைவெஞ் சுடர்முனள்ளிரு
ளெனவகன்றதே. (30

பின்னரன்புமீ தூரவெள்ளிவெண் பிறைமிலைந்தநம் பியைவிசேடமா
யின்னலகத்துவ ரிதுரணங்குட னென்னவிரண்டுப சாரமேவர
மன்னவன்வழி பாடுசெய்துமெய்ப் மயிர்பொடிப்பவென் புருகமாரிபோற்
றன்னிணைக்கணிர்கலுழநெஞ்சகந் தண்ணெனத்தளிர்த்
தெதிர்பழிச்சுவான். (31

வேறு

ஓமெனுர்பதமாய் நகரமாய் மகரவுருவமாய்ச் சிகரமாய்வாவென்
றுமெழுத்துருவா யகாரமாய் நிற்போ யாயிரங்கண்ணமைமிடற்ற
தீமைதீர்த்தருளுஞ் சத்தியோசாததேவனே யகொர வான்மாவே
மீமிசைப்புலவோ ரிறைஞ்சுதற்புருட விச்சுவருபனே சரணம் (32

சவிகெழுவாமதேவ வேதியவிசானனே பராற்பர தானே
நவிலருமங்கி கோத்திரருப நலங்கிளர்மந்திர வடிவோ
யவிசொரிமகமு மதற்கதிபதியு மதுரப்பவனு மத்தொழிலு
முதுமொழிக்கிறையும் பதுமவிட்டுறையு முதல்வனுமாகியோய் சரணம்.
(33

எதிராறுமனந்த சத்தியோயொரு முவெழுத்துமைந்தெழுத்துமாய்
நிற்போய்
கதிபெறவிழைந்தோர்க் கருள்வனபதியே கத்திருத்துவ பிரசேத
வதிர்வின்மந்திர வாணிசபவமும்மையம்பக புட்டிவர்த்தநனே
சதுர்நிராதார ரூபசாதார தகுங்குணசொருபியே சாரணம். (34

திணிதடப்புயங்க ளாயிரமுடையோய் திரியுகசத்தியோய்கழல்சூழ்ந்
தணிகெழுமலர்த்தர ளில்லவபதங்க ளனேகமுள்ளவ கழைகுழைக்கு
மணிநிறமதனற் காய்ந்தவயமனை மாய்த்தவக்கனை யடர்த்தோய்
பணிபணைத்துயின்ற கரும்புயலெழுவாய்ப் பண்ணவரிறைஞ்சுவோய்
சரணம். (35

பொட்பிலோயணுவும் பெரிதெனச்சிறியோய் பெரியதுஞ்சிறிதெனப்
பெரியோய்
கட்புலங்கவருங் கயிலைமால்வரையோய் கருணையின்னமிழ்துபெய்புயலே
விட்புலத்தொழுகுங் கனைகதிர்ப்பரிதி வெண்மதியழலெழவிழிப்போய்
நொட்புறுபுரவி யிரவியோர்கோடி குழீஇயெனவிளங்குவோய் சரணம்.
(36

மறைநவிலனுதி போதகமகேச மங்களநாயக சரணம்
வெறிகமழ்கமலம் போலுநின்னடிக்கீழ் வீழ்ந்தனன்பவக்கடல்வீழ்ந்தே
யறிவிலேனழுந்தா தெடுத்தருள்புரிநீ யல்லது களைகண்வேறறிய
னிறைவநிற்புகலென் றடைந்தனனென்னு வேத்துபுநிலமிசைப்
படிந்தான். (37

பத்தியோடெழிந்து வரிகமலரசன் பாங்குநிற்றலு முலகீன்ற
தத்தரிநெடுங்கட் டையலோர்புடைவாழ் சங்கரன்மகிழ்சிறந்தருள்கூர்ந்
தெத்திறத்தனபல் போகமும்விழைந்த யாவையு மெய்துமாறளித்துப்
பொய்த்தநுமுடிவின் மறித்திவட்பிறவாப் பொருவறு செல்வமுங்
கொடுத்தான். (38

இன்னவையருப்பே றடைந்த வெள்ளிலேவே லிறைமகனறை மழை
பிலிற்றும்
பொன்னவிரிதழித் தொடையில்வேய்மகுடப் புரவலன் றிருமுனீ துரைப்பா
னின்னையான்பரவு மித்துதியாவர் நித்தலுநிலமிசைப் புகல்வோ
ரன்னவர்பிறவிவல்வினைமுதலகற்றுதல்வேண்டு மெம்பெருமான். (39

இணையிலோய் வெளிப்பட்டருள் புரிந்தனையே லென்னுருதென்றலு
மெரிவாய்க்
கணைதொடுத்தெயின்முன் றெரிவித்தவிற்றடக்கைக் கடவுளவ்வரமு
மாங்களித்தான்
பணைவிருப்பொடுமுப் போதுமித்துதியைப் பகர்பவ ரோர்மதியளவிற்
புணரிருட்குறுர்பு மாயையும் வினையும் போக்கிமேக்குயர்
கதிபெறுவார். (40

இடையருதுவைகப் பெருக்கிடையழுந்தி யேந்துகோட்டடுகளிற்றுழவன்
குடநிறைபொழிபாற் சுரபிபாரெழுவாய் கோதறுவேதியர்கவர
வுடையதன்செல்வப் பெருநிதிக்கியை வுதவினன் மங்களேச்சுரற்கு
வடதிசைச்சிறிது மாருதபுலத்தின் வார்சிலை முவிரண்டளவில். (41

அருணடர்புரியுர் பரஞ்சுடர்வலப்பா லைந்துவிற்கிடை யளவையினிற்
குரிசிலாங்கமைத்தா னென்றரித்துவச கூபமென்றதனினுமூழ்கிப்
பெருகவான்புக மெண்டிசைமுகமளப்பப் பெயர்ந்துதன்
றெல்பதியடைந்தா
னிருநிலவரைப்பின் வல்லவர்யாரே யியர்புவ ரினையசீர்நகரம். (42

*ஐந்தாவது அரித்துவசன் சாபந்தீர்த்த அத்தியாயம் முற்றிற்று.*
*ஆ திருவிருத்தம் 214*

## ஆருவது
## நளச்சக்கரவர்த்தி கலிவிமோசனமான அத்தியாயம்.

விரியனறத்தின்மிக்கோன் மேர்படநீதிதேர்ந்தோன்
கூரியமதியினுழ்ந்தோன் கூறுபல்கலைகள்வல்லோன்
பாரிடையுயிர்கள்முற்றும் பரிந்துகாப்பவனெஞ்ஞான்றும்
நேரிகந்தளிக்குமிகை நெடுநுகப்பூண்டதோன்றல். (1

பூசுரர்குரவர்தேவர் பூசனையுவந்துசெய்வோ
னேசறுகுணத்திராச விருடிகள்சூழுமின்மேலோன்
மூசுவெஞ்செருவிலேற்கு மூணைக்குறும்பெறிவோன் வேட்கை
மாசொடு வெகுளியாதி மாற்றியுட்கரணர்வென்றோன். (2

சாந்தியன்பிறர்க்குமன்ற பயன்படுந்தாளோன்மானம்
பாய்ந்தொளிகிளர்பொற்பூணிற் பரிததவன்புவனமேறத்
தோய்ந்தசீர்த்தியன்றன்றொல்லை யரசியல்வழுவாதோம்பு
நாந்தகத்தடக்கைமுளி நளனெனுநாமவேந்தன். (3

வேட்டையில்விழைந்தோர்வைகல் விட்டெ றிகருங்காழ்க்குந்த
மீட்டுவார்வலைவன்பாச மியந்திரப்பிறவுங்கொண்டு
வெட்டயில்கடுங்கண்வேடர் மருங்குசூழ்தானையாகக்
காட்டிடைநடுவட்போந்து கயவலிமிருகந்தேடி. (4

வாகைவெண்பூவினண்ணல் வளைமருப்பேனங்கூரம்
பாகமெங்கணும்போர்த்தென்ன முட்செறியழல்கட்கேழல்
போகுயர்பணைப்புன்சாயற் புதைமயிர்யாக்கையெண்கு
வேகவல்லுழுவைவேறும் வெவ்விலங்களப்பிலாத. (5

கண்டுபின்றொடர்ந்துஞ்சூழ்ந்துங் கலைத்தெழுவித்துமொப்பிற்
கொண்டதீவகத்திற்சேர்த்துங் குறிப்பொடுவிளித்துமிங்஗ன்
விண்டுபோக்கறுத்துமண்மேல் வீழ்த்துயிர்கவந்துதேனும்
வண்டுமொய்த்தலம்புந்தாரோன் வாட்படைவயவரோடும். (6

நன்பகல்வேலைவெய்யோ னனிகதிர்வெயிலுங்காலும்
தன்புறவடிவிற்றீண்டத் தளர்ந்துதீப்பசியுள்வாட்டத்
துன்புழந்தழிந்துதேப்பிச் சுடர்மணிதெளித்தன்ன
மென்புனற்றடமொன்றெய்தி வீழ்சுவையடிசின்மாந்தி. (7

ஆங்கணோர்தருவின்மூலத் தயர்ந்தொருகன்னலெல்லை
வாங்குற்விறடந்தோள்வீரன் மலர்விழிதுயிலுமேல்வை
யோங்குபாதபத்தினும்பர் நின்றுகீழ்வீழவூரித்
தீங்கடுமொழியும்பேழ்வாய்ச் சிறெயிற்றரவுதீண்ட. (8

காமருமுருவமோடிக் கறுப்பமெய்வனப்பிற்றீரத்
தோமுறுகனவுகாணூ வெருவுபுதுளங்காநின்று
தாபமுத்தலங்கன்மார்ப னெழுதலுஞ்சார்ந்தோர்யாரு
மேமவெண்கவிகைமன்ன வென்னைமற்றென்னையென்றார். (9

என்றலுங்கனவிற்கண்ட யாவையுமிசைப்பக்கேட்ட
நன்றறியமைச்சரோடு புரோகிதர் நாமவேலோ
யொன்றுசொப்பநத்தீங்கெய்தா துஞற்றுதல்வேண்டுஞ்சாந்தி
யன்றெனினிடுக்கண்வல்லே யடைவதுசரதமன்னே. (10

வேறு

பரிதிகாண்பகலிற்றேன்று சொப்பனங்கள் பருவநீடாமலந்நிலையே
யிருவகைப்பயனுமளிக்கு மாதலினுலிசைகெழுபெருந்திருவிழைவோ
ரொருபொழுதென்னுமெல்லிடைத்துயிலாதுறுவளிபித்தமீதூரக்
கருகிருளியங்குகங்குன்முற் கூற்றிற்கண்டுயில்வுழிக்கனவெய்தும். (11

நலிதருப்பிணியாற்சிந்தையாற் கனவுநள்ளிரவடுக்குமேல்வினையும்
பலனிகழ்கனவுவைகறைப் பொழுதிற்படுமருணேசயவேலைக்
குலவியகனவோர்திங்களிற்பலிக்குங்கோதனமிவிடுக்குமேல்வையினி
லிலவுறுகனவிரைந்துநாள்வரைப்பிற் பயன்றருநெடுர்புவியளிப்போய்
(12

கழறுசொப்பநத்தினிலையினதுணர்ந்துகண்டவர்சாந்திமுன்பாகப்
பழமறைதெளிந்தோர்க் கியன்றவையளிக்கப்பகர்ந்தவைபுரிந்திலா
ரென்னி
னெழுவுறழ்புயத்தோய்நுகர்ந்தலாதொழியாதெண்ணருங்கனுவினைப்
பயனென்
றெழுகெளிப்போலப்பூட்புரவலன்கேட்டுமுளமருண்டுழ்வினைத்திறத்தால்.
(13

இழைத்திலன் சாந்தியாதலினெல்லையிழந்தனரசியலுரிமை
வழுத்துசீர்க்கற்பினருந்ததியனையவியைமகவொடுந்தணந்து
கழைக்கரும்புடுத்தகவிழ்தலைச் செந்நெற் கழனிசூழ்மல்லனுடகன்று
விழுப்புகழ்க்குரிசில்வெய்யகானடைந்தான்விதிவலியாவரேகடப்பார். (14

நாமுறுவனத்திற்றிரிதலுஞ்சின்னுள் நகுடனென்பவன்கடல்குடித்த
மாமுனிசபிப்பப்பெறுபதமிழந்துபைம்பிடற்றரவினுண்டுறைவோன்
றூமவெம்படலைக்கடுங்கனல் வளைப்பத்துயருழந்தேந்தலைநோக்கிப்
பூதலிதொடையோயெனை யெடுத்தீரைந்தடிப்புறப்போக்குதியென்றான்.
(15

என்றுகூறலுமருள்சுரந்தெடுத்தனனேந்தி
யொன்றுமுன்னிகழ்முறையினென்பானெனவெண்ணிச்
சென்றுபாதவைப்பிறுதியிற்றசவெனச்செப்பி
வென்றிமன்னவற்கேறனுன் போக்கிடும்வேலை.
(16

ஐதைமுட்செறிகூரெயிறழுந்துறக்கடிப்ப
வுய்துகாட்டுமெற்றீண்டியதென்னெனவுரைப்பப்
பொய்தவிர்ந்தமெய்க்கீர்த்தியோய்தசவெனப்புகன்ற
செய்தியானினக்குதவியாமற்றதுதெரியின்.
(17

எனமொழிந்தனனிடதர்கோ னிரைந்துமுச்செறியுங்
கனல்சினப்பணிகதுவலின் முழுதுடல்கருத்துத்
தனதுபேரழகிழந்தொளி சாய்ந்துசில்பகலிற்
புனைகருங்கழலிருதுபந்நன்பதிபுக்கான்.
(18

*வேறு*

நெடுமுடிமுறரெடர்சாபநீங்கதற்
கிடுமருப்பியானையூரிருதுபந்நன்பா
லடுதொழில்சாலுவனுகிவைகினுன்
படியகத்தியாவரோர்படியினின்றுளார்.
(19

*வேறு*

ஏங்கொலிநீர்நிலம்புரப்போனிருபந்நனுடன்போகி
யாங்கணிகழ்சுயம்வரம்புக்கமுதொடுசேர்தாழமைக்கொண்டு
தீங்கநம்பின்சுவைபயிற்றுஞ்சின்மிழலைத்தமயந்தி
பூங்கழைதோளிணைமீட்டுமெய்தினுன் பொலன்பூணுன்.
(20

வளங்கெழுதன்னுடனடைந்துவளையாச்செங்கோலோச்சி
யிளங்கதிர்போலிருள்விழுங்குமெரிமணிவெய்யோன்முடியோ
னுளங்கவர்சொப்பனத்தின்வினைவுள்ளுபுதன்னுரிமையொடும்
விளங்கொளிப்பூட்புதல்வரொடுமெய்ந்நெறிசேரமைச்சரொடும். (21

வேண்டுபலபொருள்கொண்டுமேம்படுபுண்ணியத்தலங்கள்
காண்டுமெனவிழைந்தெழுந்தான்காசிகயைகேதார
மீண்டுபுனற்பிரயாகையெழுதருஞ்சீராலவனந்
தூண்டுபுகழ்க்காளினியோடவந்தியரித்துவாரமுமே. (22

மாளவமேமகதங்காக்கோலமதிவடிம்பேறு
நீளொபிலத்தினபுரர்பஞ்சபுரநீள்பொழிலிற்
காளமுகிலவைவுபிரப்பங்காடுகூண்ணவனம்
வேளிறைஞ்சுர்புள்ளிருக்குர்வேளூர்சோமேச்சரமும். (23

வேறு

வீமவனமன்னேச்சுரமுர்விரிநீர்த்தில்லிகாவனமுங்
காமர்கோரேச்சுரப்பிறவுங்கண்டுதொழுதாழ்வயத்தினுற்
ருமந்துயிலுமணிமார்பன் சார்ந்தானுதிசிதர்பரமென்
றேமநெறிதேர்ந்தவருரைக்குமிலந்தைவனமாந்திருப்பதியில் (24

அங்கணுறையுமறைக்கொழுந்தையாலம்பழுத்தமணிமிடற்று
நங்களமுதைப்பாதாளநாதன் றன்னையெமையீன்ற
திங்கள்நுதலாள்நாதவதித்தேவியொடுகைதொழுதேத்தி
மங்குல்தவழுமாடநகர்வளமுங்காணுமகிழ்பூத்தான். (25

உள்ளமுழுதுநின்மலமாயுடல்வெங்கலியால்வினைதீங்கு
விள்ளுர்படிவார்பரிமேதவேள்முடிப்பானங்கமோடு
கெள்ளுமறைநூற்றுறைகண்டோர்சிறப்புவிதியினனிதெரிந்தோ
ரெள்ளலிகந்தவொழுக்கத்தோரிசைமேப்படுமந்தணர்த்தொகுத்து. (26

அன்னோர்மொழியின்வழிமதிக்கீற்றணிசெப்பவளச்சடைமுடியெம்
முன்னோன்வதியுந்தளிக்குணபான் மும்மைக்கணைவீழளவின்கட்
டன்னேடுவமைபிறிதிகந்ததலனிற்பரிதிவடிவேற்கைப்
பொன்னுடரவக்கழற்காலோன்பொருவில்புனைஞர்தமைப்பணித்து (27

பலவுந்திருந்துப் படியொழுங்குபடைத்தாயிரந்தூணுடைத்தாகி
யலகிலமைந்தவேதிகைத்தாயணிகொள்சாலையமைவித்து
நிலவுதுளும்புநித்திலமுந்துகிருமணியுநெகிழ்பொலனும்
விலையினுழைநூற்றுகில்பட்டும்பிறவுங்கொணர்ந்துவேய்வித்தான். (28

விதியால்வேள்விவேட்பிக்குமேலோரோடுமதவெள்ளங்
குதிபாய்ந்தொழுகீர்ங்கவுள்வேழக்குழுவியடித்தாமரைவணங்கி
யதிராச்சிறப்பின்வாத்துமையுமருச்சித்தடர்பொற்றூரணிந்தைங்
கதியாற்றிருந்தும்மையப்புரவிவிடுவித்தீர்ந்தண்கலைவல்லோன். (29

கூனற்கருப்புச்சிலையனங்கன்குழைப்பக் குயில்கூப்பயிலுமிள
வேனிற்பொழுதிற்றீதிலனுய்விண்ணுமுழுதுமேய்ந்திட்டி
மோனத்தொடுவாப்பரியிவுளியடிகடோறுமுடித்தோமந்
தேனிற்பொலிபூந்தாரண்ணல்செய்தானிட்டிவினைசிறப்ப. (30

யாணரொளியாலருமணிப்பூணிழைநுண்கலிங்கத்தொடுபுனைந்து
கோணப்பதினுறுடன்விளங்குங்கொழும்பொன்யூபர்பலநாட்டிப்
பூணும்புரிநூலவர்முதலோர்புக்கோர்க்கிரவிமறைகாறும்
பேணும்பரிவினறுசுவையூண்பெரிதுமளித்தான்வரையின்றி. (31

ஆண்டொன்றிங்ஙனிகழ்த்தியபினடுத்தவேனிற்பருவத்து
நீண்டசபையோன்மகிழ்பூப்பநெறியால்வபையோமாதிகளு
மாண்டகுணத்தோன்புரிந்துபரிமகமுற்றுதலுமோட்டாமை
பூண்டநிறத்தந்தணனுவந்தான்புலவோர்பிறருங்களிகூர்ந்தார். (32

*வேறு*

மடங்கலேறனையான்வேள்விமுடித்தபின்வன்னிதீர்த்த
மடைந்தவபிருதநானமாடினன்வேட்பித்தோர்க்குங்
குடம்புரைசெருத்தனுகான்கொழும்பயிர்ப்பூமிசெம்பொ
னுடன்பலபொருளுமீந்தானுறுகலிக்குறும்புதீர்த்தான். (33

அவிரொளியாமசெந்தீயரணியிலொடுக்கித்தன்னூர்க்
கிவர்தருகருத்தனுகியியவில்வளையவாங்கித்
தவளவெண்முறுவல்கோட்டித்தரியலர்புரமட்டோர்க்குப்
புவனமீரேழுமேத்தப்புரிவித்தான்விழவுமன்னே. (34

செங்கதிரிடபத்தேயுந்திங்களிற்றிங்கட்செல்வன்
பைங்கதிர்க்கோடுகூடுர்பக்கத்திற்புனர்தநாளி
லங்கணன்விதித்கதீக்கைபரித்தருட்பனுவன்முற்றிச்
சங்கையின்றெழுதுமாதிசைவரோரைவர்தம்மால். (35

எறும்வலிவிடைப்பதாகையேற்றுவித்தைதர்மூன்ருய
வுறுதிதிநிறைவிற்றீர்த்தவுற்சவநிகழ்த்துவித்தான்
மறுகொடுவீதிகாண்போர்வனைகலனுரிஞ்சுப்பொற்றா
ணறுமலர்த்தாதுச்சுண்ணநளிந்துபார்புதைந்தன்றே. (36

பைங்கமுகரர்பைகன்னல்பலமிடைந்தலர்பெய்தூநீர்
மங்கலகும்பம்பூத்தமாளிகைவாயில்தோறு
மெங்கடம்முறுப்பிற்கேற்பவிவையெனத்தேற்றுவாரி
னங்கலுழ்மேனிச்செவ்வாயரிவையர்விரவிநிற்பார். (37

தண்ணறுஞ்சூதமீன்றதழைகலாந்தோரணங்க
ளொண்ணிறப்பசியகிள்ளையொழுங்கினிற்பறப்பதொக்குங்
கண்ணகல்விசும்பினீடுகதலிகைப்பதாகையோடும்
விண்ணவர் குழுவுழப்பர்விலக்குவபோனுடங்கும். (38

வெளியன செய்யவாகி விண்டொடுகவிசையீட்ட
மொளிகிளர்மதியம்வெய்யோனுருவுபற்பலவாயாங்கட்
களிவினைமுருகுகாண்பான்கலந்தனகளிப்பஞான்ற
தளிகதிர்முத்தமாலைதிரண்டதாரகைகளேய்க்கும். (39

எழுதிறத்தியன்றமாதரெண்ணிலப்படாமலீண்டுங்
குழுவெனும்பரவைவெள்ளங்கொழித்தெறிதரங்கமானும்
விழுமயிர்க்கவரிக்கற்றைவீசுவபடகப்பேரி
முழவுகாளங்களந்நீர்முழக்கெனமுழங்குமாலோ. (40

முலஸ்தானம் சுவாமி சுவர்ண கவசம் தோலா 300.
விலை சுமார் மதிப்பு ரூ. 30000



1. அம்மன் சன்னதி முன் மொட்டைக் கோபுரம்
2. சுவாமி சன்னதி 7 நிலை ராஜகோபுரம்

உற்சவ அம்மனுக்கு நயம் பச்சை வைரம் பதித்த பூ உள்ள தங்கக் கிரீடம் சுமார் விலை மதிப்பு ரூ. 6500/-



1000 வருஷத்திய வலம்புரி சங்குகள் இருபுறம் தங்க அனசு பிடித்தது.

காற்றிறைவரவுபொன்னங்கால்சொறியாலவட்டந்
தேற்றமேற்றிசையோன்போதல்சிவிறியுமறியார்பந்துஞ்
சாற்றவெள்ளிடையிலோமைசைந்தெனத்தளியின்வந்த
கோற்றொடிமகளிராடக்குழலளியாடுமெங்கும். (41

குடையொடுகொடிபொற்றூங்கொழுநிதிக்கலசந்தாங்கிச்
சுடர்மணித்தோரணங்கள் சூழ்ந்தொலிமணிகடுங்கத்
தடநிலைத்திகிரிபூண்டசருப்பதோபத்திரத்தேர்
படர்புவிகீண்டுசேடன்பரிப்பமேலியங்கிற்றன்றே. (42

இவ்வணநிகழ்ந்தபின்னரெரிதளிர்த்தனசெர்மேனி
மைவண்ணமிடற்றினர்க்குவழங்கினன்கோடிபைப்பொ
னுய்வண்ணநெறியிற்றேர்கோனுரியதன்றேயநண்ணிச்
செய்வண்ணப்பிறழாச்செங்கோல்திசைசெலநெடிதுவாழ்ந்தான். (43

இம்மையில்விழைந்தபோகர்யாவையுமமைந்துமைந்தர்
தம்முயிர்ப்புதல்வரோடுதழைத்திவணுகர்ந்துமுக்கட்
செம்மல்வாழுலகஞ்சேர்ந்தான்செருவலான்சரிதைசொல்வோர்
மெய்ம்மையாதரவிற்கேட்போர்வெங்கலிக்குடைவதின்றே. (44

*நளச்சக்கரவர்த்திகலிவிமோசநமான அத்தியாயம் முற்றிற்று*
*ஆ திருவிருத்தம் 258.*

---

## ஏழாவது

## மங்கலபுரி சதுர்வேதபுரியானது முதலான பலசரிதை யுரைத்த அத்தியாயம்.

பொருவிலந்நகரினித்தலுமுறைதல் புரிபவர்முனிவரரனேகர்
தெரியினன்னவருட்சிறந்துளோர்வியாதன்கௌதமனெடுசதானந்தன்
மருளிலக்கினிபன்கவுசிகன்வசைதீர்காலவன்வெப்பிருவென்போன்
விரிதரும்புகழ்மார்க்கண்டனக்கிரகன்விச்சுவாமித்திரப்பெயரோன். (1

எள்கலில்பாத்துவாசனேசமதக்கினியிரதீதனெஞ்ஞான்றுங்
கொள்கையில்வழுவா வத்திரிகுசிலன்கோபிலன்மோனபார்க்கவனே
யுள்ளமைவாமதேவனேசுமனியுயர்கதிவிழைந்தினிதொழுகந்
தென்னுசீர்ப்பரமயோகியேன்றின்னோர்சிற்பராநந்தபோதிலைப்பார். (2

நின்மலன்சகளரூபமுட்குறிப்போர்நெறியினர்ச்சனைமகப்புரிவோர்
தொன்மறைத்துறைபோயாகமந்தெளிவோர்துரிசருந்தவத்தினுற்
றுடைத்தோர்
பன்முறைதெரிமாணுக்கரோடவர்கீழ்ப்பயின்றுளாருடன்சுழீஇயிருப்பப்
பொன்மதில்புடை சூழ்பதிசதுர்வேதபுரியெனவோசைசென்றதுவே. (3

எரிவிழிப்பகுவாய்முடங்களைமடங்கலேற்றையூரடுதிறற்காளி
கருமிடற்றிறையோடன்று மாதாடுகுடுநவைபோக்குதல்குறித்து
வருபுனற்படப்பைசூறறுமாததலனில்மங்கைநாயகன்விழைந்துறையுங்
குருமணிவேய்ந்தகோயிலின்றென்பாற்குரோசமேரிரண்டளவையினில். (4

விதியுழியிலிங்கமியற்றுபுவழிபாடாற்றினன்மேருவில்வளைக்கு
மெதிரிலியுவந்துவேண்டியவரங்களீந்தனனேதமுமகன்றுள்
கதிரொளியிலிங்கமூர்த்தியுங்காளச்சூானெனக்காசினிவிளப்ப
மதிகிடந்தனையதிருநுதற்பெதும்பைபவைகுவாளங்கணெஞ்ஞான்றும். (5

*வேறு*

நீதிபயில்கிரேதத்திற்பிரமபுரமெனப்புகல்வர்நெறியாற் பின்ன
ரோதுதிரேதையில் வெதிரிவனமென்பர் துவாபரத்தி லுலகமேத்துந்
தீதில்வியாக்கிரபுரப்பேர் செப்பிடுவர் கலியுகத்திற் செல்வநல்க
மேதருமங்கலபுரமென்றியப்புவரவ்வியன்பதியை முனிவர்விண்ணோர். (6

முன்னரொருகாலத் தொன்பதுகோளும் வக்கிரிப்ப முகில்பெய்யாது
பன்னிரண்டுவருடமழைவளநீங்கப் பெருங்கடலும் பாழிபொய்ப்பு
முன்னுசலந்தரனெனப்பே ருடையதோர் [1]மண்டுகமுதகமாருத்
தன்னுருவத்தோடுமணங் கமழலரிப் புலர்வேரிற் றங்கிற்றன்றே. (7

---

1. மண்டுகம் = தவளை.

அன்னதன்பெய்ப் புனலுறலாற் [2]கணவீரமூலம்பூத் தப்போதப்போ
தின்னமிழ்து வானவர்க்கீந் தருவிடமுண்டோன்பூசைக்கேறிற்றேறார்
மன்னவனுண்மகிழ்ந்துவர மளித்தனனவ்வரத்தினல் வயவேந்தாயிற்
றென்னலர்பொன்மகுட நிரைமணியழுந்துங்கனைகழற்காலுரவுவேலோன். (8

புலராத நறுங்கண்ணிக் கடவுளர்தானவர்நிருதர் புவனிவாழ்வோர்
பலராலும் பிறராலும் விலங்குமுதலிய வுயிர்கள்பலவற்றாலு
மலவாதபெரும்பேறு பெற்றமையா லெவ்வுலக முலையாநிற்ப
மலர்மாதுமுலைதிளைக்குமுகுந்தன்முதல்விண்ணோர்க்குமமர்செய்தான். (9

ஆற்றுமலன்னோர்க ளலமந்து வெருளியயர்ந் தாகம்பூத்த
நீற்றல்வெண்ணிலவெறிக்குஞ்செஞ்சுடர்முன்னணைந்துமுறை
நெறியாற்றாழ்ந்து
கூற்றுவிகுடித்தகுரைகழற்றாளோய்சலந்தரனைக்கொன்றீண்டெம்மைப்
போற்றுயென்றிரந்துரைப்பஅஞ்சலிரென்றருள்புரிந்துபூத்நாதன். (10

புதையிருள்சீத்தொளிர்பிரிதிக்கதிர்கோடியுதித்ததெனப்பொலிந்து
தோன்றுஞ்
[3]சுதரிசனம்நெடியோன்கைக்கொடுத்தவனுல்விடுத்தானச்சுடர்காேமி
மதவலியாருயிர்பருகிமீண்டுமலைமகள்கொழுநன்மருங்குசேர்ந்த
தகனிலைதேர்பைந்துளவோன்மதிதவழ்புன்சடையோனையர்ச்சித்தானுல். (11

ஆதரவினர்ச்சிப்பவுவகைகூர்ந்தெம்மிறையவ் [4]வாழிநல்கச்
சீதரனெய்தினனுங்கட் சலந்தரனுமுற்பவத்திற்சிறைவண்டார்க்குந்
தாதவிழ்தண்மலர்க்கங்கைமுடிக்கேறமுயல்வினையாற்றக்கன்வேள்வி
பேதமுறச்சிதைத்தபிரான்வீட்டியபின்வீடளிப்பப்பெற்றான்மன்னே. (12

எறிசுறவக்கோடேய்த்துமுள்ளிலைப்பச்சுடற்றுமையிணர்ப்பொற்போது
வெறிகமழ்ம்பங்கயப்பொகுட்டுவட்டவணைவீற்றிருந்தவிரிஞ்சன்வேண்ட
நெறியிகந்துபொய்க்கரியாயுடன்பட லால்வினைதோட நீங்கவெண்ணப்
பொறியரவக்கங்கணன்வாழப்பதியிலர்மாசுபோக்கிற்றன்றே. (13

---

2 கணவீரம்=அவரிப்பூ
3 சுதரிசனம்
4. ஆழி. } சக்கரைப்படை.

வேறு

இடபமதியிற்பூரணையிலெறிவாட்பரிதிசுடபால்வெற்
படையும்போதிற்கபிலைபொழியந்தீம்பாலோர்கலத்தளவு
சுடவெள்வனையினிறைத்துமறுக்கூடுமூலகும்பல்லுயிரு
முடையபிரான்மங்கலநாதனுறையுமிலிங்கமூர்த்தியினில். (14

ஆடியாருளப்புரிவித்தோரவ்வேலையிலாங்கதிற்செங்கே
ழோடிபொறிக்குர்பவளநிறமொருபாலோர்பாற்பச்சைநிறங்
கூடிவிளங்கவோருருவிற்கொண்டகோலமெதிர்காட்டி
யிடில்பெருமானருள் செய்யுமிதனுற்சித்தியனைத்துண்டாம். (15

முயலுந்தவமார்க் கண்டன்முதன்முனிவோர்களுமின்னனம்புரிந்து
கயலுண்கண்ணிவலப்பாகன்காட்சிகொடுப்பக்கண்டுகளித்
தயர்வில்கொள்கைச்சீவன்முத்தராயினரென்றெங்குரவன்
பயிலுமிதனை நாத்திகர்கருப்பகரேலுரைக்கப்பிறர்க்கென்றான். (16

*ஏழாவது மங்கலபுரஞ் சதுர்வேதபுரமானது முதலான பல சரிதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.*

---

## எட்டாவது

## பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயம்.

கங்கைவார்சடைக்கடவுள்வாழ்க்கயிலைகாவலனைச்
சங்கையின்றுணர்மதியின்மேம்படுசனற்குமார
னங்கிதீர்த்தமான்மியமறைந்தனையதன்றேற்ற
மிங்குநீயெடுத்திசைக்கெனவவனுமாங்கிசைப்பான். (1

சோதியுட்சுடர்ச்சோதியாயகண்டமாய்த்தோன்று
மாதுபாகன்முற்படைத்ததுமற்றதனும்
மாதிகங்கையோர்காரணத்தாலனைத்துலகு
மோதுமக்கினிதீர்த்தமென்றுயதுமுரைப்போம். (2

ஐந்துமா றடுமிருடிகளாயிரரிறையோன்
முந்துபோதிப்பமுழுதுணர்ந்தவமிழைத்தற்
கு ந்துதீர்த்தலஞ்சிறந்ததொன் றுள்கினர்தணவா
தெந்தைகோயிற்கு நிருதிகோணத்திடையிருந்தார். (3

காலம்பற்பலகலியநோற்றெழுகுமக்காலை
ஞாலநாயகன் முனிவரைப்பார்த்திவை நவில்வா
னீலவாட்கண் [1] மண்டோதரிபொருட்டுநீனிறத்த
வேலைசூழிலங்காபுரத்தெய்துதல்வேண்டும். (4

ஈங்குநீவிர்வைகுதிரெனுவெழுதருமுறையை
யாங்கண்மாசறுமறிஞர்கைக் கொடுத்தனனன்னோர்
தீங்குசெய்தொழி லிராக்கதர்செறிபுலஞ்சேறல்
பாங்கில்போதகப் பாங்குகொலன் றனர்பரமன். (5

ஆதவன்புகாமுதெயில் வளர்பதியரசுக்
கியாதொர்வேலையி னம்முருத்தீண்டுதலியையும்
போதவிழ்ந்தனி யித்தட நடுவணப்போது
கோதில்கொள்கையீர் கொழுந்துவிட்டழற்பிழம்புதிக்கும். (6

என்றுகூறிமற்றவர்களி னீங்கினனெரிபோற்
குன்றுபோலுயர் கொடிநெடுமாட நீடிலங்கை
சென்றுபுக்கனன் சிறைச்சுரும்பரற்றவண்டலம்பு
மன்றலுறுசில் லோதியைமணந்தவண்வதிந்தான். (7

ஆயவேலையினரக்கர்கோன்முடிவெயிலெறிப்பத்
தூயவாளெயிற்றிளம்பிறை சுடர்நிலாவிரிப்பக்
காயமாரிருள்பரப்பவந்தனனதுகாணுத்
தாயனுன்பசுங்குழவியாயினன்றசமுகன்முன். (8

கண்ணுநெஞ்சமுங்கவர்வனப் புடையபாலகற்கண்
டுண்ணெகிழ்ந்தனன் மைந்தனியாரெனவுயிர்த்துணைவி
தண்ணறுங்குழற் [2] றாபத மடந்தைதந்தகன்று
ளண்ணல்யானையாயரும்பெறற் புதல்வனையென்றாள். (9

---

1. மண்டோதரி = இராவணன் மனைவி. 2. தாபதமடந்தை = தவமகள்.

பொழியுமைப்புயன் ஞாயிறுதழீஇப்பொலிந்ததுபோன்
றெழிலின்மேர்படுசிறுவனை யெடுத்தனன்மடிவைத்
தொழுகுகாதலினுவந்தனனவன்றோடுமளவிற்
கழிபெருர்புனற்றீர்த்தத்தினெழுந்ததுகனலி. (10

படரொளிக்கழல்காண்டலும் பயிலருந்தவத்தோ
ரடையவீழ்ந்தனரவ்வெரி நாப்பணுண்டொருவர்
தடையில்கல்வியின் முதியவர்தனுவினாலிளையர்
கிடையில்வேதியர்குலத்துளார் கேள்வியிற்சிறந்தார். (11

வணங்கும்வாயினரொடுங்குமுள்ளத்தினர்மண்மீ
திணங்குசெய்தியாமாணிக்கவாசகரென்பார்
குணங்கொள்புத்தகநிலத்தில்வைத்தால்வருங்குறையென்
றுணங்கியீதுநாமோம்புதல்கடனெனக்குறித்து. (12

செய்யதீத்திரளூடுபுக்கிலர்தெளிபொருளா
மையனல்கியதிருமுறையங்கையினீங்கா
துய்யவையகநெடிதுநாளுறைந்தனரிசைத்தேன்
மொய்யலர்த்தடர்பொய்கையின்முரிவாய்க்கரையின்! (13

கொழுநனுமகனுமாவான்கோதிலாமனையாட்கென்னு
மொழிதெரிவிப்பாள்போலமுதுதவவனிதையாகி
வெழினலங்கழித்தமண்டோதரியுழையெய்திமைதோய்
விழியுளமகவாய்வைகுப்விடைவலாற்கொண்டுபோனாள். (14

தொள்ளாயிரத்துத்தொண்ணூற்றொன்பதின்மர்சூழலுஞ்சிகையனலி
னுள்ளாய்விழுந்தோர்க்கவ்வயின்மங்கலலிங்கற்குத்தரபாலிற்
கள்ளார்முளரித்திரளலர்த்துங்கதிரோகோடிபுரைவடிவும்
விள்ளாவவிச்சையிருள்கரப்பவிளைபுன்முறுவற்றிருமுகமும். (15

உடையோனாகிமுழுமுதல்வனாவுவவுமதிபோன்றொளிர்வதன
மடவாளோடுமெதிர்நின்றுவந்தேகாட்சிநுமக்களிப்பக்
கடைபோந்துறைவீரெனவிளம்பக்காட்சிகொடுத்தநாயகனென்
றடல்வெள்ளேற்றோற்கொருநாமமன்றுதொடங்கிநடந்ததே. (16

உருவவனப்பின்வீக்கத்தாலொலியல்வேய்ந்துநெறிபயின்ற
சுரிமென்குழலுஞ்சுந்தர நாயகியென்ரேர்பேர்சுமந்தனளாற்
கருணைசுமந்துபன்னுமறைக்கனிவாய்விண்டுநும்மொடுயாந்
திருவினூற்றுப்பத்திலிங்கமூர்த்தமாகித திகழ்ந்துறைதும் (17

ஈண்டையிலிங்கமாயிரமுமெல்லாவுலகுமீக்கூற
மாண்டசிறப்பிற்பொலிந்தோங்குமலர்த்தாள்பணிந்துதெரிசித்தோ
ராண்டுபெறுமாறனைவோர்க்குமளித்துஞ்சொருப்பியமென்று
னீண்டுபுரிந்துபோற்றருவீழ்நிரைத்தாங்கொளிரும்படர்சடையோன். (18

பொருனூல்பொறித்ததிருமுறையைப்போற்றல்குறித்துவீற்றிருந்த
மருவீங்குணர்வின்மாணிக்கவாசகனையெப்மிறைநோக்கி
யிருணீர்வேலிஞாலத்தில்யாம்வாழ்தலங்கடொறுமடைந்து
தெருணீர்மொழிச்செய்யுளிற்புகழ்தல்செய்தியதன்பின்னேர்பதியில். (19

தொன்றுபடுமும்மலநீக்கித்தோன்ருத்துணையினருள்வெளிபட்
டென்றுமுலவாப்பேரின்பத்திரண்டுமொன்றுமாறத்தினைப்ப
நன்றுமுயர்வீடருள்வமென நவின்ருனகல்வானுமைமறைந்தா
னன்றுதொடங்கியத்தீர்த்தமங்கிதீர்த்தமாயதுவே. (20

வேறு

ஆனுமலவ்வயினின்ருனந்தநடஞ்செயலாற்
கூனூர்பிறைச்சென்னிக்கூத்தரெனும்பெயர்படைத்தான்
மானூர்கரத்தினன்வாமபாகத்துறையும்
பூநாறுமென்கோதைபூணூர்வனமுலையே. (21

ஆடல்பரிமூர்த்தியாலயத்தினேர்கீழ்பால்
ஈடில்புகழ்மங்கைநாயகர்க்கீசானத்திற்
ரேடுகமழ்தார்ச்சுரர்பதிபோந்தைப்படையோன்
றேடுமுளரித்திருப்பதங்களர்ச்சித்து. (22

கோதமன்முந்திட்டகொடுஞ்சாபந்தீர்ந்தொழிந்தான்
மேதகுவிண்காப்போன்விமானமுளதின்னுங்
காதணிவெண்சங்கக்கடவுள்வடபாலில்
தீதகலும்வன்னிதீர்த்தத்தின்மேல்பாலில் (23

தன்னேன்கமலச்சததளப்பொற்கோயிலுறை
யண்ணலிராதந்தரகற்பத்தந்நகர்புக்
கெண்ணின்மலியுமிராசதிதோடந்தீர்வான்
வண்ணங்கிளரிரவிவார்சிலேசேர்திங்கள்தனில் (24

முதுரையிலிந்துமுயங்குழுவைந்திகியில்
தீதில்திருவாதிரைவிரதந்தேர்ந்துறீஇ
மாதரரசிமலேயரையன்பாவையென
வோதுமுலகீன்ருட்கூஞ்சல்விழாக்கற்பித்தான். (25

செய்யபவளத்திரள்காலில்வெண்ணிலவு
பெய்யுந்தரளவடநாண்பிணித்தொளிகா
லேயபசுர்பொற்பலகையமைத்தமிழ்திற்
றுய்யதமிழ்மதுரத்தூக்குமெடுத்திசைத்தான். (26

சாறுதொடங்குந்தலேஞான்றுகொட்டிகலே
றேறுமிறையோனுமெவ்வுயிர்க்குமின்னருள்செய்
பார்வையுமையாளுர்பங்கயப்பூம்புனல்தோய்ந்
தார்வமுடனந்தத்தவபிருதமுர்படிந்தார். (27

அப்பதுமதீர்த்தமறிவுக்கூறிவாகி
யொப்பிலிதன்கோயிற்குணபாலோரர்பளவின்
மைப்புறவண்டார்ப்பவனசத்தொடுதோன்றுஞ்
செப்பரிதுநம்மாலதன்பெருமைதேறுங்கால். (28

வேறு

மைக்கயல்போற்பிறழ்ந்துவடிவாளெனநீண்டகன்றுவரிசிதறிமதர்த்
தொழுகுமழைத்தடங்கட்கவுரி
தக்கன்மகளெனவுதித்துச்சதியெனுர்பேர்புனைந்துதனமுதல்வனெடு
கலந்துதணப்பறவாழ்காலே
மிக்கதிறலுறுவலியோனெச்சவினைபுரிந்தான்விரிதுழாய்த்தழையலங்கல்
விண்டுமுதலிமையோர்
திச்கிலுறைபுருகூதன்முதலுலகபாலர்தெளித்தமறைவியாதன்முதலிரு
டிகளுந்திரண்டார். (29

---

சாறு = திருவிழா

சுமந்துமுதலோர்பிரமவாதியருந்தொக்கார் தொல்லுயிர்கட்கதிபதி
யானெனத்தன்னைவியந்து
நிமிர்ந்தபுரிசடைமுன்றினிலவெறிப்பமிலைந்தநிமலனையும் விமலையையு
மதித்திலன்புன்மதியாற்
கமழ்ந்துகறிநெறிபயின்றநெடியகுழற்கங்கன்மனத்தோன்கரையா
மலிருப்பவுமுக்கணற்பார்த்
தமைந்தவுணர்வினர்க்கெளிதாமருஞ்சுடரேயெந்தையாற்றுமகங்
காணியநீயெழுந்தருளல்வேண்டும். (30

அன்றெனின்மற்றெனையேனுமாங்கடையவிடுத்தற்கருள்செயெனவிரந்
துரைப்பவண்ணலருள்செய்யான்
குன்றுறமுந்திணிதடந்தோட்பிரதமர்கள்சூழக்குவிமுலைக்கொம்பெழுந்து
புறம்போந்து வழிக்கொண்டு
சென்றுபுகுந்தனள்யாகசாலையறிவுழந்தசிறுவிதியுமவன்மனையுங்குழீஇ
யவரெல்லோரும்
பொன்றவழ்பூர்பசும்பெடையைநல்வரவும் வினவார்புகன்றிலர்வேறொரு
மொழியுமிகழ்ந்தனர்தீவினையால. (31

அன்னவரிகழ்ச்சிநோக்கியமுதாதருதலைத்தீஞ்சொன்
மின்னடுநுசுப்பிற்பாவைவெருவருவெகுளிமீக்கொண்
டென்னையாளுடையோன்பக்கலெய்தவுமஞ்சியெஞ்சாத்
தன்னுருவொழித்தாண்மூலத்தழலெழீஇயாங்கண்மன்னே. (32

பைந்தொடிமடந்தைபின்னர்ப்படர்ந்தபாரிடத்தர்மீண்டும்
வெந்தவணிகழ்ந்தவண்ணமழைவண்ணமிடற்றூற்கோதக்
கந்தடுபுழைக்கைநால்வாய்க்கரியுரிபோர்த்தோன்சீறி
வெந்திறலடலின்மிக்கவீரபத்திரனையேவி. (33

மேல்வினையுணராத்தக்கன்வேள்வியைத்தகர்த்தன்னேனைப்
பால்வளைத்தறுகட்சேனைப்பரப்பினையவிவேட்டுண்ண
வால்வளைச்செங்கைமாயோனுதியாதியாவாதிந்துள்ளோரைக்
கோல்வளையரசன்கீழ்வாழ்குடியெனநடுங்கவாட்டி. (34

இன்னிசையருவிதூங்குமிமையால்வரையினண்ணி
யுன்னருப்பொருளாய்நின்றேன்யோகில்வீற்றிருந்தான்பல்யாண்
டனனமென்னடைப்பைங்கிள்ளையனையவள்சயிலவேந்தன்
முன்னயர்தவத்தால்வந்துமுளைத்தனள்புதல்வியாகி. (35

அணிகிளர்பருவச்செவ்வியடைதலுமிசைவண்டுதப்
பிணிமுறுக்கவிழுங்கொன்றைப்பிணையல்தாழ்மார்பன்வேட்டு
மணிவடஞ்சுமந்துவீங்கிவர்பறுத்திளகுங்கொங்கைத்
திணிமருப்பியானைசேரத்திருந்துதோளெழுவிற்சேர்த்தான். (36

பின்னரெங்கடவுளோர்நாட்பெய்வளையணங்கைநோக்கி
யின்னரப்பனையசொல்லாயெர்மொழிமறுத்துநுந்தை
தன்னமுமறையுண்முடிபுசார்தலாற்றவறுண்டந்தப்
புன்னவைதீர்ப்பான்மண்மேற்போந்தருச்சித்தல்வேண்டும். (37

அன்றெனிற்கரிசுநீங்காதாயிரஞ்சிகரக்குன்றிற்
றென்றிசைமருங்குநாவற்றிவினோர்தலஞ்சிறந்த
தொன்றுனக்குபதேசிப்பவுத்தரகோசமங்கை
ளென்றொருபெயர்மேலெய்துமிணையிகந்துயர்ந்ததென்றும். (38

இக்காலையிலந்தைவனமெனத்திசைபோய்விளங்குவது
மைக்காவியெதிர்கடந்தமதர்விழியாயப்பதியிற்
புக்கார்வத்தொடுநம்மைப்போற்றியருச்சனைபுரிவாய்
மிக்காயவின்னோர்யாண்டிரைப்பானிகழளவும். (39

என்னவுரைத்தனனிறைவனிறைவளைக்கையடவரலு
முன்னிகழ்ந்ததுட்கொண்டுமுழுமுதல்வன்மொழிதலைக்கொண்
டன்னகரியினிலடைந்தாளமுதுறழ்நீங்கனிபொதுளித்
சன்னிகர்ப்பதோரிலந்தைதாபித்துவளர்த்தனளால். (40

மாதரிவட்பிடியன்னுண்மயானத்துநடம்புரியு
மேதமிலியுறைகோயிற்கீசானகோணத்திற்
போதவிழ்ந்துமணங்கமழும்புண்ணியநீர்த்தடமமைத்தாள்
சீதளமென்றதனுபந்தேவிதீர்த்தமுமென்ப (41

பகருமதன்குணபுலத்திற்பன்னசாலையுமிழைத்து
நுகர்வனயாவையாவையுந்தவிர்ந்துநுகருணவுவளியாகி
யிகல்வெருளிப்பகைசாடியிந்திரியப்புன்குறும்பெறிந்து
தகவொடுநோற்றருவுருவாந்தலைவனையுமருச்சித்து. (42

அவ்விலிங்கமுழுமுதலுக்கமைந்தபூண்முலையாளென்
றெவ்வுலகமெடுத்தேத்துமிறைவியையும்வழிபட்டுக்
கவ்வைவினைநவைதீர்ந்துகண்ணுதலோன்மகிழ்பூப்ப
நவவிவிழிமுன்புபோனலஞ்சிறப்பவொழுகினள் (43

ஈங்கிவள்பேர்பூண்முலையாளெனத்திசைபோய்விளங்குவது
வீங்குபுனற்படப்பைசூழப்பதியின்மெய்ப்பொருளா
யோங்குசுடர்ஞானநாயகரிடப்பாலுறைகின்ற
கோங்கின்முலைக்குயில்கண்டகுளிர்நிறப்பாசிலையிலந்தை (44

ஆதியுகமெனுங்கிருதத்தல்லாமலதன்பின்ன
ரோதியமூன்றுகத்தினுந்தேனிறைக்குநறுமலர்க்குருந்துந்
தாதுகமழ்பொலந்தோட்டுச்சண்பகமுந்தேருருள்போற்
போதுவிரிந்தளிமுரலுர்பூமகிழுமாமந்தோ. (45

தமரிற்றுறந்தோருளத்தென்றுந்தணவாமங்கைப்பெருமானைக்
கமலப்பொகுட்டில்வீற்றிருக்குங்கடவுண்முன்னரருச்சித்தா
னமயமின்றதொடிவளைக்கையிறையாள்வழிபட்டனள்பின்ன
ரமிழ்தக்கடலிற்பிறந்தகருப்பதற்பின்னராதனைபுரிந்தாள். (46

அன்னநிலைமையிருடிகள்தேர்ந்தழியாமுதலர்ச்சயப்புவாய்ப்
பன்னவரியநினமலமாய்ப்பயிலுஞ்செக்காரணமாகி
மன்னுமிலிங்கமூர்த்தமாய்வைகுமிலந்தைவனக்கனியை
யின்னலறுக்குமருமருந்தையிச்சித்தினிதுபூசித்தார். (47

யாகவினையிற்றியானத்திற்சமாதியோவெண்வகையாய
யோகநெறியிலருந்தவத்திலுஞற்றுர்பரிசாரகத்தொழிலின்
மாகமணந்துங்கமழ்நந்தாவனந்திலதிதிபூசனையின்
மோகமறுக்குர்வேதாந்தமொழிவயிட்டிகாதிகளின். (48

இறையோனுவப்பவொழுகுவாரியாமேயுரைக்குமவர்சரிதை
பொறைமேற்சயப்புத்தானத்திற்பொலிந்துதோன்றுமந்நகரி
லறைவாய்க்களித்தபசுஞ்சாகமளிப்போர்பெறும்பேறறுசுவையூண்
குறையாதயலூர்ப்புறத்திருந்துகொடுப்போர்க்கெய்தல்கூடாதால். (49

பருதியோட்ட றநிவந்தபன்மாளிகைபுடைசூழ்
பொருவிலத்தவத்தோர்கதையவனிமுன்புகலு
மொருவனந்தணனயிட்டிகனெனலிவிரித்தெழுதாச்
சுருதிநூல்கரைகண்டவன்சிவார்ச்சனைத்தொழிலோன். (50

விதியின்மந்திரமுணர்ந்தவன்விதிமகஞ்சிதைத்த
சதுரன்மங்கலநாயகன்றுமரையடிக்கீழ்
முதிருமன்பினன்சாகமேநுகர்பவன்முறையா
லதிதியர்க்குமுன்னளிப்பவனுடோறுமன்பால். (51

அதிகசுந்தரனெனப்பெயர்போயவனமலன்
வதியுங்கோயிற்குவாசவன் புலத்திலம்பிரண்டு
பதியுமெல்லையினியபன்னசாலையினி
னெதிரில்கொள்கையில்வைகினனெடிதுநாளென்ப. (52

ஓதுமேலவன்மழைபொழிபருவத்திலோர்நாட்
சீதவெண்பிறைமிலைச்சியசெஞ்சடைக்கடவுட்
பாதபங்கயமலர்த்துணைபரிவினர்ச்சித்து
மேசகுந்தனதுறையுள்வாய்மீண் னனடைந்து. (53

பரவருந்தியானத்தினிடமர்ந்தனன்பகல்போ
யிரவினையிரண்டிறந்தனகன்னலவ்வெல்லை
யுரவுவெம்பசியனற்றவுள்வெதும்பிவான்கொண்டல்
விரவுதண்டுளிநனைப்பமெய்வருந்தியோர்மறையோன். (54

ஏசிலசெய்திகன்பாடிகனெனப்பவனெய்தா
முசுபைந்தழைச்சாலைநீள்வாயிலின்முன்னி
யாசுநல்குதல்வேண்டுமீண்டிடமெனவழைப்பத்
தேசினுயரருந்தவன்சமாதியிற்றிர்ந்தான். (55

பொருக்கெனக்கடைப்புறத்தணைந்தணையவற்காணுத்
தருககுமாதரவொடுபணிந்தெழுந்துதாள்விளக்கித்
திருக்கொள்பாசிலைச்செழுமனைக்கொண்டுபோந்தொருசா
ரிருக்கையீந்தினிதிருத்திநல்வரவுகேட்டதற்பின். (56

சாகமுண்ணியதனக்கிருந்ததிலருந்துகெனப்
பாகமின்சொலோடளித்தலுநுகர்ந்தனன்பசிதீர்ந்
தோகையெய்தினனெய்தலுமுணர்வினுக்குணர்வா
மேகநாயகனுவந்தனன்யாவையுங்களித்தே. (57

ஏதிலூர்வதிந்திரதமாறெடுநிறையடிசி
லாதிநூல்வலோர்க்கருள்பவர்க்காப்பலங்கட்கே
காதல்சாகவூண்கொடுப்பவர்பெறிலறுசுவையூண்
காதலாலளிப்போர்பயன்யாவரேகணிப்பார். (58

குரும்பைபோற்கிளர்குவிமுலைக்கௌரியோடணுகிச்
சுரும்புசூழ்மலர்க்கொன்றையோன்சொன்னரேகையினு
லருப்பெறற்சிவஞானபோதங்கொடுத்தகன்ருன்
விருப்புநன்னெறிவேதியனிலையையார்விரிப்பார். (59

பின்னருஞ்சிலநாளவணுறைந்துபேருலகின்
மன்னுயிர்த்தொகையடங்கலுமருண்டுகைவிதிர்ப்பப்
பன்னருந்தனதுருவநீங்கலுர்பசுபோதத்
துன்னருப்பரம்பொருளொடுகலந்தனனுரவோன். (60

*எட்டாவது பார்வதி தவம்புரிந்த அத்தியாயம் முற்றிற்று.*
*ஆகூ திருவிருத்தம் 334.*

---

ஒன்பதாவது
மணம்புரிந்த அத்தியாயம்.

நலமலிசிரிப்பினிநாடுசெய்தவப்
பலனெனவையையின்பாங்கரோங்கிய
பொலன்மதில்மங்கலபுரியின்கீழ்புலத்
தலகுசால்குரோசமுன்றகலுமெல்லையின். (1

புல்லணையெனுநகர்பொலிந்ததெத்தொழில்
வல்லதெய்வச்சிலைமாயன்கைகூவான்
சொல்லருமதன்குணதிசையிற்றேன்றிடுஞ்
செல்லறிர்சக்கரதீர்த்தமென்பது. (2

பார்ப்பினுந்தீண்டினும்பரிந்துமூழ்கினும்
பேர்ப்படுபோகமும்பேறுநல்குவ
தோர்ப்பினுற்காவகமொழியிற்பூருவத்
தார்ப்பருக்கடலிரண்டருகுசூழ்வது. (3

பலர்புகழ்ந்தமாதனபருப்பத
நிலவுமதத்தலைநெய்த்தவார்குழல்
மலைவளர்காதலிமருங்குலவகநின்
றிலகொளிபரப்புவதிராமலிங்கமே. (4

வேறு

மண்டுதிரைமுழங்குபயவாரியினுஞ்சங்கமிப்ப
துண்டுதனுக்கோடியெனவோர்தீர்த்தமத்தீர்த்தங்
கண்டவருமுயர்வீடுகாண்பரமூமறியேந்தும்
அண்டனுறைவெதிரிவனத்திணிகெழு[1]பச்சிமதிசையில். (5

[2]காதநான்களவின்முனங்கழறுதிருச்சுழிதோன்றும்
ஓதிலதன்வடபாலியோசனையோரிரண்டளவின்
மாதரரசங்கயற்கண்வல்லியுடன்பிரியாது
வேதமுதலுறைகூடல்வியன்பதிமுற்புகன்றதால். (6

இத்தலங்கள்புடைதிகழ்விடைதிகழ்மங்கலபுரியா
மத்தலனிற்றென்றிசையிலைந்து[3]குரோசத்தளவின்
மெய்த்துபுகழ்வேதவியாதாச்சிரமமிகவிளக்கு
முய்த்துணரிலதனளவையோர்கூப்பிடென்பனவே. (7

---

1. பச்சிமதிசை=மேற்கு 2. காதம்=பத்துக்கல் தொலைவு
3. குரோசம்=கூப்பிடுதூரம்.

வேதவியா தாச்சிரமமென்னவுமவ்வியன்பதியை
யோதுவர்முன்றெல்லைசெலினுத்தரதிக்கினிற்றேன்றும்
போதவிழ்ந்துமுருகுயிர்க்கும்பூம்பொழில்சூழ்ந்தொருநகர
மேதமில்சீர்ப்புருரவாவெனுமரசன்கண்டதால். (8

வேறு

இவ்வுலகத்திராசமாணிக்கசதுர்வேதபுரமெனப்பேர்போய
தவ்வயினந்தணனெருவன்மும்மைவேலையும்புனல்தோய்ந்தங்கியோம்பிக்
கவ்வையறுத்தருள்சுரவனடிபேணிப்பணிபுரிந்துகரைதீர்வேதஞ்
செவ்வனுரைத்தின்னணநாட்செலச்செல்வோன்மகப்பேறுசிந்தை
செய்தான். (9

பொன்போலும்பெறலரியபுதல்வரையும்புதல்வியையும்புரிந்துமாரு
அன்போடுமிலந்தைவனத்தணைந்துவிடப்பழுத்தமிடற்றமுதைநோக்கித்
துன்போடுந்தவம்புரிவோன்கௌமாரதீர்த்தத்திற்றூர்மாவிழ
முன்போரிலடர்த்தபிரானனுச்சைபெற்றுமதிமுழ்கிநாளும். (10

வெயில்முறுகுங்கடுங்கோடைப்பருவத்தைந்தழனுப்பண்விழைவினின்று
முயிர்கவருங்கடுங்கூற்றினுயிர்செகுத்தகனைகழற்றுளுவந்துபூசித்
தயில்மழுவாட்படையானுக்கின்சுவைப்பாயதநியமித்தமைத்துமங்கன்
செயிரின்மறையோனேற்பவெளிநின்ருன்முகிழ்நிலவுத்திங்கள்வேய்ந்
தோன். (11

மைந்தரொருமுவரையுந்தனயையொருவனிதையையுமறைவல்லாள
தந்தனநிகெனவுரைத்துமறைந்தனன்விட்புலத்தில்வரைத்தையல்பாகன்
புந்திமகிழ்வரங்கொடுதன்னூர்புகுந்தான்பூசுரனும்புக்கபின்னர்ப்
பைந்தளிர்மெய்ச்சிறுவரையுஞ்சிறுமியையும்புவிவியப்பயந்தான்
மன்னே. (12

மனங்கவர்புன்றலைச்சிறார்மூவருக்குமங்களநாயகன்பேர்சூட்டிப்
பொனங்கொடிக்குப்பொன்னேறுபூண்முலையென்றபிதானம்புகன்று [சாத்திச்
சனம்புகழவேதியனும்வைகினன்பவளவிதழ்த்தரளமுரற்
கனங்குழைவாணுதற்கருங்கட்பசுங்கோதைபொருவிறந்தகவினின்
மிக்காள். (13

தெரிந்திசைததகனை நலத்துக்கிலக்காகச்சிறந்துவளர்ந்தனளக்காலை
புரிந்துநிமிர்புன்சடையோளனைத்தழகுந்திரண்டொருபாற்புகுந்ததொப்ப
பெருந்தகைசால்வடிவொடுப்பீடுகெழுபழமறையாறங்கமுற்றிப்
பரிந்துணர்தத்துவஞானம்படைத்துள்விப்பிரனுகிப்பார்மேற்றேன்றி. (14

முற்றலஞ்செய்தொழுதுலத்தோன்மனைபுகலும்வருகென்னுமுகமன்கூறி
நெற்றிவிழிகரந்தோனையருகிருத்தியுளத்துவகைநீத்தம்பொங்க
மற்றுநிகரில்லாதோய்எர்மகளைமணர்புரிதல்வேண்டுமென்றான்
வெற்றிமழவிடைப்பாகனங்ஙனமாகெனவிதியால்வேட்டானன்றே. (15

*வேறு*

கன்னற்சுவைபுளிப்பக்களிதுவர்ப்பச்சிலமிழற்று
மன்னப்பெடைநடையாளுடனயின்முத்தலைப்படையான்
பொன்விற்பொலியணியூஞ்சலில்வந்தானசைபொழ்தின்
மின்விற்கடிதகல்வாயிருவிசும்பூடுறமறைந்தான். (16

புடைநின்றவர்காணாதுதிகைத்தார்புலன்மயங்கி
மடல்விண்டவிபூந்தாரவிமாமனுமருண்டா
னுடைவெண்டிரையமுவத்தொளிமணிவுய்த்தவரொத்தவரொத்தான்
படர்துன்பொடுநனிதேடினனயர்ந்தான்பதைபதைத்தான். (17

அனையோனியையுணராவுணர்வகலாதுணர்வாறு
னனைவார்கழலிறையாளொடுநரையான்மிசைதோன்றி
யினையாதொழிமறையோய்முனமியற்றும்பெருந்தவத்தால்
வனைகோதையையிவண்மணஞ்செய்தனன்மகிழ்ந்தே. (18

நின்றன்குலத்துள்ளோரனைவருநீரெடுகண்டி
யென்றுந்தரித்தெழுத்தைந்துணர்பவராகும்நுமக்குதரிசனநல்க
நன்றுதரிசிநலங்கொளிவளோடு
மொன்றுஞ்சுடரிலிங்கத்துருவாயிந்நகருறைவோம். (19

இருநிலவரப்பினம்பெயர்கலியாணேச்சுரனென்னவுமளிவீழ்
சுரிகுழலணங்கின்பெயர்கலியாணசுந்தரியென்னவுநிகழப்
பொருவில்சீர்நிறையிப்பதிகலியாணபுரமெனத்தழைகவென்றறைந்தான்
கருமிடற்றரவுங்கவிழுகிழெருக்கங்கண்ணியுமிலைந்தவார்சடையோன் (20

சிறுவிழிப்பெருங்கைக்களிற்றுரிபோர்த்தசெம்மலைநோக்கிநான்மறையோ
னெறுழ்வலிப்பகுவாய்மடங்கலேறடர்த்தோயிருபிறப்பாளரியாவர்களு
நெறிபயில்விவாகத்தீரிரண்டாநாள்நிகழ்த்துவர்சேடவோமந்தேர்ந்
தறிவரும்பொருளேநீயுமத்தொழிலிண்டாற்றுகல்வேண்டுமென்றிரந்தான்.
(21

அல்லுறழ்கண்டத்தண்டர்நாயகனுமன்னதற்கியைந்துவான்றடவு
செல்லுலாமபுரிசைசூழுமிந்நகர்க்குத்தென்றிசைமருங்கிஞேர்குரோசத்
தெல்லையினடைந்துமற்றதுமுடித்துமென்றுவேதியரொடுமெய்திச்
சொல்லருஞ்சுருதிவழியினக்கருமநிரப்பினன்சூழ்ந்தவர்வியப்ப. (22

அத்தலங்களைகணுயுலகளிப்போனங்கிகாரியம்புரிதலினு
லித்தலந்தீயனூரெனச்சிறந்ததிலங்கொளியிலிங்கமொன்றுதித்து
மெய்த்தவர்விழைந்துகைதொழவக்கினீச்சுரமெனவிளங்குவது
தொத்தலரலங்கற்குழல்கயிலாயசுந்தரியெனமருங்கமர்வாள். (23

அருவமாயுருவாயருவுருவாகியல்லதுவாயுயிர்க்குயிராய்ப்
பொருவிகந்துயர்ந்தகடவுள்பொன்னேருபூண்முலைமடந்தையோடிங்ஙன்
றிருவிளையாடல்புரிந்தனன்மீண்டுதிருந்துநீர்மங்கலபுரியிற்
கருதருமிலிங்கமூர்த்தியுட்கரந்தான்கண்ணுதனிலையையார்தெரிப்பார்.
(24

வடவரைகுழையப்புயங்கநாண்கொளுவிமருத்துழாயம்புதொட்டிகளூர்
படரெரிதவழக்குறுநகைமுகிழ்த்தபவளவாயந்தணனுவப்பக்
கடல்விளையமிழ்திற்கனிந்ததீங்கிளவிக்கன்னியைவழங்கலான்மேம்பட்
டிடமகல்புவியிற்சுருதிதேர்மறையோரெவரினுஞ்சிறந்துளோரானர். (25

*ஒன்பதாவது மணம்புரிந்த அத்தியாயம் முற்றிற்று.*
*ஆகத்திருவிருத்தம் 359.*

---

## பத்தாவது

## பிருகுசாபந்தீர்த்த அத்தியாயம்.

உழுந்தமிழ்ந்தளவின்வாரிதிமுற்றுமோர்குடங்கையினடங்கநுகர்ந்த
செழுந்தவன்குடபுலந்தனிகாக்குந்திம்புனற்கரசன்மைந்தனைநோக்கி
யெழுந்தழன்றுமுனித்துநவாசனிட்டசாபமொளிதிற்கெடுமாறிங்
கழுந்துமாமாரகலப்புகல்வாமென்றமிழ்தினுமினியவாகநவின்றான். (1

கரிமருப்புமகிலுந்திரைசிந்துங்காவிரிக்கடவுள்யாற்றின்வலப்பாற்
றெரிவரும்பெருமையாலுயர்வையைத்தென்கரைத்தலையின்மஞ்ஞைகளாட
வரியளித்தொகுதிபண்பயில்சோலைமாடுநீடுமதுரைப்பெருவைப்பிற்
கிருமையோசனையில்[1] யாமியதிக்கிலெவரும்புகழ்திருச்சுழிதோன்றும். (2

சிந்துதீர்த்தமுடனன்னதன்கீழ்பாற்செலவில்யோசனையோர்நான்கள
சந்தடை விவரைப்பினில்வேலைச்சங்கினந்தவழுமுத்தரகோசத் [வின்கட்
கிந்துவாழ்முடியன்மங்களநாதனெம்பிரானுறைவன்மன்றபணைத்தின்
ழுந்துமாதிமலைமன்றுளதாங்கண்மொழிகுவன்பரமபாவனமன்றே. (3

என்றுபின்வருணன்வாழ்வதனர்பார்த்தேந்துகோட்டடுசினக்களிருகி
நின்றநின்றன்மகற்போகிநீயுமத்தலமணைந்திணைதோன்று
மன்றறைறுபுனலக்கினிதீர்த்தமாரபின்மூழ்குபுபடிந்ததன்றீரத்
தன்றுசேர்தலுமுடங்குகைநால்வாயாப்பலின்வடிவுநீங்குதறிண்ணம். (4

காலனார்பெருமைவாட்டியசீர்மார்க்கண்டரங்குவதிவாரவர்முற்சென்
றாலுமன்பொடுவணங்கி நின்மைந்தற்கைந்தெழுத்துமனுநல்குவிபின்னர்
ஞாலமுய்யவடநீபுலின்வைகுநம்பர்சந்நிதியினன்னியமத்தோ
டேலுமாறுசிவபாவனைமாருதிந்தியப்பகைபோராமலடர்த்து. (5

ஆறிலக்கமுருவாமனுவோதினக்கணத்தினகலுந்தொடர்சாப
மேறுயர்த்தகோமானெல்வெளிப்பட்டிவனல்வரமதற்பின்வனைத்தோட்
சீரடிக்கௌரிகோனருள்செய்யதீர்த்தமொன்றவணியற்றுவையிண்டுக்
கூறுகிற்றதிறனிலையுநீல்பொய்யேகொட்சுருநடவுவோய்படர்கென்றான். (6

---

1. *யாமியதிக்கு = தென்திசை.*

வேறு

மலயவெற்புறைகுறுமுனியுரைத்தவாய்மொழிகேட்
டலைசுருட்டுமுந்நீர்க்கடற்கதிபதிமகனே
டுலைமுகப்படாதுருப்படுமுத்கலையயில்வேற்
றலைவனுத்தரகோசமங்கைப்பதிசார்ந்தான். (7

கொடியதீவினைக்குறும்பெறியக்கினிதீர்த்தம்
படியவெய்த்தனன்புதல்வனைமரபினிற்படிந்து
நெடியவான்கரையேறலும்பிருதுவைந்நிலையே
யடிபெயர்க்குமால்வரையுருநீங்கினனம்மா. (8

பழையதன்வடிவெய்தினன்பரமனைந்தெழுத்தும்
விழைவறுத்துயர்மார்க்கண்டன்விதிவழிவிளம்பக்
குழையுநெஞ்சொடுகேட்டவன்பணிதலைக்கொண்டு
தழைவிரிக்குமானிழலுறையிறைவன் சந்நிதியில். (9

உருவுமுவிரண்டிலக்கமோதலுமுலகீன்ற
செருகுபூங்குழற்பசுங்கொடியோர்விடைதிகழ
முருகுபாய்சடைமுன்றிலின்முனைநிலாத்தவழ
விருகணேர்ந்துமுக்கண்களுந்திருமுகத்திலங்க. (10

பொரிமலர்ந்தனபொறியுழையேந்தியபுனிதன்
பெரிதுவந்தெளிவந்துநின்றனன்பிருகுவின்முன்
னுருகுகாதலோய்முத்தனுயினையெனவுரைப்பப்
பருகுமின்னமுதென்னவாய்மொழிசெவிப்படலும். (11

மிக்கெழுந்தபேருவகையின்மெய்ம்மயிர்சிலிர்ப்ப
நெக்கசிந்தையினெடுங்கணீரருவிவார்ந்தொழுகத்
தொக்கநான்மறைத்துதிகளாற்புராணநூற்றுதியாற்
செக்கர்மேனியற்பழிச்சுபுசெய்யதாள்பணிந்தான். (12

வாருணிவேட்டனவரங்கள்யாவையு
மேருவிற்பிடித்தகைவிமலனீதலும்
ஆரணமுணர்முனியகமகிழ்ந்தனன்
காரடர்மிடற்றினன்கரந்துவைகினன். (13

வரம்பெறுபிருகவைவருணனன்புகூர்ந்
தூரம்புதைபடத்தழீஇயுவந்துமைந்தநீ
யரநிலைதீர்ந்தனைபருளாக்கமெய்தினை
நிரந்தரமுத்தனுய்நீடுவாழ்தியால். (14

பிறந்துளபெரும்பயன்பெற்றபேர்க்கெலாம்
சிறந்துளவுனைநிகர்செல்வர்யாவரே
துறந்தவர்தொழுதகுதூயசோன்றனி
யறந்தழையித்தலத்தமர்தியென்றனன். (15

வேறு

அந்தலத்தினில்வருணதீர்த்தமென்றற்புதத்தொருதடமதன்
மெத்துமேல்கரையிற்சிவக்குறிவித்திவில்தளங்கொடு
பத்தியாய்நியமத்தொடர்ச்சனைபண்ணிமும்மதிவைகின
னித்தையோர்மிருகண்டுபுத்திரனெய்தினன் பிருகுவினிடை. (16

அழிவிலாமுனிபுங்கவன்றனதடிபணிந்தெழுபிருவுக்
கிழிவிலாதுயர்கூவிளத்தளமெததலத்தினுமித்தலத்
தொழிவிலாப்பலனென்றனந்தமுடைத்தெனப்பினுமோதுவான்
விழியிலாதடர்கூற்றுதைத்துவிளங்குசேவடிமிசையிடின். (17

புண்ணியப்புனல்மூழ்கிநீறுபுனைந்துமந்திரமூலநா
வுண்ணிகழ்ந்திடமுன்றேடைந்ததோடேழொன்பதோடுபதினேன்றெனு
வெண்ணிடுப்பிரதக்கிணைத்துனியன்றவொன்றுசெய்தஞ்சலித்
தண்ணல்வில்வமரத்தினேறியமர்ந்துபைந்தழைகொய்தலே. (18

கொய்தவில்வதளங்கொடுச்சிவகோசமூர்த்தியையர்ச்சனை
செய்தல்காலமெலாமுமாமுயர்தெரிசமுற்படுபூரணை
யெய்துமிந்துவின்வாரமேவிதிபாதமேயுபராகமே
மைதன்மாதமகாதியாமதிப்பிறப்பொடுசிவனிரா. (19

சிறந்தபுண்ணியகாலமற்றையவற்றினுந்திரிசென்மநாட்
பிறந்தநாளனுசென்மநாளிவையிற்றினும்பெரியோருளத்
துறைந்தகோளிருதாளினுய்த்திடினென்றுகோடிகுணத்ததா
மறைந்தபைந்தளிர்வில்வநல்குமரும்பெறற்சிவஞானமும். (20

தற்பயந்தவராவிதீர்திவசத்தின்வில்வதளங்கொடு
சிற்பரன்குரைகழலினர்ச்சனை செய்யின்மற்றவர்நிரயநீத்
தற்புதன்சிவபுரியினெய்துவரக்கணத்ததனடிநிழன்
முற்பெறுங்குரவர்க்குநூல்வழிமுறைசெய்பிண்டம்வழங்கினுல். (21

இன்னவிழ்த்தொகைவருடமீன்றவரெர்பிரானுலகத்திடை
மன்னியாள்வர்தலங்களெங்கணுமறுவில்கூவிளபத்திரம்
தன்னிகர்த்தவன்மலரடித்துணைசாத்த
றன்னினுமிப்பதியிற்கணிப்பில்பலனளிக்குப்விசேடமாய். (22

அலைதிரைக்கடல்சூழ்நனந்தலையவனிமேற்சிவபுரிகளுட்
டலைமைபெற்றதிந்நகரமென்றுதபோதனன்புகல்கிற்றனன்
கொலைவெலீச்சுறவூர்தியோனருள்குரிசின்மாமுனிசொற்படி
இலைகுழைத்தெழுவில்வமங்கைகொடெந்தைதாள்வழிபட்டனன். (23

இருள்கெடுத்தெறிசுடர்நிகரிப்பனவிரவியொப்பனபுரவியே
ழுநள்பிணித்தெழுபரிதிவெட்குவவொளியருமணிபற்பல
திருமுனின்றெறிதீபமாகெனநல்கினன்சிவனருள்பெறுப்
பிருகுவின்புகழ்நாதையோடுபெயர்ந்துதன்னுலகெய்தினுன். (24

*பத்தாவது பிருகு சாப நீங்கின அத்தியாயம் முற்றிற்று.*
*ஆகத்திருவிருத்தம் 383.*

---

## பதினோராவது
## வலைவீசும் அத்தியாயம்.

இன்னுமோர்கதையிசைப்பனத்தலத்
தன்னமென்னடையம்பிகைக்குமுன்
மின்னுவெண்பிறைமிலைந்தவார்சடைச்
சென்னியானுபதேசஞ்செய்தனன். (1

அந்தவேலையிலளியுருக்கொடு
சந்தவெம்முலைத்தையலோதிவாய்க்
கந்தன்வைகுபுகங்கைசூடிய
மைந்தனேதுமம்மநுவுணர்ந்தனன். (2

அதனையோர்ந்தநம்மண்ணல்வெள்ளிவேற்
சுதனைநோக்குபுதோன்றலீங்கிவள்
புதையிருட்குழற்புறத்தொளித்துநா
முதவுமந்திரமுணருகிற்றலால். (3

மகரமீனமாய்மறிதிரைக்கடற்
புகுதியென்றுபின்புனைபைங்கோதையை
நிகரில்கற்பினுய்நின்றுபேட்சையாற்
குகனிருந்தனன்குழைமென்கூந்தலில். (4

ஆதலாலினிநீயுமார்கலிச்
சீதவாரியிற்சிறியவாளையாய்ப்
போதல்செய்கெனப்புகன்றியாவர்க்குந்
தாதையன்னவன்சபித்தனன்னரோ. (5

இடுகுநுண்ணிடையேழையஞ்சினள்
நடுநடுங்கினள்நடலைகூர்ந்தனள்
புடையகன்றபல்புவனநாயக
கடையிகந்தவான்கருணைவெள்ளமே (6

அருளிலாதவர்க்கபயநல்குவோய்
பெருமையாம்புரிபிழைபொறுத்திநீ
கருதருங்கடுஞ்சாபநீங்குமா
றிருவர்நேடுவோயியம்பல்வேண்டுமால். (7

எனவிரத்தலுமெம்பிரான்சொலும்
புனைநறுங்குழல்புணரிசேர்தலும்
வினைகொடுந்திமில்வாணனேவலால்
வினைவல்சாலகர்விசுவார்வலை (8

அவ்வலைத்தலையடையுநிற்கொடு
பவ்வநீர்த்துறைபாதுகாத்தரு
ளெவ்வமிமில்லவனிற்சென்றில்லொடு
மைவரிக்கணுய்மகளினேம்புநாள். (9

ஆங்குநாமடைந்தறுமுகத்தவன்
ருங்குகோட்டுமீன்றநுவிடுத்துநின்
வாங்குவெள்வளைமலர்க்கைபற்றுது
மேங்கன்மின்னென்றுனெங்குநின்றுளான். (10

வேறு

ஞாலமீன்றகன்னியின்
சூலபாணிசொற்படி
சாலவுஞ்சிறியளாய்
வேலையூடமர்ந்தனள். (11

புள்ளினம்புறவெசூ
மூள்ளிலையயிற்படை
வள்ளல்கோட்சுறவமாய்
வெள்ளநீரின்மேயினுன். (12

நெய்தல்வேந்தனேர்பகற்
செய்திவல்லநுழையரோ
டெய்திஞனெடுங்கடற்
கைதைநாறுகரையின்வாய். (13

வலைஞர்வீசுசேக்கையிற்
புலவுமீன்குழாத்தொடுந்
திலகவாணுதற்பசுங்
கலவமஞ்ஞைகண்டனர். (14

விம்மிதமனத்தராய்க்
கொம்மெனக்கொணர்ந்துபோ
யம்மென்சாயலரிவையைத்
தம்மிறைக்குநல்கினுர். (15

இன்னிசைச்சுரும்புவீழ்
புன்னையந்தெரியலான்
கண்ணரம்புகாரிகைப்
பெண்ணணங்கைநோக்கினன். (16

எம்பெருந்தவத்தினிற்
கொம்பையீண்டளித்தன
ரும்பரேயென்றுள்கினு
னம்புராசிகாவலன். (17

களித்தனன்வியந்தனன்
கிளிச்சொல்வல்லியைக்கொடு
பளிக்குமாடமேற்பிறை
யொளிக்குமில்லநண்ணினன், (18

முனைவுவந்தவாறுரைத்
தனையநவ்விநோக்கியை
மனைவிகைக்கொடுத்துயர்த்
தனையையாய்வளர்த்தனன். (19

நாளுநாளுநலமிக
வாளுண்கண்ணிமலர்தலு
மாளியன்னமொய்ம்புடை
மீளிபார்த்தியம்புவான். (20

கோவைவெள்குதுவரிதழ்ப்
பாவைநங்குலக்கொடி
யாவர்திண்புயவரை
மேவுதற்குரியளோ. (21

திருவினுக்கொர்திருவனுன்
பெருவனப்பினுக்கிசை
யுருவமிக்ககாளைய
ரிருநிலத்திலுளர்கொலோ. (22

தன்னிகர்த்தகாதலர்
கன்னியர்க்கிலரெனிற்
பின்னரின்னலீட்டுவர்
முன்னரீன்றவர்க்கரோ. (23

என்றுசிந்தையாகுலத்
தொன்றவோர்ந்திருந்தனன்
மன்றல்விம்முபோதணி
குன்றுபோலுமார்பினன். (24

சுறவுருவெடுத்தவவ்
விறைமகன்செருக்குமிக்
கறைகுரற்சலதியு
மறுகியுட்கநீந்துமே. (25

திமிங்கிலகிலாதியா
யிமிர்ந்தபுன்மயிலையுந்
தமங்கநொந்கலமர
நிமிர்ந்துவால்புடைக்குமே. (26

விடுகணைபிற்கிடக்
கடிதினேடும்வங்கமும்
படவுதோணியென்னவும்
தடவுகோட்டினெற்றுமே. (27

பரவுதொல்வள்த்துட
னுரவுவாருதிப்படா
விரவுசீர்வணிகரும்
வரவுபோக்குமாறினர். (27

வேறு

ஏற்றுமீன்செய்வன்மையுமிருங்கலந்தரும்பொரு
ளாற்றுமாக்கள்கவ்வையுமறிந்தவையகற்றுவான்
வேற்றுநாடும்மீப்புகல்விக்கிரமனத்தருள்
போற்றுநங்களன்னைதன்புதவியாகநோற்றவன். (29

முன்னணிரைமருப்புடைமுழுவலிச்சுறவினைத்
திண்ணர்மைவெளிப்படச்செகுப்பரியாரவர்க்கியா
மொன்னுதற்குறுந்தொடியொருமகட்கொப்பன்மற்
றண்ணன்மீனறத்தினுண்மையிதுபிழைப்பதன்றரோ. (30

என்றுதூளிசைத்தனனிசைத்தெண்டிசைக்குனுஞ்
சென்றதிவ்வுலகில்வாழ்திருந்துவார்கலியகந்
துன்றுவாருமரியதந்தொழிலின்மேன்மைநீத்தனர்
வென்றிவேடனுடலைவிலக்கவல்லரேவரே. (31

குயிற்சலங்கவர்ந்தசொற்கொடுங்குழையணங்கொடு
வெயிற்கலனிலங்குதோள்விசாகனெய்துசாபமும்
பெயர்த்தல்வேண்டியெர்பிரான்பெருந்தவர்தனுக்கொடு
மயிற்கணன்னபன்முடிவலையுமொன்றுதாங்கினன். (32

மறுகவாரிகிழியவோடுமதலைமாக்கள்மன்னனைக்
குறுகவந்துசுறவினைக்கொல்வல்இன்றுகொன்றபி
னிறுநுசுப்பின்மங்கையையெமக்குநல்குகென்னலு
மறுதிசெய்துசலவர்கோனுமங்ஙனாகுகென்றனன். (33

வேறு

அவ்வரசன்புகன்றதற்பினலைசுருட்டுமொலியாழியடைந்துமூவாச்
சைவமுதனெடுங்கயிற்றுக்குறுங்கண்வலைதிரையெறிந்துதறுகண்மீனம்
மொய்வலைப்பட்டமையுணர்ந்துசுருக்கிமுருகனையனையமூர்த்திகோத்தான்
செய்வதொன்றுமைந்துதொழிலுடையோற்குமிதுபுகழோதெரியுங்
காலே. (34

அஞ்சுவருகொலைமகரமடர்த்தழித்தோம்யாமினிநீயமிழ்தத்தீஞ்சொல்
வஞ்சியையிந்துரைத்தவுரைவழுவாமலோர்புகெனவள் ளல்கூறக்
கஞ்சமலர்க்கழிச்சேர்ப்பனன்னவற்கேகொடுப்பமுயல்காலைமாலைச்
சஞ்சரிகநிரைமுரலுமளகவாள்நுதற்பிடியுந்தாயுங்கேட்டார். (35

ஐயமிரந்தூணிரப்புமிரவாளியிவனிவன்பாலடைதலொல்லேம்
வெய்யவிடமிசைதுமெனவிருவருநஞ்சயின்ருவிவித்தாராங்குப்
பொய்யிகந்தமெய்ம்மொழியோனத்திறங்கண்டனனெண்டோட்
பொருப்பைநோக்கிச்
செய்யதளிரடிச்சிறுமிவேற்றுடம்பாயினள்யானென்செய்வதென்ருன். (36

தெருமருசிந்தனையொழிதியுயிர்தணந்தாளென்னினுமத்திருவையூழிற்
றருதல்புரிகெனவுரைப்பத்தாபதவேடக்கடவுள்சங்கமார்க்கும்
பெருகுபுனற்றண்டுறைவனன்றதென்றுளத்துவகைபெருகாநிற்பக்
கருநிறவாள்விழிக்காடியைக்கோடியெனவுதகத்தாற்கரத்தினீந்தான். (37

முற்றுமுயிர்க்குயிராகிநிறைந்தபரன்முளரிமலர்ந்தனையசெங்கை
பற்றுதலுந்துயிலுணர்ந்தாங்கெழுந்தனள்பூங்கரும்பெழுதும்பணைத்
தோள்வல்லி
மற்றதுகாண்டலுமிறும்பூதடைந்தனன்மெய்மயிர்பொடிப்பக்குளிர்ப்ப
வள்ளங்
குற்றமில்வாய்மையினிறப்பமகிழ்ந்தமிர்தசாகரத்திற்குளித்தொத்தான்.
(38

*வேறு*

மத்தவாரணமுரித்துரிபோர்த்தவானவனே
யித்தபோதனவடிவுகொண்டணைந்தனனென்னு
முத்தலங்கன்மாலிகைபுனைமுழுவலிதெருண்டு
பைத்தபாம்பணிபதங்களில்வீழ்ந்தனன்பணிந்தான். (39

தாமரைத்தடங்கண்கணீர்ததும்பிவார்ந்தொழுகப்
பூமழுப்படைகரந்தவபொறியிலேனினைத்
தேமலர்ப்பொகுட்டிருந்தவன்செங்கண்மால்காணுத்
தாமறைத்தவர்துணைபொருளெனவுணர்ந்திலனுல். (40

ஈதுநோற்றருண்மழவிடையுயர்த்தவலிமையோர்க்
காதிதேவமுவலகநாயகவடிவணங்குங்
காதலன்பினேர்க்கஞ்சலென்றெடுத்தகைக்கமல
பூதவாகனவெனத்துதிசெய்தனன்புகல்வான். (41

எளியனேன்மனைக்கிழத்தியுமுன்னமங்கிறந்தா
ளளிசெய்துய்யுமாறநள்கெனவருட்கடலெங்கோ
னெளிகொடுஞ்சிலைப்புருவஞ்செந்நெறிப்பொடுநோக்கக்
கிளிமருட்டுதீங்கிளவியுமெழுந்தனளன்றே. (42

பின்னாந்நகர்துறந்தயல்போகிறபெர்மான்
றன்னதுட்கொளாவெழுதலுஞ்சாலிகர்தலைவ
னென்னருப்பெறற்புதல்வியையெங்குலக்கொழுந்தைப்
பன்னுநான்முறைகடிமணம்புரிகெனப்பகர்ந்தான். (43

ஊன்றுசீருடையிப்பதிக்குத்தரதிசையின்
மூன்றுகூப்பிடுவரைப்பினின்முடித்துமங்ஙனமென்
றுன்கெள்வியோரகத்துறையின்னமுதனையான்
றேன்றுவற்றுதாரவனெடுமவ்வுழைச்சென்றுன். (44

அனவரதகலியாணனுண்டுமணக்கோலங்கொண்
டினவளைக்கைமடமானையியல்புழிவேட்டனனம்மா
பனைதிரண்டகனதிண்டோட்பரதர்குழாஞ்சூழ்ந்துவப்ப
முனமுயன்றதவமேதோமொழிதுய்யாமெனற்பாற்றே. (45

அன்னதலங்கலியாணமங்கலமென்றன்றுதொடுத்
தெந்நிலமுமெடுத்துரைப்பவிசைபோயதிதுவன்றி
மன்னுசனவம்பல்குழீஇவந்துவதிதலினுலும்
பன்னுபெயரூதிகாக்குராமமெனவும்பகர்வார். (46

அலறுகுரற்பெருகதியலையீர்க்கப்படுதலினற்
றிலகநுதலுமைதிளைசேர்மடந்தையெனுந்திருநாம
மிலகுசுடர்வெயில்பரப்புமிணையிகந்தமெய்முழுது
நிலவுபொழிநீற்றழகனிகழ்த்தவடைந்தனள்மன்னே. (47

தோலடிச்செஞ்சூட்டன்னந்தோடவிழ்பங்கயப்பொகுட்டு
மேலுறைதெண்கழிக்கானல்வியனுடன்முகநோக்கி
நீலமீடற்றெப்பெருமானின்கினைஞரோடுநீ
சாலவுயர்பயனிரண்டுஞ்சார்தியெனவரமீந்தான். (48

ஆங்கவர்கட்கைந்தெழுத்துமருள்செய்துவரிமுகரக்
கோங்கமுகைசுமந்தோசியுங்கொடிமருங்குற்றேவியுட
னீங்கினன்மங்கலநாதனீங்காதத்தலனிலெழுந்
தோங்கியதோர்சிவலிங்கமொளிகிளர்திப்பியவடிவாய். (49

மற்றதன்பேர்கலியாணநாயகமாமருங்ககலாச்
சிற்றிடைப்பேரகலல்குற்செங்கனிவாய்வெண்முரன்
முற்றிழைமுற்றுமழலைமொழியுமையாட்கபிதானம்
சொற்றனர்கள்கலியாணசுந்தரியென்றெல்லோரும். (50

கொண்டலினங்கண்படுப்பக்குளிர்திங்கண்முதுகுரிஞ்சும்
விண்டொடுமாளிகைசூழ்ந்தவிக்கிரமவளநகரில்
வண்டுளாபூந்தார்வாகுரேசற்குவடபாலிற்
றிண்டிறல்வெஞ்சுறவோடைசேணிடைத்தோற்றுவதென்றும். (51

வேறு

உத்தரகோசமங்கையொப்பிலிச்சரிதைசொன்னே
னத்தலைவதியுமுத்தீயறுதொழிலாளர்மேன்மை
பொய்த்துறைகடிந்தீர்கேண்மின்புகலரிதொருவரானு
மெய்த்தவாறுரைக்கேன்கேட்கிலிடர்புரிவினைகணீங்கும். (52

அனைவருமன்னேனெற்றியழல்விழிபிறவிநீத்த
முனைவனதுருவேயாவர்முறையினுசாரமுப்போர்
வினையறுசௌசமாதிகிரியையின்மிக்கோர்தோய்வர்
புனலின்முப்போதுஞ்செய்வர்பூசனைதிரிகாலத்தும். (53

முதுமறைமுறையினங்கமுற்றினேர்சமயமுன்னுஞ்
சதவிததீக்கைகயுள்ளோர்சைவநூலிருபத்தெட்டு
முதிர்தரவுணர்ந்துகற்றோருபாகமமவற்றினேதும்
விதிவழித்தொழிலும்வல்லோர்விழைபவர்சேர்மயாகம். (54

வயிச்சுவதேவகன்மாகிழ்ந்தயர்பவர்வழாம
லியற்றுமென்பாசனத்தரிலங்குகண்மணியிற்செய்த
வெயிற்செய்தண்டலமூம்பல்வேறணிகளுமுடையோர்மாலை
யுயிர்த்தவெண்ணீலவுதோற்பவொளிர்திரிபுண்டரத்தர். (55

சந்தணிதிலகர்போதுசாத்தியகையர்மாசி
லந்துகிலுடையருமினமைபவித்திரகரத்தர்
சுந்தரமார்பிற்ருழ்ந்ததூநிறவுபவீதத்தர்
சிந்தனைதிரிதலில்லோர்தெற்றெனயாவுந்தேர்ந்தோர். (56

அன்னவர்காணிலன்றேயகத்திருளனைத்துங்கிழ்பான்
முன்னுசெங்கதிரோன்கண்டுமுனிசுறும்பனியினீங்கும்
பன்னருங்கானமெல்லாப்பகர்ந்தவர்க்கருகமீத
லுன்றுபாத்திரங்கண்முன்றினுயர்ந்தபாத்திரமேயாவார். (57

அனுவரையாதொன்றேனுமளித்திடினதுவுநூறு
குணமதிபலத்தைநல்குங்கொடுத்தவர்பகிழ்ச்சிகூறிற்
கணவீரங்குரவுபூழைகரந்தையாசறுகுவன்னி
யிணரவிர்கொன்றைசூடுமெதிரிலானுவக்குமன்றே. (58

இப்பரிசாங்கணன்றியெத்திலத்தினுமற்றில்லைச்
செப்பிலன்னவர்பாலென்றுசிவகதைவினவல்வேண்டு
மெய்ப்பொருட்காதைகேட்போர்வினவுவோருவக்குமாறு
கைப்பொலிந்தவிர்பொனுழிகனங்குழைநுழைநூற்றூனை. (59

கொத்தவிழ்நறுந்தார்மாலைகுளிர்வரைச்சாந்தஞ்சாத்தி
யத்தகுதவிசிலேற்றியாய்மலர்கரத்திலேந்தி
நித்தனைவழிபட்டேநன்னெறியினர்ச்சித்துமாறுப்
பத்தியானிதியமீவோர்பயன்றலைப்படுவரன்றே. (60

ஒருமுதலுவப்பின்வைகுமுத்தரகோசமங்கை
யரிதுணர்சூதிநூன்முற்றளந்தவர்க்கறியலர்குந்
தெரிவரிதன்றியார்க்குந்திருந்தியவொழுக்கினின்ற
பொருவிலிர்நூர்பாலன்பாய்ப்புகன்றனமிப்புராணம். (61

இருதலைச்சிரந்தன்னேர்கையேந்துவோனடிக்கீழ்வேட்கை
பெருகியாத்திகராய்வாழும்பெருந்தகையவர்கட்கல்லா
லுரியதன்னிலையினில்லாதொழுகுபுன்பதிதரோடும்
பரிவினுத்திகர்பல்பேதப்பாசண்டர்க்குரைக்கொணுதால் (62

காதலிற்கனிந்துசொல்வோர்கருத்தொடுவினவுவோர்க
ளாதரித்தெழுதுகிற்போரருவினைமுழுதுநீத்து
மேதகுசெல்வங்கல்விவியன்புகழாயுளீட்ட
மேதமில்புதல்வர்ப்பேறுமெய்துவரிடர்நோய்தீர்வர். (63

தரியலர்ச்செகுத்துநாளுந்தன்கிளைதழைத்துநீட
விரிதலைநிலத்தின்வாழ்வர்மெய்ம்மையேயிம்மையம்மை
வரிநெடுங்கண்ணிபங்கன்வளர்புரத்தடைந்துவீறு
புரிசிவகணங்களோடும்பொலிந்துநித்தியராய்வாழ்வார். (64

பதினேராவது வலைவீசுமத்தியாயம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 447.

திருவுத்தரகோசமங்கைப் புராணம் முற்றிற்று.



சிவமயம்.

# திருவுத்தரகோசமங்கைத் தல புராணம்.

## உரை நடை.

உரைநடை ஆக்கம்:
பசும்பொன் வித்துவான்
கு. ஆறுமுகம் பிள்ளை,
தமிழாசிரியர்,
அரசர் உயர்நிலைப் பள்ளி,
இராமநாதபுரம்.



| தேவன் திருப்பெயர்கள்: | தேவி திருநாமம்: |
|---|---|
| 1 மங்களநாதன். | 1. மங்களேசுவரி. |
| 2 பிரளயாகேசுரன். | 2 மங்களதாவினி. |
| 3 துரிதாபன் | 3. புட்பதவி. |
| 4 காட்சிகொடுத்த நாயகன். | 4. சுந்தரநாயகி. |
| 5 கல்யாணசுந்தரன். | 5. பூண்முலையாள். |
| | 6. கல்யாணசுந்தரி. |
| | 7. திரைசேர்மடந்தை. |

| தலப்பெயர்கள்: | தீர்த்தங்கள்: |
|---|---|
| 1. மங்களபுரி. | 1. அக்கினி தீர்த்தம். |
| 2, பிரமபுரம். | 2 பிரம தீர்த்தம். |
| 3. சாத்துவீகத்தானம். | 3. இந்திர தடாகம். |
| 4 வியாக்கிரபுரம். | 4. சார்வதி. |
| 5. ஆதிசிதம்பரம் | 5. கௌமாரதீர்த்தம். |
| 6. வைதிரிகாரணியம். | 6. பதுமதீர்த்தம். |
| 7. பார்ப்பதிபுரம். | 7 சீதளதீர்த்தம். |
| 8. சித்தகேந்திரம். | 8. தேவிதீர்த்தம். |
| 9. தெக்கணகாசி. | 9. அரித்துவச கூபம். |
| 10. பிரதிகோசபுரம். | |
| 11. சதுர்வேதபுரி. | |
| 12. கல்யாணபுரம். | |

நடராசப்பெருமான் பெயர்:

1. இரத்தின சபாபதி.
2. ஆதிசிதம்பரேசன்.



உ
சிவமயம்.

# தோற்றுவாய்.

மறைகளின் முடிவாலும், வாக்காலும், மனத்தாலும் அளக்கொண்ணுதவன்—நிறைகுடம்போல் யாண்டும் நிறைந்த நிறைபொருள்—முடிவில்லா ஆற்றல் படைததவன்—வரம்பில்லா இன்பம் உடையவன்—முற்றும் உணர்ந்தவன்—பேரருள் வாய்ந்தவன்—பசுபதியாகிய சிவபெருமான், ஆன்மாக்களுக்கு அருள்புரியும் பொருட்டு ஒரு திருமுகமும், முக்கண்கள், கங்கை திங்கள் கொன்றை சூடிய சடை, தோடுடைய செவிகள், நீலகண்டம் மான்மழுக் கரங்கள், செம்பவளத் திருமேனி, சிலம்பொலிக்கும் திருவடிகள் உடையராய்த் திருக்கைலாயத்திலே செம்பொற்றிருக்கோயிலிலே கணநாதர்கள் சேவிப்பக் கொலுவீற்றிருக்கின்றுன். முனிவர்கள் வேதகீதங்கள் பாடுகிறுர்கள். சுந்தரன் கதியும் துதியும் செய்கிறுன். நாரதன் இன்னிசை மீட்டுகிறுன். அதனுல் சராசரங்களெல்லாம் இன்ப நித்திரை செய்கின்றன.

திருக்கோவிலுக்குமுன் ஓர் சிவதீர்த்தம் (மானசரோவரம்) அதன் கரையிலோர் ஆயிரக்கால் மண்டபம். அதன் நடுவே நந்தியம்பெருமான் நடுநாயகம் வீற்றிருக்கின்றுன். சூழ முனிவர்கள் புடைசூழ்ந்திருக்கின்றனர். அவர்களிலே சகலாகமங்களையும் ஓதியுணர்ந்து தெளிந்த சனற்குமார முனிவன். ஒப்புயர்வற்ற ஞான சிகரமாகிய நந்திதேவனை அடிபணிந்து வணங்கித் துதித்துக் கேட்கின்றுன்· பெரியோய்! வியாக்கிரபாதன், பதஞ்சலியாகிய இவ்விருவருடைய சரித்திரத்தைத் தேவரீர் கூற யாங்கள் கேட்டு இன்புற்றேம். மேலும் வேண்டுவதோர் விண்ணப்பமுண்டு.

அங்கு இங்கு என்றுதபடி எங்கும் நிறைந்தவன் இறைவன். உயிர்கள் மேலுள்ள பெருங்கருணையால் திருக்கோவில்கொண்டு வீற்றிருக்கும் தலங்கள்—மேரு மந்தரம், கைலாயம், காளத்தி, காசி, காஞ்சி முதலிய எண்ணிறந்தவைகள் என்று தேவரீர் முன்னே அருளிச் செய்தீர். அவைகளிலே மாதவத்தால் மேம்பட்ட சிவஞானச்சீலர்கள் எத்தலத்திலிருந்து அருந்தவ மேற்கொண்டார்கள்?

எத்தலத்திலே வேதாகமங்களின் மேன்மையையும், ஐந்தெழுத்துண்மை யையும், பிரணவத்தின் பெருமையையும் இறைவனே முன்வந்து உப தேசிக்க அவர்கள் கேட்டார்கள்? எத்தலத்தில் வாழ்கின்றவர்களுக்கு ஈசன் நேர்வந்து இன்னருள் புரிந்தான்? எல்லாத் தீர்த்தங்களிலும் மேலான தீர்த்தங்களைத் தன்னகத்தேயுடையது எத்தலம்? எல்லா மூர்த்திகளிலும் சிறந்த மூர்த்தியாய்ப் பல விளையாடல்கள் புரிந்தது எத்தலம்? என்பவைகளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உரைத்தருளல் வேண்டும் என்று வினவ, நந்திதேவன் கூறியவாறு சனற்குமாரன் சூதனுக்குரைக்க, சூதமா முனிவன், சவுனக முனிவன், முதலியோர் கேட்கப் பின்வருமாறு பேசுகின்றான்

சிவபக்தியிற் சிறந்த முனிவர்களே! பதினெண் புராணங்களிலே பவுடியோத்தரம் என்பதொன்று. அதில் பல காண்டங்களிலே க்ஷேத்திர காண்டமென்பதும் ஒன்று. அதிலே நீங்கள் வினவிய எல்லாச் சிறப்புக் களும் ஒருங்கேயுடைய தலமொன்று சொல்லப்படுகிறது. செயற்கரிய பெருந்தவங்களைச் செய்து அதனால் சித்த சுத்தியைப்பெற்று, அப்பால் சிவஞானத்தையடைந்து, அதனால் அரிதில் அடையக்கூடிய முத்தியை, விரும்பிக் கேட்பவர்களுக்கு எளிதில் ஈயவல்லது.

முந்நாட்டிலும், வேறெந் நாட்டிலும், நன்றாகிய பாண்டி வளநாட்டிலே பாய்ந்தோடும் வையை என்ற தெய்வ நதி ஒன்று உண்டு அது என்றும் வற்றா இனிய நீரொழுக்குடையது. மேற்றிசை மலையில் தோன்றி, நாற்றிசை பரவிச்சென்று கீழ்த்திசைக் கடலிற்கலப்பது. வேகித்து வருவது. ஆதலால் [1]வேகவதி என்று விளம்புவார்கள். மலை படு பொருள்களை வாரிவந்து திரையாகிய கரங்களால் இருமருங்கும் எடுத்தெறிவது அந்நதியின் தென்பால் ஓர் தலமுள்ளது. தூய்மையும் வாய்மையும் தோயப்பெற்றது. தீவினை யாவையும் சீய்க்கவல்லது மானி டர் யாவரும் வாழ்த்துகின்றது புண்ணியமோங்கிய கண்ணியப்பதியாம் இருபெருந்திருவும் மருவியதாகும். மண்ணில் முந்திய மங்கை என்ற தலம். உத்தரகோசமங்கை என்று உலகம் புகழ்வது. அதன் மகிமையை, நமது ஞானகுரு நமக்கு அருளியபடி நாம் நுமக்கெடுத்துரைப்போம்.

---

1. வேகவதி கிருதமாலை, சிவகங்கை, சிவஞானநதி, எனவும் பெயர்களுண்டு.

சைவசமய ஒழுக்கம் சான்ற தவமுடையீர்! நீங்கள் விரும்பிக் கேட்ட தலம் இப்போது கூறிய உத்தரகோசமங்கையே யாகும். அத் திருப்பதியில், அக்கினி தீர்த்தம் என்பதோர் பொய்கையும், அதன் பக்கத்தே ஞான உருவாய் முளைத்தெழுந்து மங்களநாதன் எனப்பெயர் கொண்ட பாதாளலிங்கேசுரனையும் காணலாம். அத்தலத்திற் கொப்பானதோர் தலமும், அத்தீர்த்தம் போன்றதோர் தீர்த்தமும், அம்மூர்த்திக்கொப்பானதொரு மூர்த்தியும் இம்மண்ணுலகில் எங்கும் தேடினும் இல்லையென்று இவ்வுலகிற்கு எடுத்துக் கூறுங்கள்!

## தலப்பெருமை

உத்தரகோசமங்கை என்று கேட்டவர் உயர்ந்த நோக்கங்களைப் பெறுவர் உத்தரகோசமங்கை என்று சொன்னவர் சித்தசுத்தியை அடைவர். உத்தரகோசமங்கை என்று ஒருகணம் ஒருமையுடன் சிந்தித் தவர் உயர் தருமத்தைச் சார்வர். அதில் அகத்தூய்மை புறத்தூய்மை யுடன் வசித்தவர் அட்டாங்க யோகபலனையாளுவர். உத்தரகாசி முதலிய புண்ணியத் தானங்களெல்லாம் வாழ்வின் இறுதிக்காலத்தில் தான் உயர்கதியளிக்கும். இத்தலம் இம்மையிலேயே நன்மையனைத்தை யும் நல்கி, மறுமையில் பரமுத்தியைப் [2]பயக்கவல்லது ஆகையால் இது, தனக்குத்தானே ஒப்பாவதன்றிப் பிறதலங்களை யிடுசொல்ல இயலாது. எனவே இப்பதியை நீங்கி வேறு பதிகளிற் சென்று தவம் செய்தல், விட்டிலுள்ள செல்வத்தை ஓம்பாது விட்டுவிட்டு வேறு புதிய பொருளைத் தேடி அரிப்பரித்து அலைவது போலாகுமல்லவா?

ஏனைய தலங்களிலே யிழைக்கப்பட்ட கொலை களவுகள் காமம் பொய் முதலிய மாபாதகங்களும், இத்தலத்தின் எல்லையில் அடி வைத்த தும் ஆழித்துரும்பதுபோல் அங்குமிங்கும் அலைந்து அலக்கழிவு செய்யும அவைகளின் ஆற்றலழியும்—வீரம் பூரமருந்து வேகம் மெய்யில் பரவிய வுடன் கோரமான கொடுநோய்கள் குலைவதுபோல அத்தலப் பெருமைக்கு எல்லைக்கோடாக அதில் நிகழ்ந்த சில அரும்பெரும் நிகழ்ச்சி களைக் கேட்பீர்களாக!

நூறுகோடி தேவர்கள் நொறுங்கினர். ஆறுகோடி பிரமர்கள் அழிந்தார் என்ற நியதியின்படி அவர்களுக்கும் அவ்வாறு நேர்வது தேவ கால நியதி. இந்திரனேயானாலும் பிரமனேயாயினும் தோற்றம் ஒடுக்கம் உடையவர்களேயாவார். அவர்களுக்கும் இடைக்காலத்தில் இன்ப

2. கொடுக்க.

துன்பநிலை யேற்படுகின்றன. இராதந்தர கற்பகாலத்தில் உலகைப் படைத்து அதில் பெரும் மாயையைப் பரப்பிய நான்முகனுகிய பிரமனுக் கும் மனங்கலங்கி நிற்குநிலை ஒரு காலத்திலேற்பட்டது உயிர்களை யுண்டாக்கி அவைகளின் பேரில் கருணை ததும்பவேண்டிய உள்ளத்தில் கனல் மூளுவதுபோல[3] சினத்தீ மூண்டது. அதாவது உயிர்களின்மீதுஇரக்க மற்ற நிலை யேற்பட்டது. அகமகிழ்ச்சியையும், முகமலர்ச்சியையும் அழித்துக்கொண்டு வருகின்ற அந்த [4]இராசச குணத்தைக்கண்டு அஞ்சி ஞன் பிரமன் தன்னை வந்தலைத்த அராக்சத குணம்படைத்த இராசச வினையாகிய தீவினையை அகற்ற எண்ணினுன்.

அவ்வினையைப் போக்குவது தவவினையேயன்றிப் பிறிதில்லை. எனவே தவம் புரிவதில் தாகங்கொண்டான். புண்ணியவினை புரிவ தாயிருந்தால் அதற்கேற்றதொரு இடமும் காலமும் வேண்டும். காலங் கருகி இடத்தோடு செய்தால் சிலருடைய செய்தவங்கள் சீர்படுமல்லவா! அதற்குரியதோர் தெய்வதலம் தேடினுன் [5]சதுர்முகன், மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மும்மையால் உயர்ந்த அப்பெரும் (மங்கைப்) பதியில் செம்மைசால் சிறந்த செய்தவமேற்கொண்டான். இரவும் பகலும் இரு போதும் இறைவனடியிற் பிரியாது ஏங்கி நின்ருன். ஐம்பெரும் பூதங் களையும் படைத்து ஐந்தொழில் நாடகம் நடத்தும் ஆதியந்தமில்லாத அமரநாயகன், நான்முகனுக் கருள் புரிய நாட்டங்கொண்டான். பாதலத்தினின்றும் ஓர் சிவலிங்கம் முளைத்துப் பேரொளி பரப்பிக் கொண்டு தராதலத்தின்மேல் தோன்றிப் பிரமனுக்கு இன்னருள் புரிந் தான். அன்று முதல் அப்பதி பிரமபுரம் என்று அழைக்கப் பெறுவதாயிற்று சதுர்முகன் தவம் புரிந்து, ராசசம் நீங்கிச் சாத்துவிகம் ஓங்கி நற்பயன் பெற்றதால் அப்பதியைச் சாதவீகதானம் என்றும் சாற்றுவர் மேலோர்.

வியாச முனிவனுக்கு வெகுநாள் நினைவொன்றிருந்து வந்தது. அதற்கேற்றதோர் தெய்வத்தானத்தைச் சிந்தித்துத் தேடிக்கொண்டிருந் தான். அந்நிலையில் பிரமனுக் கருள்புரிந்த பெற்றியை யுணர்ந்த வியாச முனிவன் அத்தலத்தில் அன்புற்ருன். காண ஆர்வமீதூரப் பெற்ருன். அங்குற்ருன். நாலுமறை ஞானமும் வேண்டும். நான்கு வேதங்களையும் வழிமுறையே வகுத்தமைக்க வேண்டும். அவைகளுக்குத் தானே அதிகாரி யாகவும் வேண்டும் என்று நெடுநாள் எண்ணிவந்த இக்கருத்தை நிறை வேற்றுவதற்கு இதுவே ஏற்ற தலம் என்று இறுதியாய் உறுதி கொண்டான்

---

3. சினமாகிய தீ. 4. கோபகுணம். 5. பிரமன்.

நான் மனப் பொருளை நண்ணலாம். எதனால்? நல்ல தவத்தால் தான் தவமென்பது வாய்ப்பேச்சளவில் ஆகக்கூடியதல்ல. உடலுக்குற்ற துன்பங்களையெல்லாம் ஒறுத்தாக வேண்டும். கள்ளத்தைக் களைந்துவிடவேண்டும். உள்ளத்தை யிலக்கு நோக்கி ஊன்றல் வேண்டும் இந்த நிலை முதிர்ந்தால் அங்கே அருளூற்று உதயமாகும். அப்போது சிந்தித்தது சித்திக்கும். எனவே இறைவனை எண்ணி யிருந்தவமிருக்க எண்ணங்கொண்டான் வியாசன். தவத்திலமர்ந்தான். ஒன்றாய்ப் பல வாய்த் தேவ வருடங்கள் நூறு சென்றன.

வேண்டுவார் வருந்தி வேண்டுவதைத் தருகின்ற மெய்ப்பொருள் வெளித்தோன்றி மெய்யன்ப! வியாசமுனிவ! "வேதமனைத்தும் பொருள் விளங்க விளங்கும் அறிவால் மேம்படுவாய்'' என்று அருள்கூர்ந்து மறைந்தான். அந்த ஞானமுனிவனும் அளவற்ற இன்பப் பரவசனாகி, அன்று முதல் ஓர் இலந்தை மரத்தடியில் அமர்ந்து, நான்கு வேதங்கள் முழுமையையும் இறைவனருளிய வரத்தின் மகிமையால் ஓதியுணரப்பெற்றான், மாசற்ற அருள் ஞானமும் உற்றான். வெறும் வியாசன் வேதவியாசனானான். வியாசமுனிவனுமாயினான். அக்காரணத்தால் அன்றுமுதல் அத்தலம் [6]வெதிரிகாரணியம் என்ற மெய்ப்பெயரால் வழங்கலாயிற்று.

இந்த வரலாற்றுப் பெருமையையுணர்ந்த [7]புலித்தாள் முனிவன் பதஞ்சலி முனிவன் ஆகிய இவ்விரு பெரியாரும். அத்தலத்தின் மகிமையை நினைந்து நினைந்து அன்பால் உந்தப்பட்டு அப்பதியில் வந்தமர்ந்து ஐந்தெழுத்தின் உண்மையை அறிய ஆர்வங்கொண்டார்கள். கருதியதைப் பெற அரிய தவம் புரிந்தார்கள் அன்பர் தம் மெய்யன்பிற்கன்றி வேறெதற்கும் அறிதற்கரியவனாகிய எந்தையாம் இறைவன் வெளித்தோன்றி ஐந்தெழுத்துண்மையையும் பிரணவப் பெருமையையும் அவர்களுக்கருளினான் அவர்களிலே புலித்தாள் முனிவன், இந்த வான்பதி என்பெயரால் அழைக்கப்படல் வேண்டும் என்று விருப்பினான். அன்று தொடங்கி வியாக்கிரபுரம் என்று விளங்கலாயிற்று.

வீடுதோறும் கலையின் விளக்கம். வீதியெங்கணும் வேதமுழக்கம். நகாடங்கலும் மாளிகையிட்டம் அணி அணியாக அழகுசெய்து விளங்கும் வியாக்கிரபுரியின் மேன்மையை இப்போது ஏதென்றெடுத்துரைப்பேன்! அத்தலம் தன்னை விரும்பி வந்தடைந்வர்க்குத் திருவருள்நெறி இன்னதென்பதைத் தெரிவித்து சின்மயமாய் விளங்குவது பற்றி அதனை

---

6. வெதிரி—இலந்தை. ஆரணியம்—வனம்.
7. வியாக்கிரபாத முனிவன்.

ஆதிசிதம்பரம் என்று மதித்து அவனி முழுவதும் வணங்கும், ஆதலால் அது ஆதிசிதம்பரம் என்றும் அழைக்கப்படுகின்றது.

அந்நகரம் நான்முகனது கர்பகாலமாகிய பிரமகற்பகாலத்திலும் உலக முழுதும் அழியும்போதும் இது அழியாததாகும். அத்தகைய பதியிலும், ஏனைய தலங்களிலும் எனக்கினியானும் அன்பர்தம் மனக்கினியானும் ஆகிய ஈசன் மகிழ்ந்துறையும் இலிங்க மூர்த்தங்கள் பற்பலவாகும் அவை யனைத்திலும் சிறந்தனவாயின ஓரிரண்டு இலிங்கங்கள், சிற்பியால் கருவியால் செய்யப்படாதன. இயற்கையில் (சுயமாக) எழுந்தன. பாதாலந் தொடங்கி மண்வரை அடிமுடியுடையன. ஆதல்பற்றி, பாதள இலிங்கமென்று பார்முழுதும் பரவப்படுவனவாகும். அவ்விரண்டில் ஒன்று உத்தரகாசியில் உள்ளது மற்றொன்று தென்கயிலாயமென்று சீரோங்கிய உத்தரகோசமங்கையில் உள்ளது. அவ்விரு நகரங்களும். பத்தி பரவகராய் நித்திய நிமலனைப் பரவுகின்றவர்களுக்கு நித்தியமாகிய முத்தியைச் சித்திக்கச் செய்வனவாகும். எனவே அவ்விரு பகுதிகளுக்கும் உயர்வான அல்லது ஒப்பான வேறொரு பதி, இம்மேதினியில் எங்கணும் காண்பதரிதாகும்.

நக்கீரர் முதலான தெய்வப் புலவர்களால் நற்சீர்பாட மெய்ப்புகழ் பெற்றது. சம்பந்தர் சமணர்களுக்கிடையில் எழுந்த மதவாதத்தில்— புனல்வாதத்தில் அவ்வம் மதங்களின் வேதப்பொருளின் மெய்மையை விளங்க வைத்தது. வேகவதி என்று வியந்துரைக்கின்றதாகிய வையை நதியாம். அதன் தென்கரையில் பாரோங்கிய பேர்தாங்கிய கடம்ப வனம்—மனங்கவர் மதுரைமா நகரம் காணப்படும்.

அந்நகருக்குத் தென் திசையில், இரண்டு யோசனை எல்லையில் திருச்சுழியல் என்னும் தெய்வதலம் தென்படும். காண்பதற்கு இனிய கவினெலாம் நிறைந்து காட்சிதருவது. செஞ்சடைக்கற்றையும் நீல கண்டமும் உடைய நிமலன்—சிவபிரான், பிரளயத்தும் அழியாத பெருந்தலம் இதுவென்பதை யுணர்த்த பிரளயாகேசுரன் என்ற பேர் தாங்கி விளங்குகின்றான்.

அம்மேன்மையும் பான்மையும் வாய்ந்த திருச்சுழியலாம் திருப்பதியின் கீழ்திசையிலே நான்கு யோசனை தூரத்தில் ஓர் பழம்பதி யுள்ளது. முன்னே நாம் கூறிய மூதூராகும் அது. மங்கலபுரி என்று வழங்குகின்றது ஏன்; தன்னைத் தஞ்சமென் றடைந்தவர்களுக்கெல்லாம் தஞ்சந்தந்து மங்கலம் புரிவதால். அதுமட்டுமல்ல; முழுதுலகும் ஈன்ற

அன்னே—அம்பிகை, முழுமுதற் பெருமானுக்கும் மங்கலந் தந்தருள்கின்ற படியால் மங்களதாவினி—மங்களேசுவரி என்று மாநிலம் புகழ அங்கே வாழ்கின்ருள் அதனுலும் அத்தலம் அப்பெயர் பெற்றதாகும்.

இவை நிற்க, இதுகாறும் தலப்பெருமைபற்றிச் சில சாற்றினேம் இனி தீர்த்தச் சிறப்புப்பற்றிச் சிறிதுரைப்போம்.

## தீர்த்தமகிமை

கங்கை, காளிந்தி, யமுனே, கோதாவரி, காவிரி முதலிய புண்ணிய நதிகள் தோன்றுமுன்னரே தோன்றியதாகும் அத்தலத்தில் ஓர் அக்கினி தீர்த்தமென்பது. தீயை நினேவின்றித் தீண்டினுலும் சுடும். அதுபோல், வேறு நினேப்பின்றித் தொட்டாலும் அது பாப வினேகளேச்சுடும். ஆதலால் அது அப்பெயரால் அக்கினிதீர்த்தம் என்று அழைக்கப்படுவ தாகும். அதில் நீராடி, அதன் கரையில் தங்கி, ஐந்தெழுத்தோதி, முன்னே முன்னேயோர்களே நினேந்து கடனுற்றிப், பின்னே தானங் கொடுத்து, மங்களநாதனே மலரிட்டுப் பூசித்து, மெய்யன்போடு வழி பாடு செய்தால் மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே என்ற மாசற்ற மகிழ்ச்சியைப் பெறுவர். அதன் புனித நீரால் அத் தலத்து அன்னேயையும் அத்தனேயும் ஆட்டினுல், இவ்வுலகத்து எல்லாத் தீர்த்தங்களேயும் கொணர்ந்து ஏககாலத்தில் அபிடேகித்த பயனே யடைவர். நோன்பு கொள்ளுதல், பூசைபுரிதல் தான தருமம் தருதல், வேள்வி புரிதல், செபதபம் செய்தல் தியானத்தில் அமர்தல், முதலிய புண்ணிய வினேகளே அதன் கரையிலேயே அமர்ந்து புரிந்தால் ஏனேய தலங்கள் தரும் பலனேப் பார்க்கிலும் பன்மடங்கு மீசுரமான பலனேத் தரும் என்பதில் ஓர் ஐயுறவும் வேண்டாம்.

அத்தீர்த்தத்தை தீண்டுவதிலும் சிறப்பிருக்கிறது. பார்ப்பதிலும் பாக்கியமிருக்கிறது. உட்கொள்வதால் உயர்வு பல உண்டு. நியமத் தோடு நீராடுவதால் நேரும் பலனே பற்பலவாம் முற்பிறப்பிலே அறிவுநூல் பல அறிந்து, ஒழுக்கமேற்கொண்டு, நோன்பாற்றி, தானம் பலபுரிந்து, தவமியற்றிய சன்மார்க்கருக்கல்லாமல் மற்றையோர்களுக்கு இப்பிறப்பில் இத்தீர்த்தத்தில் நாள்தோறும் நீராடக் கிடைப்ப தரிதாகும். நிற்க, இனி மூர்த்தியின் கீர்த்தியைப்பற்றி மொழிகின்றேன் சிறிது.

## மூர்த்திச் சிறப்பு.

செங்கதிர்ச் செல்வனும் திங்களம் செல்வனும் தம் தம் பல்லாயிரக் கணக்கான செங்கரங்களாலும் வெண்கரங்களாலும் கங்குலும் பகலும் கடவுளைத் தொழுகின்றனர். வைகறை எழுந்து உய்வகை நினைத்து, பறவைகளெல்லாம் இறைவன் இன்னருளுக் கேங்குவனபோல கரைந்து கரைந்து சுதியோடும் துதியோடும் ஆடியும் பாடியும் அவனருளை யாசிக்கின்றன. தாவரங்களெல்லாம் தங்கள் மணமிக்க மகரந்த மிகுந்த தூய மலர்களைச் சொரிந்து சொரிந்து அருச்சித்துப் பூசித்து ஆண்டவனைத் தலைதாழ்ந்து வணங்குகின்றன ஐம்பெரும் பூதங்களும் அல்லும் பகலும் அதனதன் தொழில்களைப் புரிந்து தேவன் ஆணையைச் சிறிதளவும் மீறாது சேவை செய்கின்றன. அதிர்கடல் ஒலியால் அவனை வாழ்த்துகின்றது. மனிதமனமே! நீ மங்களநாதனை வணங்காதிருப்பதேன்?

திருவாலவாய் திருச்சுழியல் திருப்பூவணம் திருவாடானை முதலிய பாண்டித் தலங்கள் பதினான்கும் தோன்று முன்னரே ஓர் இலந்தைத் தருவினடியிலே சுயம்புவாய் முளைத்த தூய மூர்த்தியே மங்கைப் பெருமான் இம்முதல்வன் தோன்றிய பின்னர்த் தோன்றிய மூர்த்திகளே ஏனைய மூர்த்திகளெல்லாம், தருக்களிலே கற்பகதருவும், தானங்களிலே அன்னதானமும், விரதங்களிலே சோமவார விரதமும், பசுக்களிலே காமதேனுவும் சிறந்தவைகள்போல சிவலிங்க மூர்த்திகளிலே மங்களநாதனாக விளங்குகின்றான்.

ஆதியும் நடுவும் முடிவுமின்றி அனாதியாய், அகண்ட பரிபூரணமாய், சோதியாய், ஆன்மகோடிகளுக்குப் பந்தங்களையும் முத்தியையும தருபவனாகிய பரமன், தன்னை அறிவாலறிந்து மனதால் நினைந்து இருதாளிறைஞ்சி வழிபடுவார்க்கு, இம்மை மறுமை வீடு மூன்றையும் அருளும் பொருட்டு அச்சிவலிங்கத்துள்ளே என்றும் எனறும் நித்தியனாய் நிலைத்திருக்கின்றான.

அப்பெருமானைச் சேவித்தவருடைய தீவினை யாவும் கோபத்தால் அறிவும் காமத்தால் தவமும், உலோபத்தால் மனிதத் தன்மையும் போல் அழிந்துபடும் மங்களநாதனை வைகறையிலே தெரிசித்தவர் முன்செய்த பாவங்கள், அக்கினியிற் பஞ்சுபோலாகும். உச்சிக்காலத்தில் வணங்கியவர் உறுவினைகள், மருந்தினால் நோய்போல் மாயும். மாலையில் சேவித்தவர் வல்வினைகள், செருக்கினால் கல்விபோல் சிதையும்.

அத்தலத்திலே தேவர்களும் தபோதனராகி, கவுதமன் முதலிய முனிவர்களும் பத்திபரவசராய், முத்தலைச் சூலந்தாங்கும் வித்தகனை வழிபட்டு மெய்த்திருஞானம் பெற்றுர். ஆனல் கன்மபந்தத்தினல் சென்மபந்தம் பெற்ற மானிடர்களுக்கு ஞானமேனியாகிய மங்களேசுரனது அருளானந்த தரிசனம் வாய்ப்பது அரிதல்லவா? அப்பெரியோனை, மனம் வாக்குக் காயம் மூன்றுபட்ட ஒருமையுள்ளத்தால் சிந்திப்பவர்கள், சேவிப்பவர்கள் உறுதியாய்ப் பிறவிப்பயனைப் பெறுவர். ஆதிசிதம்பரேசுவரனுகிய ரத்தின சபாபதியின் திருப்புகழை வித்தகா! ஞானசத்தினிபாதா! நித்தனே! நேயர்கட்சனுகூலா! என்று பத்தியாய்ப் பலகாலும் பரவுகின்றவர்கள் பாக்கியசாலிகளாவர்.

ஆதலால் முனிவர்களே! முப்மைசால் உலகுக்கெல்லாம் மூர்த்தியாய் முதல்வனுன முழுமுதற் பெருமானது விழுமிய சரிதத்தை கேட்பதில் பெருவிருப்புடையீர் ஆதலின் நீவிரும் பெறுதற்கரிய பேறு பெற்றவர்களே! எனவே வேதனையும் வாதனையும் தருகின்ற தீராத திவினைகளைத் தீர்க்கின்றதும் அற்புதங்கள் பல பெருக்கியதுமாகிய அப் புண்ணிய தலத்திலே நிகழ்ந்த பல பழஞ்சரிதங்கள் பகர்கின்றேன் கேளுங்கள்!

## முதலாவது
## வேதமித்திரன் சுவர்க்கம் அடைந்த அத்தியாயம்.

வாள்வலியும் தோள்வலியும் வாய்ந்த சேரமான் செங்கோல் செலுத்தும் சேரவள (கேரள) நாட்டில் வாழ்பவன். உயர்குலத்தில் உதித்தவன். பிருகு முனிவரின் பிதுர்வழி வந்தவன் வேதநான்கையும் ஓதியுணர்ந்தவன். வேதமித்திரன் என்ற மெய்ப்பெயர் வாய்ந்தவன். வேள்விபுரிதலையே வாழ்வில் வேலையாக உடையவன். தன்னலங் கருதியா? அல்ல பிறநலங் கருதியே. மனிதன் பிறருக்காகவும் பிறந்தவன்

ஒருசமயம், வேதங் கூறுவதோர் வேதவேள்வியைச் செய்வதற்கு விரும்பினன் வேதமித்திரன் — தன்னலங்கருதி — பொன்னுசையால். இவ்வினையை யிவனுல் புரியலாம் அல்லது புரியலாகாது என்ற உறுதி வழியை ஒர்ந்தானில்லை. அதற்கு அருகதையற்ற ஒருவனை யாகாதிகாரியுமாக்கினுன். வேதவிதி தப்பினல் யாது வருமென்று வேதமித்திரன் உணர்ந்தவனேயாயினும் பொருளாசையால் புத்திகெட்டுப் போயினுன். கற்புடைய மாதர் நெறி பிசகினல் யாதாகும்? யாகவினை தொடங்கப்பெற்றது. வேதம் ஒரு சட்டநூல். வேதத்தில் விதித்த

வழியே செல்லவேண்டும். செய்யவேண்டும். விலக்கிய வழியில் செல்ல லாகாது. அடியிட்டால் அபாயம் சென்ருல் சேதம். அல்லலுக்காளாக் கும் இதுவே வேத நியதி. யாகாதிகாரி, யாகத்தின் தோற்றுவாய் தொடங்கி யிறுதிவரை தொன்மைவழி பிசகிவிட்டான், கோப்பிலான் கொண்ட கோலமாயிற்று யாகம். குருவிலான்கொண்ட வித்தையானது செய்வினை. ஆப்பிலாச் சகடுபோல அது அழிவுற்றது.

அதன் பயனுல் கிணறு வெட்டப் பூதங் கிளம்பியதுபோல் வேத மித்திரன் பிரமராக்கதப் பேயுருவானுன். பேயுருவம் பெற்ற அவன், காடும் மலையும் வனமும் வனந்தரமெல்லாம் அலைந்து திரிந்தான். சில ஆண்டுகளுக்குப் பின்னர் இறுதியில் விந்தமலைப் பகுதியில் உள்ள ஒரு பாலைவனத்தை யடைந்தான். வழிப்போக்கர்களை அச்சுறுத்துவதும், அல்லற்படுத்துவதும், அவர்கள் ஆவிகவர முயல்வதுமாகப் பேய்வினை யாகிற தீவினைகளைச் செய்து திரிந்தான். அவனுல் அல்லற்பட்டவர் அனேகர்.

இரு வேதியர்கள் அவ்வழியே வந்தார்கள். வேதங்கற்றவர்கள், நன்னூல் முதலாம் முன்னூல் பலவுங் கரைகண்டவர்கள் விழுமிய ஒழுக்கமும் செழுமிய குணமும் படைத்தவர்கள் தவவிரதம் சார்ந்த வர்கள். காசி அத்தனை தூரம் சென்று கங்கை நீராடிக் கங்கைநீர்க் காவட்டைக் [1] காவி வருபவர்கள். வேதமித்திரன் [2] அலகையுருவம் விலகுங்காலம் அணுகியது. மங்கைத் தலத்தின் மான்மியங்களை அன்பிற் கசிந்துருகி ஒருவருக்கொருவர் வினவியும் கதைத்தும் சுமையும் சோர்வும் தோன்ருமல் வருகிற அம் மறையவர் இருவரும் அப்பாலே வானத்திலே அலகை வடிவை அண்மையில் நோக்கினர். நோக்கியதும் வெகுண்டார்களா? இல்லை. மருண்டார்களா? அல்ல. ஏன்? இறைவ னது இருதாள்களையும் இறுகப்பற்றி நிற்கும் இதயத்தில் அச்சமேது? அவலமேது?

ஒருபால் பசித்தீ பற்றியெரிய. ஒருபால் துன்பமும் சோர்வும் தொடர வருகின்ற பருத்த பலமும் கருத்த உருவமும் உடைய பிரம ராக்கதன், அன்னவர்களைக் கண்டதும் அவர் தம் ஆவிகவரும் ஆசையால் அருகிலடைந்தான். ''நான் மறப்பினும் சொல்லும் நா மறவாது நவின்ற மங்களநாதனின் மாக்கதை, பேயின் செவியில் மெல்லெனப்

---

1. காவி=தோளில் சுமந்து

2. அலகை=பேய்.

பாய்ந்தது, அவ்வளவில், கல்லைக்கண்ட காகம்போல், கதை சொல்லக் கேட்டதும் பேயின் உடல் பெரிதும் நடுங்கியது. தன்மீது தாவி எரியும் தழல், சன்னஞ்சன்னமாய்த் தணிவது போன்ற ஓர் உணர்வு தோன்றியது. ஒரு கணப்பொழுது ஓய்ந்தயர்ந்து ஒடுங்கி நின்றான். கருணைக் கடவாகிய கடவுளின் விளையாடல்களைக் கேட்ட புண்ணியத்தால் முன் செய்த பாவம் நழுவியது. பின்பெற்ற பேய்வடிவும் நீங்கினான். மின் போல் ஒளிர்கின்ற தேவ உருவையும் பெற்றான். பூர்வ அறிவெல்லாம் உடன் தோன்றியது

இவர்கள்தான் நம்மை வாழ்விக்க வந்த மகான்கள் என்று அந்த மறையவர் இருவரின் அடிகளில் வீழ்ந்து வணங்கினான். தெய்வீக மனிதர்களே! உங்கள் தெரிசனையால் தீவினையினின்றும் உய்ந்தேன் என்று பேரானந்தங் கொண்டான். அயலே நின்ற சிறிய இலைகளையுடையதோர் வன்னிமரத்தடியில் ஒரு [1] கடிகை நேரம் மெய்மறந்து பரவசமெய்தி அசைவற்று நின்றான்.

பேயுருவத்தின் தோற்றமும், பின் மாற்றமும், தேவவடிவின் ஏற்றமும் மாறிமாறி ஒரு கணப்பொழுதிற் கண்ட அவ்வேதியர்கள் இது என்ன விந்தை என்று வியப்பும் திகைப்புங் கொண்டார்கள். கண்கட்டு வித்தைபோல் கண்ணையும் கருத்தையுங் கவர்ந்தது. அந்த அற்புத உண்மையை அரிய ஆர்வமுற்றார்கள்.

ஐயனே! என்னே இவ்வதிசயம்! பிறைபோன்ற பற்கள் எரியும் தழல்போன்றவிழிகள் நெஞ்சம் அஞ்சும் அப்பிரமராக்கதப் பேயுருவம் எப்பிழையால் எவ்விதத்தால் எக்காலத்தில் ஏனோ எய்தினை? இரும்பு இரசவாதத்தால் பசும்பொன் ஆனதுபோல எழிலும் ஒளியும் உடைய இவ்வானவர் வடிவம் எதனால் அடைந்தனை? முறையே முழுதும் சொல்வாயாக! இவ் விந்தையைக் கேட்கச் சிந்தை முந்துகின்றது என்றனர்.

மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கிவரும் தவப்பெரியீர்! என் வரலாறு கூறுகின்றேன். யானோ கேரள நாட்டினன். [1] முன்னூலணியும் மறையவர் குலத்தான். வேத நான்கும் விரிந்த சாத்திரங்களும் ஓதியுணர்ந்துளேன். பற்பல யாகங்களும் பண்ணுவிப்பது என்தொழில் வேள்வியும் தவமும் மேம்படு நிலையில் ஞானமும் யோகமும் நான் பெற வேண்டும். அவவாறின்றி, ஊழ்வினை காரணமாக உண்மையை விடுத்

---

1. கடிகை=நாழிகை.

தேன். உறுதிவழி பிசகினேன். அறிவு மயங்கினேன். ஆசை மேற் கொண்டேன். பொன்னுசை கொண்டு புத்தியை யிழந்தேன். மூவாசை யற்றவனே வேதவேள்விக்குரியவன்.

விதிமுறை தெரியாத வேதியனைக்கொண்டு ஒரு வேள்விபுரிவித் தேன் — பொன்னுசையால், செய்வினையும் உய்வினையும் உணராத அவன் என் செய்தான்? யாகம் முடிந்ததும் மீதமிருந்த நெய்யனைத்தை யும் வாரி, யாகத்தீயில் மடுத்துவிட்டான். அது விண்ணும் மண்ணுமாய் வீறிட்டெழுந்தது. அப்பால் செய்யும் செய்வினை யாதெனத் தெரியாது திகைத்து மதிமயங்கினுன். கதிகலங்கினுன். வாளா இருந்தான்.

எதுவும் இல்லையே என்று தீவினையால் செல்வந்தேட முனைந்தால் மேலும் இல்லாதவனே யாகிவிடுவான் என்ற பொய்யில் புலவர் பொன்மொழி பொய்க்குமா? அந்த வல்வினை தொடர வறுமை வாய்ப் பட்டேன். மேலும் வறியவனுனேன். சஞ்சலத்தால் நெஞ்சங்கலங்கித் திரிந்தேன். நோய்வாய்ப்பட்டு ஆவிதுறந்தேன்.

ஆவியுலகில் என்னை வாரி விழுங்கிய நரகம் உறுதியாய்ப் பூட்டிக் கொண்டது. பற்பல காலம் பற்பல வேதனையிற் பட்டமுந்தினேன். முடிவில் அப்பேயுருவோடு வெளியே பிடர்பிடித்து உந்தப்பட்டேன். அலகையாய் ஆண்டுகள் ஆயிரம் அலைந்தலைந்து எய்த்தேன். இளைத்தேன். கடைசியாய் இவ்விந்த மலைச்சாரலில் வந்து நொந்து திரிந்தேன். நீரும் சோறும் யாருந் தந்திலர். பசியுந் தாகமும் பற்றியெரிந்தது. சினமும் கொடுமையும் தீப்போல் மூண்டது எளியேனுக்கு இத்தனை காலமும் ஓர் யுகமாபிற்று.

இப்பெரும் இன்னலுக் கேதுவானது பிறர்பொருள் கவரும் பேராசையே—பேயாசையே பேயாசையால் வேதவேள்வியை நிந்தனை செய்தேன். பெருநரகுற்றேன். பேயுருவம்பெற்றேன். ஆதலால் இவ் வினை செய்தவர் என்போல் வெவ்வினை யடைவர். "தீமை தீமையே தரும்" என்று வேதமும் வேதியர்களும் வாதியர்களும் விதித்திருக் கின்றனர். இவைகளுக்கெல்லாம் யானே இலக்கு.

பெருந்தவக் கொள்கையுடைய பெரியீர்களே! இன்று நுங்கள் தெரிசனையால், ஈடுசோடில்லாத மங்கைத் தலத்தில் மான்மியத்தை

---

1. முன்னூள்=பூணூல்.

உங்கள் வாய்க்கேட்ட மகிமையால் இருள்சூழ்ந்த என் வாழ்க்கையி லின்றும் உய்ந்து கரையேறினேன், பிழைத்தேன் மெய்யறிவுற்றேன். மேலும் பிறவிப் பெறும்பேறு பெற்றேன். யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்! தந்தையுந் தாயுமாகிய மங்களநாதன் வீற்றிருக்கும் மங்கைப்பதியின் தெய்வ வரலாற்றை. எவரேயாயினும் எந்நாடாரா யினும் எந்தக் கோணத்திலிருந்து கேட்டாலும் அவர்கள் அடையும் நற் பேறு இதுவேயாகும். இனி அப்பதியை அகலாது வாழ்பவர்கள் பெறும் பயனை என்னால் விரித்துரைக்க இயலுமோ? அந்நகரின்கண் வேத மோதிடும் வேதியர் வாழ்தல் மேம்பாடுடையதே யாகும் என்றுரைத்து, மேலும், மூர்த்தி தலம் தீர்த்தமாகிய மூன்மைப் பெருமையும். அவ்விரு வருக்கும் வேதமித்திரன் விரித்துரைக்கின்றான்.

அக்கினி தீர்த்தத்தில் நீராடுவதும், அங்கு வீற்றிருக்கும் மங்கை நாயகனை வந்திப்பதும். சிந்திப்பதும், அந்நகரின் எல்லையில் தங்கி வாழ் தலும் செய்தவம் உடையவர்க்கே கைவரப் பெறுவதாம். இவையனைத் தும் உண்மையாம். நீங்கள் அப்பதியைச் சென்று பாக்கியசாலிகளாகப் போகிறீர்கள்.

பார்ப்பதிபுரம், மங்களபுரம், ஆதிசிதம்பரம் என்ற திருநாமங்களை யுடைய அத்தலத்தில், தீம்புனல் நிறைந்த தீர்த்தங்கள் மூன்று சிறந்து விளங்குகின்றன அங்கே மரகத ஒளி [1]உமிழும் இரத்தினசபை ஒன்றுள் ளது அதைக்கண்டு வணங்குதல் கண்பெற்ற பேறாகும்.

அங்கே பொன்மயமாகிய விமானம் ஊர்ந்து ஆண்டுகள்தோறும் சென்று, வைகாசி மாதம் பூரணைநாளில் மூன்று தீர்த்தங்களிலும் முன் வினை தீர யான் மூழ்குவேன். எம்மை ஆளுடையான் மங்களேச்சுரன் சந்நிதானத்திற்கு ஈசான திக்கில் இருப்பது ஓர் பூப்புனற்பொய்கை, அதுவே அக்கினி தீர்த்தம் என்று அனைவரும் புகழ்வது. அதில் அன்பால் ஆடுபவர்களுக்கு, அன்பே சிவமாகிய இறைவன் இன்னருள் புரிவதால் அத்தீர்த்தம், ஏனைய எல்லாவற்றிலும் ஏற்றம் உடையதாக இலகு கின்றது.

கொன்றை சூடிய செல்வன் சந்நிதிக்கு நேர்கிழக்கே காணப் படுவது ஓர் தீம்புனல் வாவி. தாமரை அல்லி குவளை மலர்களால் அழகு தருவது அது ஒரு காலத்தில் பிரமதேவனால் அமைத்த தீர்த்தம் ஆகையால் பிரமதீர்த்தம் என்ற பெயரால் விளங்குகிறது.

---

1. உமிழும்=வெளிப்படுத்தும்.

மங்கைநாதன் ஆலயத்திற்கு ஈசான திக்கில் இரண்டு அம்புவீழ் தூரம் கடந்தால் ஓர் நன்னீர்த் தடாகம் இருக்கின்றது அது ஆடையிலும் கோடையிலும் எந்த நேரத்திலும் சீதளமாய் இருப்பதுபற்றி சீதள தீர்த்தம் என்று தேசம் புகழ்வது. உலகீன்ற அன்னையால் உற்பத்தி யானது. அக்காரணத்தால் அங்கு வீற்றிருக்கும் அம்பிகைக்கு சீதளை என்ற திருப்பெயர் உண்டு அத்தீர்த்தத்தின் கீழ்கரையிலே தேவியின் ஆணையால் மங்களகாளி வீற்றிருந்து நகர்காவல் புரிகின்ருள். அப்பேர்ப் பட்ட அம்மூன்று புனித நீரில் மூழ்கி மும்மூர்த்திகளுக்கும் முதல் மூர்த்தியைச் சேவித்தால் இம்மை இன்பமும் மறுமைப் பயனும் அடை வர் என்று கூறி தேவ உருவம் பெற்ற வேதமித்திரன் தேவர்கள் வரவேற்கத் தேவருலகம் சென்ருன்.

பரிசுத்த தீர்த்த யாத்திரையே பரம வழிபாடாகக் கொண்டு காசி சென்று கங்கை நீராடிவரும், அம்முனிவர் இருவரும் வேதமித்திர னிடம் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கண்ணெதிரே கண்டும், அவன் மெய்யறி வால் சொல்லிய செய்திகளைச் செவியாரக் கேட்டும் வியப்புற்று நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து மென்மேலும் பக்திப் பரவசர் ஆனுர்கள். [1] கங்குலும் பகலும் மங்களநாதனது மகிமையை வாயார வாழ்த்திக் கொண்டும், மானதம் செய்துகொண்டும் நீண்ட நடையால் சோர்வு தோன்ருமல் பொன்மயமான [2] புரிசைகள் சூழ்ந்த சின்மயமான வியாக்கிரபுரம் சேர்ந்தனர். முன்னர் கூறிய மூவகைத் தூய நீரிலும் விதிப்படி தோய்ந்தார்கள் கருணைக் கடலாம் சிவபெருமானைக் கண் ணெதிரே கண்டனர். அன்பால் வியந்துருகி அடியற்ற மரமென்ன அடியிலே வீழ்ந்து வீழ்ந்து வணங்கினர். ஆடினர் பாடினர், அழுதனர் தொழுதனர் அவன் புகழைப் பாடினர். வேதமித்திரன் சுவர்க்கம் சென்ற மேன்மையையும் பான்மையையும் ஆங்கு வீற்றிருக்கும் முனிவர் களுக்கெல்லாம் முழுதும் விரித்துரைத்தார்கள். அதுகேட்ட அவரனை வரும் வியப்பும் உவப்பும் கொண்டனர்.

அப்பெரியார் இருவரும், திங்கள் சூடிய செஞ்சடைக் கடவுளை அந்தியும், சந்தியும் ஆறுகாலத்திலும் சந்தித்தும் வந்தித்தும் மூன்று மாதங்கள் சென்றன. அப்பால் இறைவன் திருவருள்பெற்று இனிதே அத்தலத்தினின்று அகன்ருர்கள்.

கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் நிறைந்த முனிவர்களே! அப்பேர்ப் பட்ட புகழ்மிக்க மங்கைப்பதியின் பெருமை அனைத்தையும் கூற யான்

---

1, கங்குல் = இரவு. 2. புரிசை = மதில்.

எவ்விதம் துணிவேன்! ஆயினும் இயன்றவரை சிறிது எடுத்து உரைக்கின்றேன்.

ஒரு கண்ணிமைப் பொழுதாவது அல்லது கைநொடிப் பொழுதாவது சோலை சூழ்ந்த அம் மங்களபுரியில் அன்பால் உருகப்பெற்று யாவரொருவர் அணுகுகின்றார்களோ, அவர்கள் அருட்கடலில் ஓர் துளியளவுக்காவது சற்பாத்திரர்களாய் விளங்குவார்கள். அத் செய்வத்தலத்தின் புகழ்மிக்க வரலாற்றை ஒருமுறை கேட்டாலும், பொய்கை சூழ்ந்த அப்புண்ணிய நகரை ஒருமுறை தரிசித்தாலும் அவர்கள் பஞ்சமா பாதகர்கள் ஆயினும். தீவினை யாவும் தீரப்பெற்று துன்பத்தினின்றும் உய்ந்து வாழ்வார்கள். அத்திருப்பதி யானது காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி ஐந்து எழுத்தை ஓதுகின்றவர்களுக்கு சிந்தித்த யாவும் சித்திக்கச் செய்வதால் சித்தகேத்திரம் என்றும் செப்புவார்கள். அந்நகரில் செய்யப்படும் அணுவளான அறமும் மலையத்தனை பலனை வாரி வழங்கும்.

அத் தெய்வநகரைச்சுற்றி எட்டுத் திக்கிலும் எட்டு இலிங்கங்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் மும்மூன்று அம்புவீழ் தூரம் இடைவிட்டு இருக்கின்றன. இவைகள் இந்திரன் முதலிய எண்திசைக் காவலர்களால் நிறுவிப் பூசிக்கப்பட்டன ஆதலால் ஒவ்வொன்றும் அவ்வக் காவலர்கள் பெயரால் அமைந்துள்ளன

அவைகளில் கீழ்த்திசையில் உள்ள இலிங்கமூர்த்தி. இந்திரன் வணங்கி வழிபட்டுப் பேறு பெற்றதாகும். அதைச்சூழ குளிர்ந்த மல்லிகைக் கொடிகள் தழுவிப் படர்ந்து பின்னியதால் அம்மேனியில் ஏற்பட்ட வடு, இன்றும் அழியாது என்றும் புறத்தே காணப்படும் அடையாளமாய் விளங்கித் தோன்றும் அதைத் தரிசித்த மாத்திரத்தில் திவ்விய ஞான உணர்வு உண்டாகும்.

மேலே கூறப்பட்ட இந்திர லிங்கமூர்த்தியின் எதிரே சார்வதி என்னும் பெயரால் சர்வம்கிமை நிறைந்த தீர்த்தம் ஒன்று உளது. அது சமமான நாற்கோணங்களை உடையது. விதவிதமான விலங்குகளும் பறவைகளும் கலந்து பின்னிக் குலவி வாழ்வது நறுமணங்கமழும் மலர் உதிர் சோலையும், கொடியும் செடியும் குலவி அழகு நிறைந்து தீம்புனல் ததும்பும் செவ்வி வாய்ந்தது சார்வதி தீர்த்தம் அத்தலத்திற்கு ஓர் அணிகலன் போன்றது. அதுவும் இந்திரன் அமைத்ததாகும். அத்தலத்திற்குச் சென்று நீராடுகின்றவர்கள், முதன் முதலில் அவ் இந்திர தீர்த்தத்தில் மூழ்கி புனிதராகி, இந்திரனையும் இந்திரன் தேவியையும்

முறையே வணங்கி அனுமதி பெறவேண்டும் அதன்பேரில் தீமை பலவற்றையும் தீர்க்கும் தீர்த்தங்கள் யாவையும் ஆடவேண்டும்.

பிரதி மாதங்கள் தோறும் இந்திரன் தினத்தில் இந்திர தடாகத்தில் உடல் குளிர மனம் மகிழ நீராடுகின்றவர்கள் இவ்வுலக இன்பம் முழுவதும் இலகுவில் அடைந்து இன்புறுவர்.

அத்தலத்தைக்காண ஆர்வமோடு அடைந்த மார்க்கண்ட முனிவன் அநேக நாளாகியும் அகல மனம் இல்லாதவனாய் காந்தம் கவரும் இரும்புபோல் பற்றற்ற பரம்பொருளினைப்பற்றி நின்றான் தான் மறந்தாலும் நமச்சிவாயத்தை நா மறவாது நாள்தோறும் மனமுருகி ஓய்வொழிவின்றி ஓதலாயினன். கதிரவன் ஒளிபரப்பும் செந்தீ வண்ணனும் சிவலிங்கப் பெருமானாகிய வியாக்கிரநாதனை, பகலெல்லாம் உடல் இளக உரோமச் சிலிர்க்க உரை தடுமாற, அருவிபோல் இருவிழிகள் நீர்ததும்ப நின்று வணங்கிப் பரவசமெய்தினான்.

பிருங்கி என்னும் பெயருடைய பெரியோனும், அத்தலத்தின் பெருமை உணர்ந்து காணவிழைந்து வந்தனன் மங்களேசுவரியை வாம பாகத்துடைய மங்களநாதனை அநேகநாள், அருச்சித்துப் பூசித்து ஆராதித்து அருந்தவம புலவும் அரிதில் புரிந்தான். அதனால் பொய்யுடல் நீங்கிப் புனிதவடிவு தாங்கி மரணமிலாப் பெருவாழ்வு பெற்று நித்திய சிரஞ்சீவியாய் நீண்ட பதவியுற்றான்

## இரண்டாவது

## கந்தருவ கன்னியர் பிரமசாபந் தீர்ந்த அத்தியாயம்

செல்வம் கொழித்து, வறுமை ஒழித்து, பசியும் பகையுமின்றி மக்கள் வாழும் சாங்கலதேசம் என்ற பழம்பெருநாடு ஒன்று உள்ளது அதில் முனிவரிருப்பு என்பது ஓர் மூதூராகும். இடையறு நீர் வளம் நிலவளத்தால் நிகரற்று விளங்கியது கார்காலம் முதலான பருவகாலம் ஆறிலும் செந்நெலும், கன்னலும் செழித்து விளைவது. கதலியும் பலாவும் கலந்து கனியும் இஞ்சியும் மஞ்சளும் என்றும் வளர்வது. மல்லிகை செண்பகம் மணமிகக் கமழும் அறப்பெரும் செயல்கள் அளப்பில் நிகழும். எல்லா நலன்களும் இனிது வளரும். சோணபத்திரை என்னும் நதியின் தென்கரையில் திகழ்வது.

அத்தகைய முனிவரிருப்பு என்னும் பதியில் ஓர் பழம்பெரும் குடியில் உதித்தவன். அந்தணர் மரபில் வந்தவன். யோகமித்திரன்

என்பவன். நைட்டிகப் பிரமசாரி. விரதங்கள் பல மேற்கொள்பவன். அருந்தவம் பல புரிபவன். மூன்றுமுறை நீராடி [1] முத்தீவளர்த்து யாகம் செய்பவன். எப்பொழுதும் வேதம் ஒலிக்கும் நாவுடையவன். ஞானசிரியனையே வணங்கி வாழ்பவன் சாந்திராயண முதலிய நோன்புகள் நோற்பவன், ஞானேந்திரிய கன்மேந்திரங்களையும், திரிகரணங்களையும் தன்வசம் செய்பவன் யோக சாஸ்திரங்களின் உண்மையுணர்ந்து யோகம் புரிவதில் சிந்தனையுடையவன், வாசிப்பழக்கம் வாய்ந்தவன். பத்மாசனம், மயூராசனம், குக்குடாசனம், சிரசாசனம் முதலிய யோகாசனங்கள் பயின்றவன். இடகலை, பிங்கலை சுழுமுனை நாடிகள் அறிந்தவன். ரேசக பூரக கும்பக வாசிப் பழக்கம் தெரிந்தவன் இத்தகையயோகி ஒருவன் வாழ்ந்து வந்தான்.

யாதன் என்னும் கந்தருவன் பெற்ற பெண்கள் மலர்பூத்த கொடிபோன்ற வடிவுடையவர்கள். வேல்போன்ற விழியார்கள். பசும் பொன்னால் வார்த்தமைந்த பதுமைபோன்றவர்கள். பெண்களும் விரும்பும் பேரழகிகள், மன்மதனது வாட்படையை யொத்தவர்கள். காமன் ஆகமக்கலை பல கற்றவர்.

பூக்கள் பூத்துக் குலுங்கும் செடிகொடிகளும் கனிகள் கனிந்து கனிந்து உதிரும் மரங்களும்; பச்சைக் கம்பளம் பரப்பினாற்போன்ற பசும்புல் பாங்கரும் எங்கு நோக்கினாலும் கண்கவர் விருந்தாய்க் காட்சி யளித்தன. அத்தகைய சோலை வளங்களில் மனதைப் பறிகொடுத்த அப்பெண்கள், அம்மலர் வளங்காண வானகம் நீங்கி மாநிலம் வந்தனர்.

பூஞ்சோலைகளில் காணப்படும் பற்பல காட்சிகளையுங் கண்டு களித்து வருபவர்கள், முன்னைய ஊழ்வினை முன்னே உந்த முனிவன் ஆச்சிரமத்தை அடைந்தனர். அதில் யோகத்தில் அமர்ந்திருந்த யோக மித்திரனைக் கண்டனர். கண்டதுங் கருத்தை யிழந்தனர் காதல்கொண்டனர். அவ்வளவு பேரழகு. அழகிலே மாயை விரவியிருக்கிறது. அந்த அழகு மாயைதான் எல்லாரையும் எல்லாவிடத்தும் எல்லாக் காலத்தும் எளிதில் மயக்குகிறது. அதுவே பிரபஞ்சத்தை ஆட்சி புரிகிறது என்று கூடச் சொல்லலாம். யோகமித்திரனின் ஒவ்வொரு உறுப்பிலும் அந்த அழகு கொலு வீற்றிருந்தது. முனிவர் நிலையத்தில் யோகம் செய்த அவன் அழகு நிலையமாக அமர்ந்திருந்தான். எனவே, கண்டலும் அந்த அழகில் மனதைப் பறிகொடுத்தனர். உலகப்பற்றை முற்றும் அற்றவன் என்று தெரிந்தும், தங்கள் விருப்பத்திற் கிணங்கான் என்று

---

1. முத்தீ = ஆகமநீயம். காருகபத்தியம். தெட்சிணாக்கினியம்

அறிந்திருந்தும் காமத்தீயில் வீழ்ந்து மனங்கருகலாயிற்று. மாதர்களுக்குரிய நாணம் மடம் முதலிய குணங்கள் நழுவின. உனக்கு நாங்கள் துணைவியராவோம் என்று சூழ்ந்தார்கள், நெருங்கினர்கள். வளைகளணிந்த கரங்களால் தழுவினர்கள். லீலைக்குரிய வேலைகளுக்கு அலைத்து இழுத்தனர்.

இவைகளினல் அவன் மனம் சிறிதும் கலங்கவில்லை. அறிவும் வேறுபடவில்லை. பற்றற்ற பரமன் ஒருவனையே பற்றி நின்ருன். ஆனல் தனது தவநெறிக்கு—சன்மார்க்க வழிக்கு இப்பேர்ப்பட்ட இழிவாகிய இடையூறு ஏற்பட்டதே என்று சிந்தித்தான். தன்னை இந்த நிலையினின்றும் எவ்விதம் விடுவிப்பதென்று எண்ணினன். அப்பெண்களை நோக்கி ' நீவிர் பேய் போல் சூழ்ந்துகொண்டு என்னை அலைத்தபடியால் பேய்களாகக் கடவீர்'' என்று சினந்து சபித்தான். சாபம் பெற்ற மாதர்கள் பதைபதைத்தார். வியந்தார். விம்மினர். ஏங்கினர். தாங்கள் உய்யும் வழியை நாடினர். ஐம்பொறிகளையும் வென்ற அவ்வீரனது அடிவீழ்ந்து வணங்கினர் ஒடுங்கி நின்ருர். ''எவ்வுயிர்களையும் உய்யக்கொண்டருள்கின்ற அருளாள! எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாது வேறொன் றறியாத வித்தகா! உயர்குலத்துதித்தோய்! உயர்ந்த யோகத்தின் சிகரத்தில் ஏறிய உத்தம! முனிபுங்கவ! சிறியேம். பெண்மதியென்பதெல்லாம் பேதமையாதலால் பேதமையால் செய்த பிழையை மன்னித்தருளல் வேண்டாவோ! யாமோ நின்னைக் கண்டதும் நினது பேரெழிலால் கவரப்பட்டோம் மன்மதன் போரில் உடைந்து தோற்ருேம். நின்னை அணுகினேம். காமன் கணைகளால் தாக்குண்டு தன் வசமற்று பரவசமாகி உய்யும் வழி தெரியாது உன்னை மருவினேம். நீயோ தவநெறி தவறுமே என எண்ணி எம்மை இன்ரு சபித்தாய். உனது பாதமலர்களைப் பற்றுகின்ருேம். பரவுகின்ருேம் எங்கள் கற்பெலாம் அழியத்தோன்றிய காமநோய் கழிய வழிசெய்வாயாக!

யாமோ இன்னிசை யாழில் வல்ல கந்தர்வ மாதர்கள்—நீயோ மானிட வகுப்பில் மறையவர் குலத்தைச் சேர்ந்தவன். எமக்கும் உனக்கும் இடையில் மலைக்கும் மடுவுக்குப்போல விதிவழியால் மதியிழந்தோம். ஊழ்வினை யொருவரால் விலக்கப்போமா! மன்னுயிர்களைத் தன்னுயிர் போல் பேணும் பெரியார்கள். பிற உயிர்களுக்கு அருளுவதல்லது முனிவார்களோ? காதலித்து தஞ்சம் என்று வந்த கன்னியர்களுக்கு இரங்கி அருள்புரியாமையும் ஓர் பாதகமாகும் என்று காம நூல்கள் கூறுகின்றன. யாம் யாழிசையில் உயர்ந்த தேவ மாதர்கள். நீயோ பூதேவ மரபில் வந்த அந்தணன். எங்கள் வழி வழி மரபுப்படி

காந்தர்வ முறையால் எம்மை மணந்துகொள்வாயாக. இதனுல் வரும் குறை யாதொன்றுமில்லை. இம்மணத்தை மறுப்பாயேயானுல் நாங்கள் கணம் தரியோம் உயிர்விடுவோம் என்று இரங்கி யாசித்தனர்.

இதைக்கேட்டான் யோகமித்திரன், சினந்தணிந்தான். இரக்க முற்ருன். அன்னம்போல் நடையுடையீர். நீவீர் இப்போது பெரும் பிழை புரிந்தீர் சாபம் பெற்றீர். சொன்னுல் சொன்னதுதான். அதை அனுபவித்தேயாகவேண்டும். இது உறுதி. பிரமசாபம் ஏனைய எல்லாச் சாபங்களிலும் வலிமிக்கதாகும். நீவிர் நயந்தும் பயந்தும் இரங்கிக் கூறியபடியால் சிலகாலம் சென்று இச்சாபத்தினின்றும் விடுவிப்பேன். சொல்வதைக் கேளுங்கள்? இப்போது பேயுருவு கொள்வீர்கள் பொன்னும் மணியும் கொழிக்கும் வைகை என்றதோர் வற்ருத நதியுளது. அதன் தென்கரையில் பல வளங்களும் ததும்பும் பதியொன்றுண்டு. வேறு எப்பதியிலும் ஒப்பரிய செப்பரிய சிறப்புடையது. வெதிரிகாரணியம் என்பது அதன் பெயர். பிரம கற்பத்திலும் அழியாதது புகழோங்கியது. அதில் கணநாதர்களோடு நந்தியப்பெருமான் செந்தில் வேற் பெருமான். அன்னை மங்களதாவினி, அப்பன் வியாக்கிரேசன் விரும்பி விற்றிருக்கின்ருர்கள். அத்தலத்தை நீவிர் அடைவீர்களாக!

யாழிற் கனிந்த மொழியுடையீர்! யானும் அப்பதியை அணுகி, எனது பிரமசரிய நோன்பை யிறுதிசெய்துகொண்டு முன்னுள் அமைந்த அமைப்பின்படி நும்மை அத்தலத்தில் தானே மணம் புரிவேன். கவலைப் படாதீர்கள்? வகுத்தான் வகுத்த வகையிது உலகில் உதிக்கும் எவ்வுயிரும் வீணே தோன்றி தானே மறைவதில்லை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணமாகவே வருகிறது போகிறது காரணமில்லாது காரியம் நிகழ்வதில்லை என்று எடுத்துரைத்தான்

மங்கலநாதனுடைய செங்கமலப் பாதங்களைச் சிந்தையில் வைத்தான் சிந்தையிலும் கடிது சென்ருன். கற்றும் கேட்டும் சிந்தித்தும் தெளிந்தும் பிறர்க்குரைத்தும் கலைநிறைந்த புலவோர்கள் தெள்ளித் தெளித்துக் கொழித்தெடுத்த மதுரத் தமிழ்போல் நாற்றிசையும் மலர்ந்து கமழ்ந்து பொழில் சூழ்ந்த வெதிரி வனத்தை 'இனிதடைந்தான் அலகையுருக்கொண்டலைந்த அம்மடவார்களும் ஓராண்டு சென்றதும் முனிவன் கூறிய உறுதிமொழிகளைக் கருத்திற்கொண்டு ஆண்டுச் சேர்ந்தார்கள்.

யோகமித்திரன் பிரமதீர்த்தத்தில் மூழ்கினன். நித்திய கடமைகளை நியதியிற் செய்தான். வானுயர்ந்த கோபுரத்தடியில் வீற்றிருக்கும் நர்த்தன விநாயகர் கழலிணை தொழுதான் அழகு தவழுங் கோவிலினுட் புகுந்தான். தேவர்கள் உய்ய. விடமுண்டிருண்ட நீலகண்ட நிமலனை அன்பிற் கரைந்துருகி பலகால் பணிந்து வணங்கினன். மும்முறை வலஞ்செய்தான் நந்திப்பெருமான் முதலிய பரிவார தேவதைகளைத் நலையாரக் கும்பிட்டான். விடைபெற்றுன்.

நறுமணங் கமழ்வதும் வண்டுகள் மொய்ப்பதுமாகிய தாமரை மலர்கள் அழகுசெய்துகொண்டிருக்கும் பிரமதீர்த்தப் புனித நீரைத் கமண்டலத்தில் மொண்டான். அதில் ஐந்தெழுத்தை விதியால் ஓதி அபிமந்திரித்தான். அலகை வடிவில் நிற்கும் அப்பெண்களை அருகில் அழைத்தான். அத்தெய்வ நீரை அவர்கள்மீது தெளித்தான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தத்துவங்களும் நிறைந்த மந்திரத்தால் ஞானஸ்நானம் செய்வித்தான். அவ்வளவில், ரசவாதத்தால் வேதிக்கப்பட்ட இரும்பு பொன்னுவதுபோல, பேயுருவோடு நின்ற பெண்கள் பண்டைய தேவமாதர்களாகத் திகழ்ந்தார்கள். எம்மை, இம்மையிலும், மறுமையிலும் ஆட்கொள்ளவந்த இன்னுருவே என்று அவன் பாதம் பரவிப் பணிந்தார்கள்.

பின்னர் யோகமித்திரன். உலக முழுதீன்றும் இன்னமுங் கன்னியென மறைகள் முழங்கும் அன்னையே எனறு அம்பிகையைப் போற்றிப் பரவினன், ஐயனையும் இறைஞ்சினன். அங்கு வீற்றிருக்கும் அறவோரைத் துறவோரை யந்தணர்களை ஆராதித்தான். கடைசியாய் அத்தலத்தில்தானே அக் கந்தர்வ கன்னியர்களை தீக்கடவுள் சான்ருகத் திருமணம் செய்துகொண்டான்.

அடிமையும் உடையுமாய் நம்மையாளவல்ல அருளாளன் சந்நிதியினின்றும் தென் கீழ்த்திசையில் ஒன்றரை நாழிகைத் தொலைவில் ஓர் ஆச்சிரமம் அமைத்துக்கொண்டு, கண்ணிறைந்த கணவனே உள்நிறைந்த உயிரென்று பேணி அவனை நேசித்துக் குறைவின்றிக் குற்றேவல் புரிந்து வாழ்ந்தார்கள். ஞான வாட்படையால் ஐம்புலப் பகையை வென்ற யோகமித்திரன். மனத்திலே அழுக்கறுத்த மனதகத்தே அழுக்குருதபடி வாழ்ந்து வந்தான்—ஓடம் நீரிலிருந்தாலும் அதில் அது அமிழ்ந்து விடாதபடி மிதப்பதுபோல்.

அம்மாதர்கள் அம்பிகை பாகனை, அந்தியும் சந்தியும், சிந்தித்து வந்தித்துச் சேவித்து வந்தார்கள். ஒருநாள், இறைவன் முன்நின்று

அன்பிற் கசிந்துருகி ஆதரவற்ற எங்கட்குப் பேராதரவாய் வீற்றிருந்து எங்கள் [1]துரிசெலாம் போக்கி உய்வித்த எந்தையே! இக்காரணத்தால் தேவரீர், துரிதாபகன் என்று இன்றுமுதல் அழைக்கப்பெறுமாறு அருள் புரிய வேண்டுமென்று பிரார்த்தித்தனர். விண்ணப்பம் ஏற்கப்பட்டது: வேண்டுதலும் கொடுக்கப்பெற்றது. அது முதல் துரிதாபகன் என்ற திருநாமமும் உடையனானான் முதல்வன். தேவி மங்களேசுவரியை அப் பெண்கள், அனுதினமும் நறுமணங் கமழும் நன்மலர்கொண்டு அடிகளில் அர்ச்சனைசெய்து பூசித்த காரணத்தால்; புட்பதனி என்ற நன்னாமம் பூவுலகம் புகழ்ந்தேத்த அருள்புரிந்தாள்.

யோகமித்திரன், அக்கினி தீர்த்தத்தில் நூறுகுடம் அள்ளுவான் அதில் நறுமணங்கள் பல ஊட்டுவான். இறைவனுக்கு அன்புகலந் தாட்டுவான். தீபதூபங்கள் காட்டுவான், இவ்வாறு நாள்தோறும் மூன்று வேளையும் உள்ளமுருக வழிபட்டு நெடுநாள் வசிக்கலானான். எவரேனும் ஒருவர் அக்கினி தீர்த்தத்தில் ஏழுகுடமாவது ஐந்து, மூன்று அல்லது ஒரு குடமாவது தூய துகிலால் வடித்தெடுத்து. பொன்னார் மேனியனுக்கு அபிடேகம் செய்தால் அவர் புண்ணியரே ஆவர். அவர் அதற்காக அடையும்பேறு அவனே அறிவான். ஆனால் எம்மால் எடுத் துரைக்க இயலுமோ.

வேதியர்கள் நாள்தோறும் அந்த நன்னீரால் வேத முதல்வனை ஆட்டினால், இவ்வுலக போகங்களையெல்லாம் இனிதே நுகர்வார்கள். வேந்தர்கள் அவ்வாறு செய்தால் ஞாலமுழுதும் பொன்முடிசூடி ஒருங்கே ஆளப்பெறுவர். பிறர்பொருளும் தம் பொருள்போல் பேணும் வணிகர் கள். அவ்விதம் ஐயனுக்கு அபிடேகித்தால் நிதிபதியாக நிலவுவார் உழவர்கள் அவ்விதம் புரிந்தால் விளைவு பெருகும்; வறுமை அடையார்; பிணி அறியார்; இன்பமே எந்நாளும்; துன்பமில்லை.

பங்குனி மாதம் தொடங்கி ஆடி மாதம் வரை, மணம் மிக்க தீம் புனலால் நறுந்தேன், பழம்பிழிந்த செழும் சாறு இவைகளால் எல்லாம் வல்ல இறைவனை இனிதே அபிடேகம் செய்தால் நூறு பிறவிகள் தோறும் தொடர்ந்து துன்புறுத்திவந்த கொடிய குன்ம நோயும் குடி போய்விடும். பஞ்சுத்துணி, பட்டாடை ஆகியவைகளை வேதமுதல்வ னுக்கு விரும்பி உதவுகின்றவர்கள், பரமன் உலகத்தில் பல்லாண்டு வாழ் வார்கள் பேரிகை, தப்பட்டம், எக்காளம் முதலிய தோற்கருவி, துளைக்

---

1. துரிசி=குற்றம்

கருவிகளை சர்வேசன் சந்நிதியில் ஒலிக்க உதவுகின்றவர்கள் இம்மையில் தாங்கள் விரும்பியதைப்பெற்று மறுமையில் கைலாசம் முதலான பதவிகள் கிடைக்கப் பேரின்பம் பெறுவார்கள்.

அயலூரில் வாழ்கின்றவர்களும், அதற்கப்பால் உள்ளவர்களும் இப் புண்ணியப்பதியை நெஞ்சால் நினைத்துருகித் திசைநோக்கி வணங்குவார்களேயானால் ஒரு அசுவமேத யாகம் செய்தபலன் சித்திக்கும். துன்பங்கள் யாதொன்றும் தொடராது மங்களநாதனை வணங்கிய படியே அன்னிய நாட்டிலிருந்து ஆவி துறக்கின்றவர்கள் பெறும் பேறு சொல்லவும் வேண்டுமோ? விண்ணளாவிய கோபுரத்தின் சிகரத்தை வெகு தூரத்திலிருந்து பார்த்து அதை அவனாக மதித்து வணங்குகின்றவர்களும், வணங்குகின்ற அவர்களைக்கண்டு வாழ்த்துகின்றவர்களும், பல்லாண்டு புற்றித் தொடர்ந்த பாவ வினைகள் யாவும் நீங்கப்பெறுவர். இம்மையில் நானாவித புவனபோகங்களையும் மறுமையில் இறவாத முத்தி இன்பத்தையும் இச்சிப்பவர்கள் அப்புண்ணிய நகரில் விரும்பி வசிக்க வேண்டும்.

## மூன்றாவது

## ஐந்தெழுத்துரைப்போர் விருத்திராக்கம் தரிப்போர் பேறுரைத்த அத்தியாயம்.

பொற்கிண்ணங்கள் போன்று விரிந்து மலர்ந்துள்ள செந்தாமரை மலர்களின்மீது கொக்கினமும் குருகினமும் குடியிருந்து குலாவும் அத்தகைய நீர்வளம் நிறைந்த மங்கைத் தலத்தில் தங்கப்பெற்று, இறைவன் பெருமைக்கு எல்லையாயுள்ள ஐந்தெழுத்தையும் ஆவலோடு ஓதுபவர்களின் பேற்றைக் கூறுகின்றேன்.

ஞானவொளி வீசுகின்ற மூலமந்திரமாகிற பிரணவத்தை, அறவோனாகிய ஓர் ஞானாசிரியனால் உபதேசிக்கப்பெற்று, மேனியெங்கும் வெண்ணீறணிந்து, உருத்திராக்கமாலையை உவகையோடு உடம்பில் பூண்டு ஆகம விதிப்படி கிரியைகள் செய்யக்கடவர்! உலகெலாம் காக்கின்ற ஒரு முதல்வன் சந்நிதியின் ஒரு பக்கமாய், புலித்தோல், மான் தோல், கம்பளம் தூயதுகில் ஆகிய இவ்வாசனங்கள் ஏதேனும் ஒன்றில் அமரவேண்டும். உருத்திராக்கம், தர்ப்பை, தாமரைமுத்து, படிகம், பவளம் இவைகளினாலாகிய ஓர் மாலையை வலக்கரத்தில் தாங்கவேண்டும். தாயினும் இனிய தயாபரன் திருவடியைச் சிந்தையில் ஏந்தவேண்டும். ஆயிரத்தெட்டு, நூற்றெட்டு, அல்லது இருபத்தெட்டு உருக்களில்

தம்மால் இயன்ற வரை ஒன்றை வரைந்து கொள்ளவேண்டும். கொட்டாவி விடுதல் முதலிய [3]ஐவகை அவத்தைகளில் ஒன்றும் நிகழலாகாது. இந்நியதியோடும் மன ஒருமையோடும் யாவனொருவன் உருப் போடுகின்றானோ அவன் நிச்சயம் சாரூப பதவி பெறுவான். அத்தகைய ஒரு உத்தமனைக் கண்டவரும் இம்மையில் செய்த குற்றங்கள் நீங்கப் பெறுவர். வேதம் வேதாங்கங்களை ஓதியுணர்ந்த பலனும், அன்னதானம் சொர்ணதானம் செய்த புண்ணியமும் சித்திக்கப் பெறுவர். பூதானம் புரவிதானம், [1]கரிதானம், [2]கோதானம், கன்னிகாதானம் ஆகியவைகளால் அடையும் பேறனைத்தையும் அங்கே ஒருமுறை செபிக்கின்ற செபம் தந்துதவும்.

ஒரு ஞானதேசிகன், விதிமுறைப்படி உபதேசிக்க ஐந்தெழுத்து உபதேசம் பெற்றவர். சிவனடியாராகவே பாவிக்கவேண்டியவராவர். மறையவர், மன்னர், வணிகர், உழவர் மாதர்கள் ஆகிய அனைவரும், பகவான் திருநாமங்களை ஓதவும் வணங்கவும் அருகதையுடையோராவர். வினைவசத்தால் இக்கன்ம உலகில் தோன்றும் மாந்தர்களுக்குப் பத்தியும் சித்தியும் சிந்திக்கவேண்டுமாயின், திருநீற்றையும் உருத்திராக்கத்தையும் பஞ்சாக்கரத்தையும் பக்தி பூர்வமாக உபாசித்தாகவேண்டும்.

விருப்பு வெறுப்பு இரண்டையும் விட்டு சிவனடிக்கே செலுத்திய சிந்தையுடைய மேலோர் எக்குலத்து வந்தவரேயாயினும், அவரும் அவர் மரபில் தோன்றிய அனைவரும் மறுமையில் சிவலோகபதவி சேர்ந்து இன்புறுவார்.

மாசி மகத்திலே அக்கினி கோத்திரத்திலே சிவயாகத்தில் வளர்க்கப்பட்ட வைதிகாக்கினியால் மலர்ந்த திருநீறுவது. சூலப்படையோனாகிய முக்கட் பெருமான் சந்நிதி விபூதியாவது கைக்கொண்டு, பரிந்துருகும் பக்தியால் பஞ்சாக்கரத்தை செபித்துக்கொண்டு, சிரசு நெற்றி முதலிய உறுப்புக்களில் திரிபுண்டரமாக அணிந்து தெய்வ நியமத்தோடு ஒழுகும் அன்பர்கள், விரிசடைப் பெருமான் வெளிப்படும் ஒருகோடி லிங்கங்களை வேதவிதிப்படி நிறுவிப் பூசித்தவர்கள் அடையும் பலனை அடைந்து இன்புறுவர்.

சிறப்பில்லாப் பிறப்பைப்பெற்ற [4]சிதடர், செவிடர் ஊமையர்

---

1. கரி=யானை. 2. கோ=பசு.
3. ஐவகை அவத்தை=கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு. மூச்சிடு, நட்டுவிழுதல். 4. சிதடர்=குருடர்.

இழிகுலத்தோராயினும், சிவமந்திரத்தை செபிக்க அருகரல்லாதவரே யாயினும் தூயவெண்ணீற்றைச் சோகத்தோடும், தாகத்தோடும் பூசி மகிழ்வாராளுல் அன்னவரே மனிதர்களில் உத்தமராவர். உயர்ந்தோரு மாவர். நெஞ்சில் அழுக்கு நீங்கப் பெறுதவராளுலும், நியமமும் ஒழுக் கமும் நேர்படாதவராளுலும், ஆண்டவன் அடிகளில் அன்பில்லாதவராளு லும், அவன் பாதமலர்களில் சீதமலர்களிட்டுச் சேவியாதவராளுலும் புனித விபூதியை அன்பாக அள்ளி இன்பமாகப்பூசி மகிழ்வாராளுல் நீங்கா வினையினின்றும் நீங்கித் தூயோராவர். மண்ணுலகில் உதித்த மானிடர்கள் எவ்வித உபாயத்தாலேனும், மங்களநாதனின் பங்கயத் தாள்களில் எங்கள் பெருமானே யான் உனது அடைக்கலம் என்று அடிமை புகுவார்களாக! புகுந்தால் அவரும் அவர்தம் மூதாதையரும் சிவலோகமாகிய தவலோகத்தில் புகுந்து அழியாத நித்தியராவர்.

## நான்காவது
## தீர்த்தச் சிறப்புரைத்த அத்தியாயம்.

பூவுலகில், பொன்ஞர் மேனியன் உறைகின்ற புண்ணிய தலங் களில் எண்ணற்ற தீர்த்தங்கள் எங்கும் இருக்கின்றன. அவைகளினு லெல்லாம் தவத்துறை சென்ற சன்மார்க்க சீலருக்கல்லாமல் ஏனைய அவத்துறையுடையவருக்கும் அரும் பயன் கிட்டுமோ? மேலும் உயரிய மெய் முயற்சியால் அவை அடையப் பெறுவனவாம் அங்ஙனமின்றி, அகமுயற்சியால் எளிதாய்த் தமக்குத் தாமே அடைந்தனுபவிக்கக்கூடிய மானத தீர்த்தங்களும் மனிதரிடமே அகலாதிருக்கின்றன. அவையாவன:

ஈகை, இரக்கம், சாந்தம், பொய்யாமை, அகிம்சை, ஐம்பொறி யடக்கம், காமவெகுளி மயக்கம் கடிதல், இனியவை கூறல், அயலார்க் குதவுதல், பிறர் பொருள் நயவாவை பிறர்மனை நயவாமை, ஓதல் ஓதுவித்தல், பெற்றோர்சொல் பேணல், புறங்கூருமை ஆகிய இவைகளை மானத தீர்த்தமென்று வள்ளுவன் முதலாம் மகான்கள் கூறுவர்.

இவையல்லாமல் வேறு பல தீர்த்தங்களும் வெளியுலகில் உள்ளன. அவைகள், யோகசீலர் சார்வதால் யோகதீர்த்தமென்றும், ஆன்மதாகம் தீர்வதால் தாக தீர்த்தம் என்றும், மூழ்கிக் குளிப்பதால் ஸ்நான தீர்த் தம் என்றும், அறவோர் கூறுவர். காசி முதலிய தலங்களில் காணலாம் அவற்றை, மகிமையில் சிறந்தன வரமிக உடையன; கங்கை, துங்கபத் திரை [5]கண்ணவேணி, காவிரி, யமுனை, நருமதை, கோதாவரி, வையை

5 கண்ணவேணி = கிருஷ்ணவேணி.

தாமிரபரணி முதலியன. அவற்றில் நதிகளென்று சொல்லப்படுவன பல. நதங்களென்றும் கூறப்படுவன சிலவாம். அவை யனைத்திலும் சிறந்ததாகக் கூறப்படுவது, அம் மங்கைப் பதியிலுள்ள அக்கினி தீர்த்த மும். பிரம தீர்த்தமும் ஆகும். அவ்விரண்டும் மங்களேசுரனுடைய சந்நிதானத்திற்கு நேரில் நிலவுகின்றன. வியாக்கிரபுரமென்று விளங்கு கின்ற அப்பதி உலகெல்லாம் தொழும் உத்தரகாசி போன்று தென் னாட்டில் திசையெல்லாம் வணங்கத் திகழ்கின்றபடியால் தெக்கணகாசி யென்றும் தேசத்தார் கூறுவர் அதில் உள்ள அக்கினி தீர்த்தமும் முதலிய சிதளவாவிகள், பாதல சுங்கையோடு சங்கமமுடையனவாகும். அம்மகிமையால், தன்பால் அன்பால் ஆடினவர்க்குப் பிறவித் துன்பங் களைப் போக்கி எந்நாளும் இன்ப வாழ்வில் இருக்கச் செய்யும்

எல்லாம் வல்ல இறைவன், பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிற்பினும். பசுமடுவிற் பால் தோன்றுவதுபோல இலிங்க மூர்த்தத்திலே பக்தி வலையில் படுவோனாகி எளிவந்து காட்சியருளுகிறான் அவ்விலிங்க மூர்த்திகள் பற்பலவாகும். ஒன்று மானிடலிங்கம்; பிறிதொன்று ஆரிட லிங்கம்; மற்றொன்று காணலிங்கம்; இன்னொன்று தெய்வலிங்கம்; ஏனைய தொன்று சுயம்புலிங்கமாம். மானிடர்களால் வைத்துப் பூசிக்கப்படுவது மானிடலிங்கம். முனிவர் முதலியவர்களால் நிறுவிப் பூசிக்கப்படுவது ஆரிடலிங்கம். நந்தி முதலிய கணநாதர்களால் அமைத்துப் பூசிக்கப் படுவது காணலிங்கம். திருமால் முதலிய தேவர்களால் வைத்துப் பூசிக்கப் படுவது தெய்வலிங்கம். சுயமாக தோன்றியது சுயம்பு. அதிலும் புரா தனமாக உள்ளது புராதன சுயம்புலிங்கம், இவைகள் ஒன்றுக்கொன்று நூறு மடங்கு மேற்பட்ட தெய்வத்தன்மை சேர்ந்தது என்று தெய்வ மறை பேசுமாம் அத்தலத்தில் புராதன சுயம்புவே பொன்மேனி தாங்கி இனிது விற்றிருக்கிறபடியால் ஏனைய எல்லாப் பதிகளிலும் தெய்வீகம் சிறந்த பதியாக—ஏற்றமும் தோற்றமும் உடைய கதியாக விளங்குகின்றது பிரமபுரம்.

அதன் கண். தீர்த்தனே! மூர்த்தியே! சிவலோகா? என்று உள்ள முருக உடல் உரோமம் சிலிர்க்க நீரர்டுகின்றவர்க்கு, இகத்திலும். பரத் திலும் இன்ப வாழ்வளிக்கும் அக்கினி தீர்த்தம், ஏனைய எல்லாவற்றிலும் சிருடையதாம் பெருடையதாய்த் திகழ்கிறது அதிலே மூழ்கி செய்வினையாற்றி, தாமரை மலர் மாலையால் ஓர்முறை தப்பிரானாகிய எம்பிரானை அலங்கரித்து, சங்கர! சுயம்புவே! என்று தொழுகின்றவர்கள் இஷ்டகாமியங்களை இலகுவில் எய்துவர். பாதிரி மலர்மாலை திரு

மேனியில் புனைந்து பொன்னுடை போர்த்தி புளகாங்கிதங் கொண்டு பொன்னார் திருவடியில் சரண்புகுகின்றவர்கள் இவ்வுலகில் அறிவுடைய மைந்தர்கள்—மைந்தர்க்கு மைந்தர்கள் மல்கப்பெற்று பெருவாழ்வு வாழ்வர். அவ்வுலகில், இவ்வுடல் உயிர் ஆதியவெல்லாம் இறைவனுக்காளாக அவன் உடல் உயிர் ஆதியவெல்லாம் உவந்து பெற்று பொன்மயமாகிய விமானத்தில் வான்வழியே சென்று. கயிலையை அடைந்து, கயிலைவாசியாய் பல்லாயிரமாண்டுகள் இன்பம் துய்ப்பர்.

சித்திரை மாதம், செங்கதிரும் வெண்கதிரும் சேரும் (அமாவாசை) நாளில், நடுப்பகலில், எள்ளு, அருகு. கோமயம் சிரசில் சேர்த்து, தேவி தீர்த்தத்தில் அனபுருக நின்று, செங்கதிரோனை சூரிய மந்திரத்தால் விதியால் ஓதி நியதியால் நீராடி. பாதாள புராதன சுயம்புலிங்கப் பெருமானை வழிபட்டால் கொடிய பிரமகத்தி தோடம் நீங்கும். நட்பிலே செய்த பாதகங்களும் நழுவும் அதே மாதத்தில் பூரணை நாளன்று உதயவன் உச்சியை அடையும்போது வேதமந்திர மோதிக்கொண்டு அத் தீர்த்தத்தில் படிந்து நம்மை ஆண்டருளும் இறைவன் கோவிலின் கீழ்பால் ஒரு நாழிகை தூரத்தில் ஒரு ஆலமரத்தின் கீழே பிரமதேவனால் நிறுவப்பட்ட பிரமலிங்கப் பெருமானைச் சேவிப்போர். மறையவரைக்கொன்ற பாவத்தினின்றும் உய்யப் பெறுவர்.

வைகாசி மாதம் பௌர்ணமி திதி விசாகத்தில் உச்சி நேரத்தில் அறுகும் அரிசியும் சிரசிற்கொண்டு பிரமதீர்த்தத்தில் படிந்து வேதியர்களுக்கு தயிர்ச்சாதம் விநியோகிப்பவர், நமனுக்கஞ்சார்; நரகத்தில் இடர்ப்படார்; அயன் உலகை அடைய விரும்பினாலும் அடையப்பெறுவர் அதே தீர்த்தத்தில் நீராடி தேவனையும் தேவியையும் சேவித்து தென்புலத்தாரைப் பாவித்து நீர்க்கடன் செய்தால், தென்புலத்தார்களெல்லாம் சூரிய சந்திரர்களுள்ளவரை நல்லுலகுபுக்குச் சாந்தியுடன் வாழப்பெறுவர், கரும்பு ரசத்தோடு கலந்த இனிய பானக நீரை குற்றமற்ற சுரைக்குடுக்கையில் வார்த்து அறநெறியொழுகும் அருந்தவர்களுக்கு அன்புடன் அளித்தால், அவர் எவரேயாயினும் தீயினும் கொடிய தீவினைகள் தீரப்பெறுவர். செல்வம், கல்வி நோயற்ற வாழ்வு சேரப்பெறுவர்.

ஆனி மாதத்து வளர்பிறையில் வெள்ளிக்கிழமை உதயத்தில் விஷ்ணுகாந்தி என்ற பச்சிலையைக் கையிலேந்தி பிரணவமாவது அல்லது சுவாகாந்த மந்திரமாவது ஓதி. மேலே கூறிய தீர்த்தத்தில் ஆடி, எப்பொருளுக்கும் மெய்ப்பொருளாகிய ஞானநாயகனையும் ஞானநாயகியை

யுங் வீழ்ந்து தாழ்ந்து வணங்கினவர்கள். குறைவில்லா அளவில்லாத செல்வம் ஓங்குவர். பன்னிரண்டு தலைமுறை வரை வாழையடி வாழையாய்ச் சந்ததி பெருகப் பெறுவர்.

ஆடிமாதத்துப் பூரணமையில் அப்புனித நீரில் ஆடி, ஆவின் பாலால் வெதிரிவன ஈசனை அபிடேகித்து ஆவின் நெய் பால் கரும்பு ரசம் சேர்த்துப் பாகுபடுத்திய பாயசம் நிவேதித்தோர், சகித்தற்கரிய குன்மம் என்னும் கொடுமைநோய் தீரப்பெறுவர்.

ஆவணியில் சனிக்கிழமையில், நடுப்பகலில் ஆதிபகவனுக்கும் தேவிக்கும் நெய்யால் தைலத்தால் பாங்குபெற அபிடேகம் செய்து நெஞ்சம் நெகிழ்ந்துருக முடிதாழ்ந்து அடிபணிந்து போற்றி நின்று சனி பகவான் உவகையுற கருநிறக் கம்பளமும் கரிய இரும்பும் மறையவர்களின் கையில் வழங்கினல் சனியால் வரும் துன்பம் இல்லாதவராவர். ஆண்டுகள் தோறும் அதே மாதம் அதே வாரத்தில் மேலே கூறியுள்ள படி செய்து இயன்றவரை மறையவர்களுக்கு இனிய உணவு அன்போடு கொடுப்பவர்கள் சந்ததியுள்ளவரை சனியன் செய்யும் வறுமையும் சிறுமையும் இன்றி வாழ்வார்கள். சோதியாய் சுடராய் ஏகனாய் எங்கும் நிறைகின்ற பொருளான இறைவனிடம் கொண்ட பேரன்பால் பாக்கியத்தால் பெருக வாழ்வார்.

புரட்டாசியில் தேய்பிறை அட்டமியில் முன்னே சொன்ன தீர்த்தத்துல் மூழ்கி, வேதப்பொருளாய் விளங்கிய பரமனது பொன் போன்ற அடிகளில் அருச்சித்துப் பூசித்து அருமறை தேர் அந்தணர்களுக்கு அன்னமளித்தால், அவர் பிதுர்க்கள் மூதாதையர் தேவர் உலகம் சேர்ந்து சுவர்க்க இன்பம் துய்ப்பார்கள் அத்தகைய பிரம தீர்த்தத்தில் வாயு திசையில், அந்நகரின் ஒரு பகுதியில், ஓர் அம்பு விழ் தூரத்தில், கௌமார தீர்த்தம் என்று ஒன்று உள்ளது. சூரனை வென்ற வீரவேற் பெருமான் —முருகக் கடவுளால் நிறுவியது தேவர்களும் கண்டு வியப்பத் திகழ்வது கார்த்திகை மாதத்தில் சூரியன் விருச்சிக இராசியில் சஞ்சரிக்கும்போது அந்த கௌமார தீர்த்தத்தில் அன்பால் ஆடி. தேவர் சிறை மீட்ட செந்திவேற் பெருமான் சேவடியை வணங்கி. அவன் புகழை. அனுபூதியை அலங்காரத்தை நெஞ்சுருகிப் பாடுகின்றவர்கள், அதிமதுரக் கவிகளைப் பொழியும் பாவலராய், நாவலராய், பாரோங்கிய சீரோங்கியவர்களாய் வாழ்வார்கள்.

அந்த கௌமார தீர்த்தத்தின் அருகில் ஓரிடத்தில் ஒரு வன்னி மரத்தடியில் செவ்வானம்போல் ஒளிவரும் ஓர் வேற்படையை; கதிர் வேற் பெருமான்—முருகன் நிறுவியுள்ளான். அதன் அருகே அப்பதியைக் காப்பவளாக—காவல் தேவதையாக துர்க்கை வீற்றிருக்கின்றாள். அவளது அனுமதியின்றி அத்தலத்தில் நாதவதிச் சுனையில் நீராடுதல் முதல் எச்செயலும் எவரும் செய்யலாகாது. சுவைமிக்க பால் பாயசமும் கோதுமை அன்னமுந்தான் அவளுக்கு உரிய இனிய நிவேதனங்கள் ஆகும் அவைகளை அவ்வம்மைக்கு விநியோகிப்பவர்கள் எவரேயானாலும் போரிலே பகையை வெல்வர். பகைவர் நிலை கெட்டு அழிவர். செல்வம் சிறந்தோங்கி வாழ்வர்.

[1] அயிலேறும் கையினனும் மயிலேறும் பெருமான்—அடியார்க்கு நல்ல பெருமான்—அவுணர்குலம் பொடியாக்கிய பெருமான் படைத்த தீம் புனல் வாவி—கௌமார தீர்த்தத்தில் முறையே ஆறு மாதங்கள் தொடர்ந்து மூழ்கினால், மக்கட் பேறில்லோர், அறிவுடைய நன்மக்களைப் பெற்று நல்வாழ்வு வாழ்வர்.

## ஐந்தாவது
## அரித்துவசன் சாபந்தீர்ந்த அத்தியாயம்.

புவியோங்கிய புகழ் தாங்கிய மகத நாட்டு மன்னன். சந்திரகுல பரம்பரையில் வந்து அவதரித்தவன். இந்திரன் போன்ற எழில்மிகப் படைத்தவன் அரித்துவசன் என்னும் ஆரிய அரசன் அரசாண்டான். அவனது மனைவி சுமதி என்பவள். திருந்திய கற்பால் அருந்ததி யனையவள். தெய்வந் தொழாதவள் கணவனைத் தொழுவாள். இல்லறத்தலைவி நல்லறம் புரிவாள். அரசியாக ஆங்கு அமர்ந்திருந்தாள்.

மாளிகைப் பத்தியும், சூளிகை வரிசையும் சேண்வரை உயர்ந்த சிகரங்கள் கொண்ட மாடமும், கூடமும் வரம்பிலவாகிய காம்பிலி என்னும் மேம்படு நகரில் அமைச்சன், புரோகிதன், தூதன், ஒற்றன் சேனைத் தலைவன் முதலிய [2] ஐம்பெரும் குழுவினர் அருந்துணையாலும், [3] எண் பேராயத்தின் இன்துணையாலும் மண்ணுயிரெல்லாம் தன்னுயிராக மாநிலம் காவல் பூண்டு செங்கோலரசு செய்து வந்தான்.

அருந்தவ முயன்ற பெருந்தவ முனிவன், ஊன்வற்றி உலர்ந்த மேனியன், என்புதோல் போர்த்த யாக்கையன், நிமிர்ந்து மேலோங்கி உயர்ந்த செஞ்சடையான், மார்பு தடவிய சிகையை உடையவன். திருநீறு இலங்கு செம்மேனியன், கண்டிகை அணிந்த குண்டிகைக் கையி

னன் மரவுரிதரித்தவன், மான்தோல் உடையவன், மாசற்ற நெறி வாய்ந்தவன், கருவாசமற்ற துருவாச முனிவன் புண்ணியப் [4]புனல்களில் [5] நண்ணி ஆடுவதற்கு, தவ உலகு விட்டுப் புவியுலகு வந்து, தலங்கள் தோறும் சஞ்சரித்து வந்தான். காம்பிலி நகரம் கடுகி வந்தடைந்தான் வயிறுகாய் பெருபசி வருந்திய நிலையில், கதிரவன் உச்சியில், காய்நடுப் பகலில், பசிப்பிணி மருந்து புசிக்க விரும்பி, மன்னவன் அரண்மனை முன்னர் வந்துற்றான். ஒரு கடிகை நேரம் பொறுமையாய் நின்றான். அரசன் இதனை அறியவில்லை. மாதர்களோடு மகிழ்ந்து குலாவினன். ஊழ்வினை வலியால் ஒருவரும் உணர்ந்திலர்.

---

1. ஐம்பெருங்குழு:- மந்திரி, ஒற்றன், தூதன், புரோகிதன், சேனாபதி.

2. எண்பேராயம்:- கருமாதிகாரியர், கடைகாப்பாளர், கனகச் சுற்றம், காரணத்தியலவர், யானை வீரர், குதிரை வீரர், சேனைத் தலைவர்.

3. புனல்=தீர்த்தம். 4 நண்ணி=அடைந்து.

*குமரகண்ட நோய்:— ஒருவகை வலிப்பு வாத சிலேட்டுமத்தால் பிறப்பது முன் கழுத்தையும் முகத்தையும் முறுக்கித் தோளின் பக்கம் வைப்பது தாடை, செவி, கண், உதடு இவைகளைக் கோணச் செய்வது' சன்னிபாதக் குறிகளையும் உண்டாக்கும். கொடுந் துன்பந்தருவது.

விதிவலி சிறிதால் மதிவலி மாறும் அரசன் என்னை அவமதித்தான் என்று முனிவன் உள்ளத்தில் முடிவுகொண்டான் வேந்தன் உணவு ஈந்தானில்லை என்னே மடமை! என்ன செருக்கு! என்னை அவமதித்த அன்னவன் *குமரகண்ட நோயால் பற்றப்படுவானாக என்று சபித்தான். மெல்ல நடந்தான், அக்கம் பக்கமாக நின்று இதனை அறிந்தவர்கள் சிலர். அரசனுக்கு யாது நேருமோ என்று அஞ்சி விரைந்துபோய் அரசனுக்குத் தெரிவித்தார்கள். கேட்ட காவலன் ஒன்றும் தோன்றாது திகைத்தான்; பதைத்தான்; விதிர்த்தான்; விரைந்து வெளியேறினான். தேடினான் முனிவனை. கண்ணுற்றான் காவலன், அடிகளில் தாழ்ந்து வணங்கினான். முனிவரேறே! தவ முதல்வ! தேவரீர் வருகையை எளியேன் ஒரு போதும் உணர்ந்தேனில்லையே! உணர்த்துவார் இல்லையே! இவ் வகையில் நேர்ந்த என் பிழையைப் பொறுத்தருள வேண்டுகிறேன்! வேறு எங்கு செல்வேன்? எவரிடம் கூறுவேன்? ஏதெடுத்துரைப்பேன்?

தேவரீரை அன்றிப் புகலிடம் வேறுண்டோ? தேவரீர் இட்ட சாபத்தைத் தேவரீரே அகற்றியருள வேண்டுகிறேன் என்று முறையிட்டான். அது கேட்ட முனிவனும் அரசி சுமதியளித்த அறுசுவை அமுது அருந்தினன். சினந்தணிந்தான். மனம் மாறினன், அருள்சுரந்து கூறுகின்றன். வேந்தே! துறவோர் கூறியசுடு சொற்கள் வச்சிராயுதத்தினும் வலியது. தீயினும் கொடியது. சொன்னல் சொன்னதுதான். சுட்டே தீரும் சூடு பட்டே தீரும், பலமுறை பணிந்து வேண்டும் நின்நிலை கண்டு நெடிதும் இரங்குகின்றேன். அறநெறியால் உலகோம்பும் அரசே! இச்சாபம் நீங்கும் விதத்தைச் சாற்றுகின்றேன் கேட்பாயாக!

கடல் சூழ்ந்த உலகத்தில் பரமன் வாழ்கின்ற புண்ணிய தலங்கள் பற்பலவாகும் பசுக்களிலே காமதேனுவைப் போல, மணிகளிலே சிந்தாமணியைப் போல, மரங்களிலே கற்பகத்தருவைப்போல, கடவுள் தலங்களிலே, தெய்வீகத்தால் சித்தியால் முத்தியால் சிறந்து விளங்குவது ஒன்று உண்டு. அது தன்னைத் தஞ்சமென்று வந்தவர்களின் சஞ்சலத்தைப் போக்கும் தீராத பிரமசாபத்தையும் தீர்க்கும். வேண்டித் தவம் புரிவார்க்கு முத்தியும் சித்திக்கச் செய்வது. நம்மால் தேர்ந்தெடுத்த அப்பேர்ப்பட்ட தலம் ஒன்று உள்ளது. அது எது என்பதையும் அதைப் போய் அடையும் வழியையும் சொல்கின்றேன்.

காவிரி ஆற்றைக் கடந்து தென்திசை சென்றால் வைகை நதியும் அதன் வலது பாகத்தில் மாளிகை சூழ்ந்த மதுரை மாநகரம் தென்படும். அதன் நடுவே இருதயம்போல் இலகும் சுந்தரேசன் ஆலயமும் பொற்றாமரை வாவியும் காணலாம். அதிலிருந்து தென்திசை இருகாத தூரத்தில் திருமகள் உறையும் திருச்சுழி தோன்றும் அங்கிருந்து நேர் கீழ்திசையில் நான்கு யோசனை தூரத்தில் இருப்பது அத்தலம், அதன் பெயர் பிரதிகோசபுரம் (உத்தரகோசமங்கை) என்பது. அதில் ஆதி மங்கள தேவன் அமர்ந்திருக்கிறான்.

அப்பெருமான் முன்னொரு காலத்தில் அம்பிகை கேட்க உண்மைப் பொருளை இரகசியமாக உரைத்தருளிய காரணத்தால் அப்பதி அப்பெயர் பெற்றது வடதிசையில் காசிப்பதி விளங்குவது போல தென் திசையில் முத்தியப்பதியாய்த் திகழ்கின்ற படியால் தெக்கணகாசி யென்று சிரோங்கியதாகும் பிரமாவின் பிரமகற்பத்திலும் அது அழியாது நிலைத்திருப்பது. தேவரும் யாவரும் வந்து வணங்கிச் செல்வது. புகழை வேண்டிய செல்வர் பொருளை வழங்குவதுபோல வானுயர்ந்த மரங்களும் கானிமிர்ந்த செடி கொடிகளும் காயுங் கனியும் குலுங்கும்

[1] பொழில் சூழ்ந்தது. பாம்பும் கீரியும் பகையின்றியுலாவும் மானும் புலியும் மருவி வாழ்வது [2] தருமை யாதீன மகாசந்நிதானம்—மாசிலா மணி ஞானசம்பந்த பரமாசாரிய தேசிகனது கருணை பொழியும். திரு முகத்தைத் தெரிசிப்போர்களுடைய பாசபந்தநோய் அகல்வதுபோல, தன்னை வந்தடைந்து சேவிப்பவர்களது பிறவிப்பணியைப் போக்குவது அப்பதி, பலவித அணியும் அலங்காரமும் உடையதால் பாவலரும் நாவலரும் தொடுத்த காவியங்கள் போன்றும் காட்சி தருவது

அப்பேர்ப்பெற்ற அத்தலத்திலே அக்கினி தீர்த்தமொன்று வேதியர் முனிவர்கள் விரும்பி மூழ்குவது. ஆதிமங்களேசுரன் சந்நிதிக்கு அண்மையில் ஈசானத்திலிருப்பது. அதைக் கண்ட அளவில் கல்லைக்கண்ட காகம்போல் தீவினைக் கூட்டங்கள் செயலற்றுப்போகும் [3] விரிகதிர்ச் செல்வன் விருச்சிக ராசியில் சேர்ந்த கார்த்திகை மாதத்துக் [4] கதிரவன் கிழமையில் காலை வேளையில் விநாயகன் அடிதொழுது விடைபெற்று, புராதன லிங்கத்தின் பொன்னடி பணிந்து வயிரவன் அனுமதி வணங்கிப் பெற்று, [5] தண்டுலம் [6] திலம் அறுகு தலைமேல் தாங்கி, பிரம மந்திரத் தைப் பேணி யுச்சரித்து, செம்மைசால் தீர்த்தம் மும்முறை வலம்வந்து யாவரே மூழ்கினும் பிரமசாரம் பேதுற்று அகலும். நலனும் நகுடனும் இம்முறை செய்து சாபமும் பாவமும் தவிரப் பெற்ற சிறந்த சேதி தெரிந்திலை போலும்!

படையுங் கொடையும் உடைய பார்த்திப, நீயும் நம் அனுமதிப்படி இங்கிருந்தகன்று அங்குப்போய், வண்டுகள் மொய்த்து மலர் மணங் கமழும் அம் மகாதீர்த்தம் சேர்ந்து, முன்கூறிய விதிப்படி மூழ்குவை யானல் இக்கடுஞ்சாபம் அக்கணம் அகன்றுபோம். மூக்கால் உரைத்தேன் மொழிதவருதே! ஐயமொன்றில்லை மெய்யுரையீது என்று வரம் அருளி, மாதவர் வாழும் இமயமால் வரை சார்ந்தான்.

திறங்கிடந்த தோளில் மறங்கடந்த வலியும் அறங்கிடந்த நெஞ் சும் உடைய அரித்துவசன், ஒருவாறு மனதிற் கொண்டானேனும் அல் லல் அகலவில்லை. ஆறுதல் கொள்ளவில்லை குபரகண்ட நோய் அவன் முகத்தையும் கழுத்தையும் முறுக்கத் தொடங்கியிருக்கப் பார்ப்பதும் அஞ்சியகல்வதுமாய் ஊசலாடத் தொடங்கியது. ஏன்? ஆதிமங்கள

---

1 பொழில் = சோலை.
2. தருமை = தருமபுரம்.
3. விரிகதிர்ச்செல்வன் = சூரியன்.
4. கதிரவன் கிழமை = ஞாயிறு
5. தண்டுலம் = அரிசி.
6. திலம் = எள்ளு.

தேவனும் அமரநாமமும்; உத்தரகோசமங்கையாம் உத்தமப் பெயரும் முனிவன் மொழிய செவிவழிச் சென்று அரசன் சிந்தையில் வைத்துத் தியானித்தபடியால்,

வேதியர் கூட்டமும், வேத முழக்கமும். வேள்விப்புகையும் அல்லும் பகலும் அகலாதோங்கும் அத்திரம் வாய்ந்த உத்தரகோச மங்கையை, அரித்துவசன். நாகமும் மோகமும் கொண்டு வேகமாக விரைந்து போயடைந்தான்.

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாகிய மூர்த்தியையும். அன்னையிலும் தயவுடைய அம்மையையும் கண்ணுற்றான் களிப்புற்றான். வேறு என்னுற்றானென்று அவனிலையை எவ்வாறு புகழ்வேன்! உள்நிறைந்து பொங்கும் அன்பு ததும்ப, உடல் இளக, கைகள் உச்சிமேற் குவியச் சிறு விண்ணப்பந் தெரிவிக்கின்றான்:— முனிவனிட்ட சாப நிவர்த்தியின் மூலமாய். ஊழ்வினை உந்த வந்து, செப்பரும் பெருமை சேர் இப்பெருந் தலத்தையும், தேவதேவனும் நின்னையும் தெரிசிக்கப் பெற்றது என் முன்னையோர் செய்த நல்வினைப் பயனேயாகும்.

முனிவன் கூறிய மொழி தவறாது அன்பே மயமாய் ஆனந்த உருவாய் அக்கினி தீர்த்தத்தில் ஆடியெழுந்தான். எழுந்ததும் பகலவனைக் கண்ட இருளதுபோலக் குமரகண்டநோய் குலைவுற்றொழிந்தது. அவ்வளவில், துன்பக்கடல்பட்டு இன்பக் கரையிலேறியவனானான். அன்பிற் கரைந்து கரைந்து உருகினான். என்னையாட்கொள்ள நின்ற அப்பா அரசே எனக் கூவினான் தாயைக்கண்ட [7]சேயைப் போல அழுதான் தொழுதான். ஆனந்தத்தால் ஆடினான் பாடினான்: முதல்வன் பெருமையைக் கூறி முறையிடுகின்றான்:—

"ஓங்காரப் பொருளான ஒப்பற்ற முன்னவனே! நகாரமாய் மகாரமாய் நகாரமாய் வகாரமாய் யகாரமானவனே! எண்ணே எழுத்தே! என் கண்ணே கருத்தே! கதிக்கான மோட்சவடிவே! [8]காமனை யெரித்தோய்! [9]மாமனை மாய்த்தோய்! திருமால் பிரமன் இந்திரற்குந் தேட அரியோய்! கருமாறிக் கதியடையக் [10]கால்மாறி நடித்தோய்! அண்டங்களெல்லாம் அணுவாகப் பெரிதானவனே! அணுக்களெல்லாம் அண்டங்களாகச் சிறிதானவனே! பேதையாகிய நான் பிறவிக் கடலில்

---

7. சேய்=குழந்தை
8. காமன்=மன்மதன்
9. மாமன்=தக்கன்
10. மதுரையில், வெள்ளியம்பலத்தில், கால் மாறியாடிய திருவிளையாடல்.

விழ்ந்து பேதுருமல் எடுத்தாண்டருள் புரிய வேண்டும் எந்தையே! தேவரீரையன்றி உறுதுணை வேறு அறியேன். தாள்களே தஞ்சமென்று சார்ந்தேன்'' என்று புலம்பித் தேம்பித் தேம்பியழுது அவசமுற்று மண் மிசைப் படிந்தான். சில [11] கடிகை சென்று தெளிந்தெழுந்தான் ஒதுங்கி ஒடுங்கி நின்ருன்.

பத்திவலையிற் படுவோனுகிய பரமன் 'அன்ப! இம்மையில் இகபர சாதனங்களைப் பெறுவாய் இறுதியில் மீண்டும் இங்கு வந்துறுவாய் பிறவி சாராது முத்தியம் பதவி சித்தியாகும்'' என்று கூறிய வானொலி வானதிா எழுந்தது. அது கேட்ட அரித்துவசன், பேரானந்தம் பெருக, தயாநிதியே! தேவரீரை இன்று நாயேன் பாவிப்போற்றும் இத்துதியை, யாவரொருவர். நித்தலும் உளமுருக விரவிப் போற்றிப் புகழ்ந்து நின்னை வாழ்த்தி வணங்குகின்ருரோ அவர் பிறவியிற் செய்த தீவினையாவும் தீர்ந்து உய்யுமாறு அருள் புரியவேண்டும் என்று பிரார்த் தித்தான் அரித்துவசன். எனவே இப்பிரார்த்தனையை ஒவ்வொரு நாளும் மூன்று வேளையும் நெஞ்சுருகி ஓதுகிறவர்கள் அறியாமை நீங்கப் பெற்று உண்மை யுணர்வோங்கி மெய்ப்பொருள் நாட்டத்தோடு மேற் கதியைப் பெறுவர்.

அரித்துவசன், அளவிலா ஆனந்த வெள்ளத்தில் மிதப்பவன் போலானுன். குடம் நிறையப் பால் பொழியும் மடுநிறைந்த பசுக்களை யும் விளை நிலங்களையும் வேண்டியவைகளையும் மறையவர்களுக்கு மகிழ்ந்து வழங்கினன் அன்னமும் [12]சொன்னமும் அளவிலா களித்தான். ஆதி மங்களேசுரப் பெருமானுக்கு வடமேற்கில்—வாயு திசையில், ஆறுவிற் கிடை தூரத்திலும், நடராசப் பெருமானுக்கு வலப்பாகத்தில் ஐந்துவிற் கிடை தூரத்திலுமாக தன் பெயரால் ஓர் கிணறமைத்தான். அது அரித்தவசகூபம் என்று அனைவராலும் பாராட்டப்படுகிறது. அதில் அவன் நீராடி, சாணையிற் கழுவிய [13]மாமணி போல எண்டிசையெங்கும் மண்டிய புகழோடு, நாயகன் சேவடி மறவாத சிந்தையோடு தம் பழம்பதி சேர்ந்தான்.

## ஆருவது

## நளன் கலி விடுதலையான அத்தியாயம்.

கலை பலவற்றை நிலைகண்டுணர்ந்தவன், வேத ஆகம விதிப்படி நடப்பவன். விரியன் சீரிய கூரிய மதியினன். நீதி வழுவா நெறிமுறை

11. கடிகை=நாழிகை. 12. சொன்னம்=தங்கம்.
13. மாமணி=மாணிக்கம்.

மன்னன். இல்லறம் துறவறம் இனிதே வளர்ப்பவன். தன்னுயிர்போல மன்னுயிர் ஓம்புவான் [1]பூசுரர் தேவர் பூசனை புரிவோன் இராச இருடி என்று எவரும் போற்றுவர். அரசர்களிலே ஆண்சிங்கம் போன்றவன். போரிற் புறங்கொடா வீரன். கானமே அணிகலமாக மதிப்பவன் மா நில மோங்கிய புகழான். நளனெனும் நாமவேந்தன்—சக்கரவர்த்தித் திருமான், மாவிந்த நகரைக் கோநகராகக்கொண்டு நிடதநாட்டை நீதியால் ஆண்டான். தமயந்தி என்னும் தையல் தன் இல்லாள் இந்திரசேனன் இந்திரசேனன், இந்திர சேனையாம் இருவரும் தங்கள் பெறலருமக்கள், இவர்களோடு இன்பமாய் வாழ்ந்தான்.

ஒரு நாள் ஒரு முறையீடு வந்தது — அரசே! ''வனவிலங்குகளால் வான்பயிர்கள் அழிகின்றன. மக்கள் மடிந்து இரையாகின்றார்கள். வழி செய்யவேண்டும். மாற்றியருளவேண்டும்.''

அவ்வளவில் அமைச்சரவையைக் கூட்டினன், அதில் முடிவுசெய்த படி வேட்டை வினையை மேற்கொண்டான் நளன். வேடர் சேனை நாற் புறமும் அலைபோல் அணியணியாக வந்தன. வேல் வாள்வளை குந்தம் வலாரி ஈட்டி முதலிய படைக்கலங்கள் பளபளவென்று மின்னின. தவில் தடாரி பேரிகை தம்பட்டம் சாகரம்போல் ஒலித்தன. காட்டைக் கலைத்து வேட்டையாடினன் காவலன்.

பார்க்கப்போனால் முனிவர்களும் ஒருவித வேட்டைக்காரர்கள் தான். அரசர்களும் அதைச் செய்கிறார்கள் அவர்கள் பாசபந்தமாகிற காட்டைக் களைந்து, காமம் குரோதம் முதலிய விலங்குகளை வேட்டை யாடுகிறார்கள். இவர்கள் செடி கொடிகளடர்ந்த காட்டைக் கலைத்து மக்களுக்கு இடையூறு செய்கிற [2]மாக்களை அலைத்து அகற்றுகிறார்கள். முன்னது அகப்பகை; பின்னது புறப்பகை அது சுயநலத்தால் செய்வது: இது பிறர் நலத்தால் செய்வது. அவ்வளவுதான் வேற்றுமை.

மன்னவனானவன், பலவித பகையில் நின்றும் மக்களைப் பாது காக்கக் கடமைப்பட்டவன் என்று மனுநீதி பேசுகிறது. பகை இரு வகைப்படுமென்று மேலே கூறினோம். அவைகளில் ஒன்று உயிர்களுக்கு உயிர்களால் வருகின்ற பகை அதாவது மக்களுக்கு மக்களால் வருகின்ற பகை அதைத்தான் அப்போது நளன் புரிந்தான், புறப்பகையாகிற புலி, கரடி, பன்றி, யானை, ஓநாய், செந்நாய் முதலிய கொடு விலங்குகளைக் களைந்தான் பயிர்களையும் மக்களுயிர்களையும் பாதுகாக்க.

---

1. பூசுரர்=மறையவர். 2. மா=விலங்கு.

உச்சி நேரமாயிற்று. கதிரவன் மழுவாய்க் காய்கிறான் களைப்பும் அலுப்பும் கவ்வியது. பசியும் தாகமும் பற்றியது பசிவந்திட எல்லாம் பறந்தோடுமல்லவா? ஓர் தீம்புனல் வாவி சேர்ந்தான். இன்சுவை யுணவுகொண்டான். சோலையிலே இளைப்பாறும் குளிர்பூஞ்சோலையை அடைந்தான். அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்தான். நீண்ட நித்திரை யில் திடீரென்று திடுக்கிட்டெழுந்தான். அண்மையில் நின்றிருந்த மெய்க்காப்பாளர்கள், அமைச்சர் முதலானவர்களுக்கு ஒன்றும் தெரிய வில்லை. அஞ்சி அருகில் ஓடிவந்தனர். நேர்ந்ததை அரசன் நிகழ்த்து கின்றான்.

"ஓர் தீக்கனாக் கண்டேன் ஓங்கி உயர்ந்ததோர் மரம். அதன் உச்சியில் ஓர் பெருநாகம். தலைகீழாகக் கரேலென்று தரையில் வீழ்ந் தது. பிளந்த பெருவாய், நஞ்சொழுகு பற்கள் மென்மையாய் ஊர்ந்து வந்து வன்மையாய் என்னைத் தீண்டியது. மேனியெங்கும் நஞ்சு பரவியது உருநிற மாறியது. கருநிறமாகியது. அழகத்தனையும் போய் வேற்று விகார விடக்குடம்பாயிற்று'' என்று துக்கம் தொண்டை அடைக்கச் சொன்னான்

பெருநில முழுதாளும் ஒரு பெரும் வேந்தே! கதிரவன் உச்சியில் வரும்போது காணும் கனாக்கள், கைமேற் பலிக்கும் என்பார்கள் கனா நூலறிஞர்கள் ஆயினும் அரசே அஞ்சல் வேண்டா. எப்பெருங்கனவும் செப்பரும் சாந்தியால் தப்பாதொழியும். சாந்தி புரிவோம்; சஞ்சலம் தவிர்வோம் தீமையை அகற்றத் தாமதம் வேண்டாம். தொடக்கத்தில் எதையும் துடைத்துவிடலாம்; முற்றிய பின்னர் முடிவிலாத் துன்பமாம் துன்பக் கனவைத் தொலைக்காவிட்டால் இடுக்கண் விரைவில் எய்திடும் நம்மை நல்லவர் பெரியவர் பகலில் துயில்கொள்ளார் என்று புரோகிதர் அமைச்ச ரியம்பினர்.

ஊழ்வினை வந்ததானால் ஒருவரால் விலக்கப்போமா? யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே. மன்னவன் விதிவழியே மதி வலியும் போயிற்று அரண்மனை புகுந்தான். அரசவை சென்றான் அரசியல் உலகியல்களில் ஆழ்ந்தான் அப்புறம், இசை கூர்ந்து ஆடல் பாடல்கள், அந்தப்புரம் என்ற மாயாசாலம் சூழ்ந்துகொண்டது. மாயை மறைப்பால் கனவை மறந்தான். கனவு நனவாவதைக் கவனிக்கவேண்டும். மனிதனுக்கு மறதி மாபெரும் பகை.

நளனுக்கு உடன் பங்காளி ஒருவன். அவன் பெயர் புட்காரன் அடுத்துக்கெடுக்க அநேகநாள் காத்திருந்தான். அடுத்துக் கெடுத்தலை ஐந்து தந்திரங்களில் ஒன்றென்பார்கள் அதுவே சந்திவிக்ரமம் என்று பஞ்சதந்திரம் பேசும். புட்கரனல் சூதுக்கழைக்கப்பட்டான். விதி விரைந்திழுத்தது, மதி மறந்து தள்ளியது, நளனும் உட்பட்டான் அறிவு மடமபட்டது, ஆடிஞர்கள் சதுரங்கம், சூது ஐம்பெரும் பாதகங் களில் ஒன்று ''கெட்டுப் போகிறவர்கள் விரும்பியேறும் கப்பல்'' என்று முன்னேயோர் மூதுரை மொழிகின்றது. அது பொய்யல்ல. அதிலேறி ஞல் வாழ்க்கைக் கடலில் கவிழவேண்டியதுதான்—தான் மட்டுமல்ல மனேவியு மக்களுங்கூட.

ஒரு கூலியாள், அவனுக்குக் கூடையும் மண்வெட்டியுமே கொள் முதல் பண்டம்—துணைக் கருவிகள் முதற்கருவி அவனுடல்—அதுதான் அவன் அசல் மூலதனம். அவைகளைக்கொண்டு பகலெல்லாம் மாடாய் உழைக்கின்ருன் மண்வெட்டியாய்த் தேய்கிருன். ''உழைத்தவன் கூலி பெறுவான்'' என்ற பழமொழிப்படி, ஏதோ அன்று கிடைத்ததைக் கொண்டு அவனும் மக்களும் மனேவியும் கஞ்சியோ கூழோ குடித்து அலுப்பாற அயர்ந்து எழுகிருர்கள். சூதர்கள் அப்படியல்ல அவர்கள் நிலேயே வேறு வயிருர உண்ணமாட்டார்கள். உடலயர உறங்க மாட்டார்கள், உணவை உறக்கத்தை உலகத்தை மறந்த மகான்கள் போன்ற அதிலே ஒடுங்கி விடுவார்கள். ''செம்மையில் அறம் செய்யாதார் தீரவியம் சிதறவேண்டி [3] நம்மையும் கள்ளும் சூதும் நான்முகன் படைத்த வாறே'' என்றெல்லாம் அறவோர் அறிவுறுத்திப் போயிருக்கிருர்கள். யார் இதைக் கவனிக்கிருர்கள் மற்ருெரு மகான் சொல்லுகிருர்; ''சூதை விரும்பியவனிடம் மூதேவியை அழைத்துவைத்து இருவீரும் சுபமேயிருங்கள் என்று கூறிவிட்டுத் திருமகள் சென்றுவிடுவாள்.''

சூதோடு தோழமைகொண்டு பதியிழந்தவர் பலர். நிதிதுலேந்தவர் பலர். கதிகலங்கியவர் பலர். பாண்டவர்கள் வரலாற்றைப் பாருங்கள்! நளனும் அதில் தப்பமுடியவில்லே. அவனுக்கு மட்டும் தனி விதியல்ல நாடிழந்தான்; நகரிழந்தான்; அரியணே யிழந்தான்; அரண்மனே யிழந்தான்; அனேத்தையுமிழந்தான் தானும் மக்களும், தமயந்தியும் நகர் வாசம்விட்டு வனவாசமாயினர் அதோடு விட்டானு கலியன்? அவர்களேயும் அக்கக்காய்ப் பிரித்தான். முதலில் மக்களேப் பிரித்தான் பின்னர் மனேவியைப் பிரித்தான். நளனேத் தனியே தவிக்க விட்டான். ஐயோ பாவமென்று அகம் இரங்கினஞ கலியன் — சனியன்?

3. நம்மை—விலேமாதரை

ஊழ்வினை யுள்ளத்தை வாட்ட, செய்வினை சிந்தையை யரிக்கப் புனத்திலே போய்க்கொண்டிருக்கிறான். "நறுமணங்கமழும் பொதியவர் சிந்தும் பூங்காவே! இன்னிசை யொலிக்கும் நல்லிசைக் குயில்காள்! களிநடம் புரியும் ஒளிவளர் மயில்காள்! கண்ணிழந்தேன்; மாயக் [4] கவருடினேன்; மண்ணிழந்தேன். என்போல் உழந்த காவலர் இம்மேதினியில் எவரேனும் உளரோ? கொஞ்சம் எடுத்துரைப்பீர்களா? என்று இரங்கினான்.

அவ்வனத்தருகே, கடலும் கடல் சார்ந்த இடமும் காணப்படுகிறது. கடற் காட்சியைக்கண்டு அதனருகே போகின்றான் நளன். அவனைக் கண்டு அங்கே ஊர்ந்து திரியும் நண்டுகள் ஓடி ஒளிகின்றன. அவைகளை நோக்கி நெஞ்சுருகக் கூறுகிறான்:—

"காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட, பாதகனைப் பார்க்கப்படாதென்றோ [5] நாதம் அளிக்கின்ற [6] ஆழிவாய் ஆங்கு [7] அலவ ஓடி ஒளிகின்றது என்றே உரை."

இவ்விதம் கல்லும் புல்லுங்கூடக் கரைந்துருகும் நிலையில் போய்க்கொண்டிருக்கிற நளக்கெதிரே ஓர் காட்சி தென்படுகிறது காட்சி பலவகை. அதிலே இது இன்பக்காட்சியல்ல; துன்பக்காட்சி ஓர் மரச்செறிவு. சூழ நெருப்பெரிகிறது நடுவே ஒரு நாகம், போக்கிடமின்றி உயிருக்கு ஊசலாடுகிறது. உதவி புரிவாருமில்லை. வழி தெரியவில்லை, உற்று நோக்கினான் நளன். உள்ளமுருகினான் அந்தோ என்று அங்கலாய்த்தான். விடுவிக்க விரைந்து முற்பட்டான் அத்தருணம் எங்கிருந்தோ ஓர் ஒலியெழுந்தது:— "அந்நாகத்தை எடு! பத்தடிக்கு அப்பால் இடு! தசவென்று சொல்லிவிடு!" இதைக் கேட்டதும் அரசன் அதிசயித்தான் அக்கம் பக்கம் ஓடினான்; தேடினான் யாருமில்லை; யாதுமில்லை ஒன்றும் புரியவில்லை. என்றாலும் இதுவோர் விந்தைப் பாம்பாக இருக்கலாமோ என்று வியந்தான் ஒரு கோலால் அதை எடுத்தான். அசரீரி கூறியபடியே [8] தச என்று சொல்லித் தரையில் விடுத்தான். "பாம்புக்குப் பால் வார்த்ததுபோல்" என்ற பழமொழி பொய்க்குமா? அவ்வளவில் அது வந்து அவன் காலில் தீண்டியதும் மறைந்து விட்டது

முனிவர்களே! இந்தப் பாம்பின் பழங்கதையையும் சுருங்கப் பகர்கின்றேன்; முன்னொரு காலத்தில் நகுடன் என்னும் பேரரசன் ஒருவனிருந்தான் அவன் வேதாகமங்களை விதிப்படி யோதியுணர்ந்தவன்.

---

4. கவறு=சூது. 5 நாதம்=ஓசை. 5 ஆழி=கடல்.
7 அலவை=நண்டே! 8. தச=பற்று.



| | | சுமார் விலை மதிப்பு ரூ. |
|---|---|---|
| 1) | தங்கச் சங்கிலியில் கோர்த்த பச்சை, வைரம் பதித்த வேடயப் பதக்கம் | |
| 2) | ரெத்தின முகப்பு 7 சர வெற்றிலை சரப்புளி | 2065 |
| 3) | ரெத்தின முகப்பு 9 சர எக்யோபவீதம் | 5720 |
| 4) | நடராஜர் முகப்பு 9 சர எக்யோபவீதம் | 2340 |
| 5) | 6 சர முத்துச் சூடா | |
| 6) | நயம் பச்சை மணிகள் முத்துக்கள் கோர்வை, ரெத்தின குவளை சிவலிங்க முகப்பு உள்ள 5 சர சூடா சுமார் மதிப்பு | 1163 |



லேட் ராஜா M. பாஸ்கர சேதுபதி அவர்கள் உபயம்
பெரிய பச்சை ரெத்தின முகப்பு வைரப் பூக்களும் உள்ள தங்க பெல்ட்
சுமார் விலை மதிப்பு ரு. 89625/-

இவ்வுலக பதவியைப் பார்க்கிலும் இந்திரபதவி யினிதல்லவா என்று இச்சித்தான். ஆசைக்கோரளவுண்டோ? நூறு அசுவமேத யாகம் செய்தால் அப்பதவியை அடையலாம் என்பதை அவன் அறிந்திருந்தான் எனவே அவன் அப்பதவியை விரும்பி நூறு [9] பரிமேத யாகம் புரிந்தான் பல ஆண்டுகளில் பலகோடிச் செலவில். யாகம் நூறும் முற்றியது. இந்திர பதவிக்குத் தேவசபையிலிருந்து அழைப்பும் வந்தது. [10] சப்த முனிவர்களும் [11] தண்டிகை தாங்க ஜயஜயவென்று அதில் ஏறிச் சென்ருன் நகுடன். இந்திராணியிடம் இன்ப நுகரும் பெருவேட்கை பிடர் பிடித்துத் தள்ளியது மனம் கட்டுக்கடங்கவில்லை. முன்னேயிழுத்தது. தலை கிறுகிறுத்தது விரைந்து செல்லுக என்று முனிவர்களை யேவுகிறவன் [12] "சர்ப்ப சர்ப்ப" என்ருன். 'தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ."

இதைக் கேட்டதும், முதன்முதல் தண்டிகை தாங்கிச் செல்லும் முனிவர் அகத்தியனுர் மூனிவுற்ருர். 'அடியார் அருவறுத்துத் தள்ளிய —புல்லிய காம இன்பத்தில் கருத்திழந்த கயவனே! நீ சர்ப்பமாகக் கடவாய்!" என்று சபித்தார். "துறவிக்கு வேந்தன் துரும்பு" பெரியார் கள் உள்ளம் பேதித்தால் யாதாகும்! பட்டம் பதவியெல்லாம் பஞ்சு போல் பறக்காதா! அரசுதான் யாதாகும்! அச்சொல் வெறும் சொல்லா வீண்போக? அரும் சொல்லல்லவா? அணுப்பிசகுமா? அப்படியே சர்ப்பமாய்த் தரையில் வந்து வீழ்ந்தான். அவன் தான் அது காமபரவச ஞகிக் கதியற்று விதியற்றுப் போன அவனும், சூதின் வசமாகிச் சுந்தர மான சுதந்தர நாட்டையிழந்த நளனும் அக்கானகத்திலே சந்தித்தது எவ்வளவு பொருத்தமுடையது பாருங்கள்!

உடல் முழுமையும் நஞ்சு பரவப்பெற்ற நளன், விடவெம்மையால் வெம்பி வெதும்பிக் கருகருத்துப் போயினுன். மாற்றுயர்ந்த பசும்பொன் வேற்றுருவானதுபோல, அன்று சுயவர மண்டபத்திலே, ஐம்பத்தாறு தேசத்து அரசர்களுக்கு மத்தியிலே தமயந்தியின் மனதைக் கவர்ந்த பேரழகும் சரிந்து போய்விட்டது! கடப்பாரெவரே கடுவினையை! பண்டை வினையின் பயனை எண்ணியெண்ணிச் சிந்தை நொந்தான். காடகங் கடந்து நாடகம் புக்கான். அயோத்திக் கரசனுகிய இருது மன்னனிடம் சென்ருன் சக்கரவர்த்தித் திருமானுகிய நளமகாராச னிடம் நான் சமயல் தலைவனுயிருந்தேன். நளபாகத்தில் நானிலத்தில்

---

9. அசுவமேதயாகம் 10 ஏழு முனிவர்கள்

11. பல்லக்கு. 12. சர்ப்ப = விரைந்து செல்க.

என்னை யொப்பார் யாருமில்லை என்று கூறி அப்பணியில்—பாகப்பணி அமர்த்தப்பட்டான். சில ஆண்டுகள் சென்றன

தந்தைய—[13]விதர்ப்ப தேசத்து வீமராசனைத் தஞ்சம் புகுந்த தமயந்தி, நளன் ஏக்கமாகவே அல்லும் பகலும் வாடி வதங்கினாள். கல்லுங்கரையக் கரைந்தாள். கறையானரித்த துரும்பு போன்றாள் தந்தையின் மூலம் ஒரு திட்டமிட்டாள், ஒற்றர்களை நாலா பக்கமும் போக்கினாள், அவர்களிலே அயோத்தி அத்தனை தூரம் சென்று வந்த ஒற்றன் ஒருவன் கூறினான்:- ''அன்னையே! அயோத்தி மன்னன் - இருது பன்னன் அரண்மனையில் ஒரு பாகன் உள்ளான் அவன் வாக்கினால் மன்னவனை யொப்பான். மறுகணம் யாக்கையை நோக்கினால் அவனல்ல.''

இதைக் கேட்டதும் தன்னம்பிக்கை தளிர்த்தது. திக்கெட்டும் திருமண ஓலை சென்றது - தமயந்திக்கு மீண்டும் ஓர் சுயவர திருமணம் நடைபெறப் போவதாக எட்டுத் திக்கும் முரசம் எட்டக் கொட்டியது. எல்லா அரசர்களும் வந்தார்கள். இருது பன்னனும் வந்தான். அவனுடன் பாகனும் வந்தான். தோழியர் மூலம் குழந்தைகளை அனுப்பித் துருவி உசாவினாள். கானகத்தே கைவிட்டுக் காணாமற்போன கண்ணினும் உயிரினும் இனிய கணவனை - நளனைக் கண்டணைந்தாள் தமயந்தி. கண்பெற்ற முகம்போலானாள். கார்பெற்ற கலாபமயில்போல் களிப்புற்றாள். கலியன் நீங்கினான். காலம் மாறியது உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லாதல்லவா?

புட்கரனிடம் இறந்துபோன நாடு நகரம் செங்கோல் சிம்மாசனம் அனைத்தையும் மீண்டும் பெற்றான். அரசியல் சக்கரம் அதிவேகமாகச் சுற்றத் தொடங்கியது. வளைந்த செங்கோல் நிமிர்ந்தது. நீதியாட்சி நிலமெங்கும் ஓங்கியது. ஆயினும் காட்டிலே கண்ட கனவு கருத்தைக் கப்பிக்கொண்டே யிருந்தது. அதற்கோர் கழுவாய் தேடக் கருதினான் நளன். ''ஆலயந் தொழுவது சாலவும் நன்று'' என்று ஆரம்பித்தான். புரோகிதர் அமைச்சர் புடை சூழ்ந்துவர படைகளும் தலைவனும் பக்கத்தே செல்ல, மறையவர்கள் மறைமுழக்கம் செய்துவர, நளன், மனைவி மக்களோடு புண்ணிய தல யாத்திரை புறப்பட்டான்.

காசி, கயை, கேதாரம், பண்டரிபுரம், அரித்துவாரம் முதலிய வடநாட்டுத் தலங்களைத் தெரிசித்துக்கொண்டு தென்னாடு சேர்ந்தான்.

---

13. விதர்ப்ப நாடு=பிகார் மாகாணத்தில் இருக்கும் நாடு.

வாயுத் தலமாகிய திருக்காளத்தியைச் சேவித்தான். பிருதுவித் தலமாகிய காஞ்சிபுரத்தைக் கண்டு வணங்கினன். சிதம்பரம் சேர்ந்தான்; நிதம்பரவி வாழ்ந்தான் பன்னள் பின்னர் சீர்காழி [14]புள்ளிருக்கும் வேளூர். திருவானைக்காவல், திருவரங்கம், திருவாரூர், திருமறைக்காடு, திருப்பெருந்துறை, திருப்புனவாசல், திருவாலவாய் திருச்சுழியல் ஆகிய ஆலயங்களை அடையவே வணங்கிக்கொண்டேபோய் ஆதிசிதம்பரம் என்று அன்பரெலாம் தொழுதேத்தும்—இலந்தை வனப்பதியென்று எங்கும் புகழும்—திருவுத்தரகோசமங்கை சேர்ந்தான்.

அத்தலத்திலே எழுந்தருளியிருக்கும் வேதநாயகனை—ஆலமுண்டு இருண்ட நீலகண்டனை—பாதாளேச்சுரனை, நாதவதியாகிய தேவியோடு கண்டு. பத்திமீதூரப் பரவசமாகி, நெஞ்சம் நெருப்பிடைப்பட்ட மெழுகுபோல் நெகிழ, நீரொழுகு நெடுங்கண்களோடு நின்றும் வீழ்ந்தும் எழுந்தும் பண்முறை பரவினன். என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே என்று இன்புற்றான் அன்புற்றான். நகரழகு கண்டு நனிமகிழ்ந்தான். உள்ளம் தூய்மையுற்றான். சலியால் விளைந்த சளங்கம் ஒழிய—கதியடைய ஓர் [15]பரிமேத யாகம் புரிய எண்ணினன்.

[16]வசந்த காலம். வசந்தன், விருதுகள் புடைசூழ, வாத்தியங்கள் முழங்கப் பவனி வருகின்ற காலம்—இளவேனிற் காலம் தாவரங்களெல்லாம் பழையன உதிர்ந்து புதுமை கொண்டாடுங்காலம் அது. அதில் வேதநான்கின் மெய்மை யுணர்ந்தவர்கள் ஆறங்கம் ஓதியுணர்ந்தவர்கள் விதிமிகத் தெரிந்தவர்கள் ஒழுக்கத்தால் உயர்ந்த உத்தமர்கள் ஆகிய அந்தணர்களைத் தொகுத்தான். அவர்கள் வேள்வி புரிவதிலே மேதைகள். அவர்கள் அளந்து கூறியபடி மூவர்கள் முதல்வனகிய முக்கட்பெருமான் ஆலயத்திற்கு நேர் கிழக்கே மூன்று அம்புவீழ் தூரத்தில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தான். சிற்பத்திற் சிறந்தவர்களையும் அலங்காரம் புரிவதில் அனுபவமுடையவர்களையுங்கொண்டு ஆயிரந் தூண்கள் அமைந்த அழகிய யாகசாலையொன்று நிறுவினன். அதன் நடுவண் யாககுண்டம் அணிபெறக் காட்சியளித்தது. அதைச் சூழ [17]வேதிகை மேம்பட்டிருந்தது. யாகசாலை முகடு முழுதும் வெண்பட்டால் [18]விதானமிட்டிருந்தது. பொன்னரி மாலைகள் எங்குந் தொங்கி மின்போல் ஒளிர்ந்தன முத்து மாலைகள் பத்தி பத்தியாய் நிலவொளி

---

14. புள்ளிருக்கும்வேளூர்—வைத்தீசுவரன் கோயில்.
15. அசுவமேத யாகம். 16. இளையுதிர் காலம்—பங்குனி, சித்திரை
17. திண்ணை. 18. மேற்கட்டு.

செய்தன. பவளக் கோவைகள் கதிரவனுதயமாய்க் கவின் செய்தன இப்படியொரு [19]ஒப்பனை வேலையெல்லாம் செப்பமாய் முடிந்தன

மன்னன், வேள்விபுரியும் வேதியர் குழாமொடு முதன் முதல் விநாயகனடி தொழுதான் விக்கினமின்றி வேள்வி முடியவேண்டுமென்று வினயமாக விண்ணப்பித்தான். விடைபெற்றான், வாஸ்து தேவனையும் வணங்கினான், வருதிபெற்றான். எல்லா இலக்கணமும் நிரம்பியதோர் எழில்மிக்க குதிரையை நல்லோரையிலே வேள்வித் தம்பத்தில் நிறுத்தி னான். வேதமுழக்கம் [20]சாகரம்போல் எழுந்தது மந்திர ஒலி மாருதம் போல் வானதிர்ந்தது. மங்கள பேரிகையெங்கும் ஒலித்தது; வாழ்த் தொலியும், சங்கொலியும், வழங்கொலியும் வானம் வரை எட்டியது. வேள்விக் குண்டத்திலே வேள்வித் தீ தன் பல்லாயிரம் நாவை நீட்டி விண்ணோக்கி யெழுந்தது; இப்படி யாகவினை ஒரு சார் நிகழ மற்றொரு பால், அந்தணர்களுக்கும் அகதிகளுக்கும், ஆதுலர்களுக்கும் காலை தொடங்கி மாலைவரை, அன்னதானம், ஆடைதானம், சொன்னதானம் ஆகிய அறப்பெரும் செயல்கள் அளப்பரும் வகையில் ஆற்றினான். இப்படி முதல் நாள்போல் பலநாள், பலவாரம் பல மாதங்கள் நடந்தன ஓராண்டு முடிந்தது. வேள்வி வினையும் முற்றியது.

அரசர்களிலே [21]அரியேறு போன்றவனாகிய நளன், அசுவமேத வேள்வி ஆண்டொன்றில் முடிந்தமைக் கறிதறியாக அக்கினி தீர்த்தத் தில் [22]அவபிருத நீராடல் செய்தான். வேள்விபுரிந்த வேதியர்க்குக் கறவைப் பசுக்களும், வேளாண்மையோடு விளை நிலங்களும், பொன்னும் பொன்னுடைகளும் வழங்கினான். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவு ளுக்குத் திருவிழாவெடுக்கத் திட்டமிட்டான். வைகாசி மாதத்து வளர் பிறையில் புனர்பூசநாளைப் பொன்னுளாகக் கொண்டான். சிவ தீட்சை யெல்லாம் செய்துமுடித்த. திருவருட் பாடல்கள் தேர்ந்து தெளிந்த பத்தி நெறியில் பழுதின்றி யொழுகும் ஆதிதசவர் ஐவரைக்கொண்டு கொடியேற்றுவிழாத் தொடங்கினான். கமுகின் குலைகளும் இளநீர்க் கொத்துகளும், நுங்கின் குலைகளும் எங்குந் தொங்கின. கரும்பின் கட்டும் தார் வாழைகளும் விருப்பிப் பார்க்க விருந்தளித்தன. மாவிலைத் தோரணம் [23]மருகெலாம் தொங்கின பூரண கும்பங்கள் இல்லங்கள் தோறும் பொலிவுடன் விளங்கின. இப்படித் தெருவலங்காரம் மனை

---

19. அலங்காரம் 20. கடல் 21. அரியேறு—ஆண்சிங்கம்
22. ஒரு நல்வினையை முடித்தோம் என்பதற்கறிகுறியாக அதனிறுதியில் நீராடல். 23. மருகு—வீதி.

யலங்காரங்கள் செப்புந்தரமல்ல, நாள் விழாவெல்லாம் நாலாவிதத்தில் நடந்தேறின. பூரணை நாளில், தேர்விழா தீர்த்த விழாவாகிய தேவ விழாக்களும் சிறப்புடன் முடிந்தன.

வெண்ணிறக் குடைகளும் செந்நிறக் குடைகளும், குழாம் குழாமாக விண்ணில் உயர்ந்து காணப்படுங்காட்சி, வெண்கதிரும் செங்கதிரும் அவ்விழாவைக் கண்டுகளிப்பதற்காக ஒன்றுபோல் எத்தனையோ உருவங்கள் தாங்கி ஆங்கு வந்திருக்கின்றனவோ என்று வியக்கத்தக்கதாயிருந்தது. அந்தக் குடைகளிலே சூழத் தொங்கவிட்டிருந்த முத்து மாலைகளின் தோற்றம். அவ் விருபெரும் சுடர்களைச் சூழ்ந்தியங்கும் நட்சத்திரக் கூட்டமோ என்று அதிசயிக்கத் தக்கதாயிருந்தது. பெருந்திரளான மாதர் குழாங்கள் கடல்போற் காணப்பட்டனர். அங்கே வீசப்படும் சாமரைகள், எழுந்து விழுந்துவரும் கடலலைபோற் காணப்பட்டன. அங்கு முழங்கும் பாடகம் பேரிகை [24] தண்ணுமை எக்காள ஓசையெல்லாம் அக்கடலோசைபோல் முழங்கின.

இறைவன் விழா இவ்விதம் இறுதிக் கட்டத்தை அடைந்தபின், இசையில் வல்லவர்களைக்கொண்டு இசையரங்கு செய்தான். நடனக் கலையில் வல்லுனரைக்கொண்டு நாட்டிய அரங்கு நடத்தப்பட்டது. நாடக மேதைகளால் நாடகக்கலை நயம்பட நடித்துக் காட்டப்பட்டது. இவ்விதம் அந்நாட்டு மக்களுக்கு எல்லா இன்பங்களையும் இனிதே அளித்தான்; தன்னுடு செல்லத் தாகமுற்றான். பொன்னார் மேனியனாகிய பர்தாளேசுரனுக்கு ஒரு கோடி பொன் அபிடேகம் செய்தான். மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்க்கின்ற என் செல்வா! நெஞ்சை நீராயுருக்கி என் ஆருயிராய் நின்றானே!! என்னை யாட்கொள்ள வந்த எந்தை பெருமானே!!! என்று பன்முறை ஒன்றிப் போற்றித் தொழுது வீழ்ந்து அழுது தேம்பி நின்று, பிரியா விடையாய் அரிதில் நீங்கித் தன்னுடு சென்று மன்னுயிரெல்லாம் தன்னுயிராகப் பல்லாண்டு இன்பவாழ் வெய்தினான்.

## ஏழாவது
## மங்கலபுரி, சதுர்வேதபுரியானது முதலான பல சரிதைகள் உரைத்த அத்தியாயம்.

பதி பசு பாசத்தின் உண்மை உணர்ந்து, பிரபஞ்ச வாழ்க்கையைக் கடிந்து, அங்கு இங்கு என்னாது எங்கும் பிரகாசமாய் நிற்கும்

24. மத்தளம்

இறைவனைத் தரிசித்து. சதானந்தமாகிய சிவானந்த சாகரத்தில் சதா சர்வகாலமும் மூழ்கி, நித்தியர்களாய் அத்தலத்தில் நீங்காதிருக்கும் மகான்கள் பற்பலராவர்:—

வியாசன், கௌதமன், சதானந்தன், அக்கினிபன், கெசிகன் காகபுசுண்டர், வெப்பிரு, மார்க்கண்டன், அக்கிரகன், விசுவாமித்திரன் பரத்துவாசன், சமதக்கினி, ரதீதன், அத்திரி, குசிலன், கோபிலன், மோனபார்க்கவன், வாமதேவன், சுமனி, பரமயோகி ஆகிய இன்னோர் ஆவர்.

மேலும் வேத ஆகமங்களின் மெய்ப்பொருள் உணர்ந்தவர்கள் இன்னுயிர் நாதனாகிய எம்பெருமானை நறுமலர்களால் அருச்சித்துப் பூசித்து ஆராதிப்பவர்கள். வேதவேள்வி புரிபவர்கள், கடவுளின் உருவத் திருமேனியைத் தியானத்தில் வைத்துப் பூசிக்கவும் தியான யோகியர்கள், முக்குற்றங்களையும் அருந்தவத்தால் அகற்றியவர்கள் கூடி வாழும் மேன்மையால், முன்னர் மங்கலபுரியாய் இருந்து பின்னர் சதுர்வேதபுரியென்றும் மாநிலம் புகழும் மகிமையைப் பெற்றது.

மங்கைநாயகன் தங்கியிருக்கும் திருக்கோயிற்கு தெற்கே நான்கு நாழிகைத் தொலைவில், ஓர் இலிங்க மூர்த்தி காணப்படுகின்றது. அதனைக் காளிச்சுரலிங்கம் என்று காசினியோர் கூறுவர். அது பெரும் வரப்பிரசாதமுள்ள மூர்த்தி, அதன் வரலாறு கூறுகிறேன். கேளுங்கள்! சிங்கவாகினியாகிய காளித்தேவியானவள் திரிபுரம் எரித்த செஞ்சடைக் கடவுளோடு வாதாடிய மாபெரும் பிழை போவது குறித்து, வைத்து வழிபாடு செய்தாள். அந்தியும் சந்தியும் ஆறு காலத்தும் ஆத்தியும் கொன்றையும் கொண்டும் அருச்சித்தாள். நீங்கா நிழல்போல் நிலை பெற்றிருந்து நித்திய நிமலனை நெடுநாள் பூசித்தாள், பக்தி பரவசமாயினள். பக்திவலையிற் படுவோனாகிய பரமன், அச்சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டுக் காட்சி தந்தருளி, காளிதேவி களிகூர வரங்கள் பல அருளினன். அதுமுதல் அத்தேவி அத்தலத்தைவிட்டு அகலாது அங்கே இன்றும் வாசம் செய்கின்றாள் என்று துறவோர் அறவோர் சொல்வார்கள். அதனால் அவ்விலிங்கம் காளீச்சுரலிங்கமாகக் கருதி வழிபாடு செய்யப்படுகிறது.

அன்றியும், அத்தலம், பிரமபுரம் என்று கிரேதாயுகத்தில் பேரோங்கியது திரேதா யுகத்தில் வெதிரி வனம் என்று சீரோங்கியது. துவாபர யுகத்தில் வியாக்கிரபுரம் என்று மேன்மையுற்றது. மங்கலபுரமென்பது

இக்கலியுகத்தில் வழங்கும் மங்களப் பேராகும். இப்படி யுகங்கள் தோறும் ஒவ்வொரு திருநாமத்தால் உயர்ந்தோங்குவதாகும் அப்பதி.

முன்னொரு காலத்தில் நவகோள்களும் தத்தம் நிலையினின்றும் மாறுபட்டுவிட்டன. இதனால் பன்னீராண்டு மழையின்றி வானமும் பூமியும் வரண்டது. நெடுங்கடலும் தன்வளம் குன்றியது. முன்னவன் கோயில்கள் பூசை முட்டு பட்டது. விசும்பினின்றும் துளிவிழுந்தால் பசும்புல் தலையும் பார்க்கலாம். இல்லையானால்? ஆதிபகவன் அர்ச்சனைக்கு நறுமலர்கள் கிடையாதொழிந்தன. திங்கள் சூடிய மங்களநாதன் திருமேனி தீண்டமலரில்? எல்லோரும் கவலையுற்றனர். மலர்தரும் மரங் களும் செடி கொடிகளும் வற்றியுலர்ந்தன. அத்தருணம் ஓர் செவ்வலரிச் செடிமட்டும் தழைத்துச் செழித்துக் கொத்துக் கொத்தாக மலர்கள் குலுங்க நின்றது அதைக்கண்ட ஆலய விசாரணைதாரும் அர்ச்சகர் களும் அதிசயித்தார்கள். ஆராய்ந்தார்கள், காரணங் காணப்போனால் அச்செடியின் அடிவேரில் ஓர் [1]மண்டூகம் தண்ணீர் ஊற்றோடு சார்ந்திருக்கக் கண்டார்கள். இதுவும் எந்தையாகிய பரமன் இன்னருளே என்று வியந்தார்கள்; புகழ்ந்தார்கள் அம் மாமலர்கள் கொண்டு, அனுதினமும் மாலைகள் புனைந்து, ஈசன் மாபாதம் அணிந்து பணிந்தார்கள். முனிவர்களே! சலந்தரன் என்பவன், சமந்த முனிவர் சாபத்தால் இத்தவளையானான். பின், சாபநிவர்த்தியாகவே இத்தலம் வந்து சேர்ந்தான். அவன் தான் இது.

யாராலும் அளவிடுதற் கரியவனேயானாலும், ஒரு கரத்து நீராலும், மலராலும் நெஞ்சுருகும் நிமலனல்லவா அவன்? மண்டூக மாகிய சலந்தரனது செயலுக்கிரங்கிய மாதேவன், ஓர் மெய்யடியாராகத் தோன்றி சலந்தரா! நாம் மனமகிழும்படி நமது பூசைக்கு மங்களப் பொருளாகிய மலர்ப்பொருளை வேண்டியவாறு விளைவித்தாய். அந்நல் வினையாகிய வல்வினையால் மறுபிறப்பில் வெற்றிமிக்க வேந்தனாக விளங்குவாயாக! அப்போது அசுரராலும் அரக்கராலும் தேவராலும் யாவராலும் மக்களாலும் மன்னவராலும் விலங்குகளாலும் பறவை யாலும் அழியா வரமும் அருளினோம் என்று கூறிவிட்டு மறைந்தருளினார்.

கடவுள் வரம் கைமேல் பலித்தது மறுபிறப்பிலே சலந்தராசுர னாகத் [2]தரணியில் சஞ்சரித்தான். "அறிபரானவர்க்குச் செல்வமல்லது பகை வேறுண்டோ?" என்ற ஆன்றோர் வாக்குப் பொய்க்குமா? அவன் நிகரற்ற நிதி, எதிரற்ற வலிமை. அழியாத ஆற்றல் பெற்றதால்

---

1 தவளை. 2. பூமி.

செருக்கும் மிடுக்கும் சிந்தையில் இடம் பெற்றது. ஆணவம் ஆகாகா என்று ஆர்ப்பரித்தது. எங்கும் உலவினன். எல்லோரையும் அழைத்தான். முசுகுந்தன் முதலிய பேரரசர்களும் கலங்கினர்கள் மக்கள் அஞ்ச மன்னவர்களஞ்ச வானவர்களும் அஞ்சினர். செம்மை எல்லாம் பாழாகிக் கொடுமையே அறமாகித் தீர்ந்தது.

இது கண்டு ஆற்றாமல் எங்கும் ஒரு அபயக்குரல் கேட்டது. ''மார்க்கண்டற்காக மறலியை உதைத்த மகாதேவா! மங்களநாதா? சலந்தரனைக் கொன்று எங்கள் சஞ்சலம் தவிர்க்கலாகாதா'' என்று ஒலமிட்டனர். அவ்வளவில் அஞ்சேல் என்று அருள் புரிந்தான் ஐயன் கோடி சூரியர்கள் உதித்தாலென்ன சுதரிசனன் என்னும் சக்கரப் படையைத் திருமாலின் திருக்கரக்கரங்களில் கொடுத்து விடுத்தான் பரமன். அப்படை ஒரு மாத்திரைப் பொழுதில் அவனை மாய்த்தது அனைவரும் அதிசயிக்க இறைவன் கரத்தே மீண்டும் வந்தமர்ந்தது. அதைக்கண்ட திருமால் அதன்மேல் ஆர்வமுற்று மங்கலபுரிநாதனை மலர்கொண்டு அருச்சித்து ஆராதித்து அப்படையைப்பெற்று அகமகிழ்வுற்றான். சலந்தரனும், முற்பிறப்பில் திருமேனியில் சாத்த மலரீந்த புண்ணியத்தால்—சக்கரப்படை தன்னுடலில் தீண்டிய மகிமையால், தேவருலகம் சேர்ந்து அமர வாழ்வு பெற்றான்.

வைகாசி மாதத்து [3]நிறைமதி நாளில் மாலை நோக்கில், ஒரு கலத்திலே பசுவின்பால் கொண்டு சென்று, அதனை வெள்ளிய சங்கில் நிறைத்து; மங்களேசுரன் திருமுடிலில் வார்த்து, பத்தியால் பலகாலும் பணிந்து பரவுகின்றவர்கட்கு, இறைவன், ஒரு பாதி பவளம்போல் மேனியும், மற்றொருபாதி மரகதம்போல் வடிவுமுடைய அர்த்தநாரிசுவர கோலத்தைக் காட்டி இன்னருள் புரிவான், அவ்னருளால் சகல சித்தியும் உண்டாகும். தவத்தாலுயர்ந்த மார்க்கண்டனே முதல் முனிவர் பலர், இங்ஙனம் புரிந்து, எம்மை ஈன்றாளும் எம்பெருமானும் காட்சியளிப்பக்கண்டு, ஆனந்தங்கொண்டு சீவன் முத்தராய்த் திகழ்ந்த பெருமையைச் செகமெலாம் எடுத்தேத்தும்.

## எட்டாவது

## பார்வதி தவம்புரிந்த அத்தியாயம்.

கடவுள் தன்மை வாய்ந்த கயிலைமலையைக் காவல் புரியும் காவற்கார நந்தி தேவனை, சனற்குமாரன் அடிபணிந்து நின்று கருமாறிக்,

3. பூரணச்சந்திரன்.

கதியடைய வழிகாட்டும் கயிலைமலைக் காவல! அக்கினி தீர்த்தத்தின் அகிலப் பெருமையை அப்போது அறிவித்தீர்கள் அது தோன்றிய ஆதி வரலாற்றையும் அடியேனுக் கருளல் வேண்டுமென்று விண்ணப்பித்தான்'

சனற்குமார! சன்மார்க்க முனிவ! ஒளிப்பொருள்கள் அனைத்துக்கும் ஒளிவழங்கும் பேரொளியாய், வரம்பில்லாத ஆற்றல் படைத்திலகும் மாதொரு பாகன். ஆதியில் படைத்ததாகும் அந்த அக்கினி தீர்த்தம். அதனால் ஆதிகங்கை என்பது அதன் ஆதிநாமம். பின்னர் இப்பெயர் எவ்வாறு வந்தது என்பதையும் இங்கே எடுத்துரைப்போம்

முன்னொரு காலத்தில் ஆயிர முனிவர்கள் ஐம்புலனை அடக்கிய வர்கள் அகங்காரம் அவிந்தவர்கள். அறுபகையை வென்றவர்கள் ஆகம விதிப்படி நின்றவர்கள். இறைவன் ஆணையிற் சென்றவர்கள் ஓர் அருந் தவம் ஆற்றுவதற்கு பெருந்தலம் ஒன்று தேடினார்கள். தேடித் தேடித் திரிந்து தேடிக் கண்டுகொண்டோம் என்று அத்திவ்விய தலத்தை—வியாசனிருந்து வெகுதவம் செய்த வெதிரி வனத்தை—முடிவான தவ வனமாகக் கண்டெடுத்தார்கள். திருமாலும் நான்முகனும் தேடியுங் காணாத நிருமலன் ஆலயத்திற்கு நிருதியு திசையில் அமர்ந்து, நெடுநாள் தவம் புரிந்தனர் அம்முனிவர் ஆயிரவரும்.

வேண்டுவார் வேண்டுவதே யீவானாகிய மெய்ப்பொருள், முனிவர்களை நோக்கி ''மெய்யன்பர்களே! பெண்கள் திலகமாம் வண்டோதரி யென்பவள், உலகில் உயர்ந்த உத்தமி கற்பால் பொறபால் ஒப்புயற் வற்று விளங்குபவள். மாதர் குலத்திலே மாமதி போன்றவள் அது மட்டுமல்ல; அவள் ஓதலும், ஈதலும் உடையவள். பூசையும் நேசமும் பூண்டவள். சீலமும் சேவையும் சிறந்தவள். அனவரதமும் நம்மையே நினைந்து நெஞ்சுருகச் செய்யும் தெய்வ வழிபாடு இவ்வளவவ்வளவல்ல அவள் தவத்தால் முதிர்கின்றாள். அது நம்மை யீர்க்கின்றது, தாமதி யோம் அவள்பால் இலங்கைமூதூர் ஏகின்றோம். நீவிர் அனைவரும், இத்தலம்விட்டு அகலாதிருப்பீர்களாக! இதோ எம்மால் தரப்படுகின்ற [1] இவ்வேதாகம நூலை ஓம்புவீர்களாக! இலங்கை அரசன் இராவணனால் நம் திருமேனி எப்போது தீண்டப்படுகிறதோ அப்போது அதனறிகுறி

---

1. ''மன்னுமாமலை மகேந்திரத்திலிருந்து சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்'' இம் மணிவாசகம் அதனை வலியுறுத்துகிறது. மகேந்திரம்—உத்தரகோசமங்கை.

யாக இதோ இருக்கின்ற இப்புனித வாவியின் நடுவே ஓர் அக்கினிப் பிழம்பு தோன்றும்'' என்று வானதிர மண்ணதிர ஓர் வானொலி தோன்றியது அது கேட்டு முனிவர் ஆயிரவரும் ''விண்ணிலே மறைந்து அருள்புரி வேதநாயகனே! கண்ணினால் உனைக் காண்பதெப்போது' என்று கூறிக் களித்தார்கள்.

மாதர்குல மாணிக்கமாகிய வண்டோதரி எவ்வுருவாக இறைவனை நினைந்து நினைந்து ஏங்கித் தவமிருந்தாளோ அவ்வுருவாக—அழகிய மன்மத கோலமாக ஐயன் அவள்முன் தோன்றினான். வேண்டுவார் வேண்டுவதே நல்கு மெய்ப்பொருளல்லவா? அந்தக் காட்சியில் அவள் அப்படியே பரவசமாகி சிந்தைகெட்டுச் செயலற்றுப் பேச்சற்று ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள அசைவற்ற ஓவியம்போல் நின்றாள். அத்தருணம், இராவணன் அங்கே திடீரென்று வந்தவன் பச்சைப் பசுங்குழவியாய் அவள்முன் கிடக்கும் பாலகனைக் கண்டான். குழந்தையின் கண்கொள்ளாப் பேரழகு கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவர்ந்தது. களிப்புடன் யார்பெற்ற பொற்சேய் இது என்றான் யாரோ ஒரு தவமகள் இக் குழந்தையைத் தந்து சென்றாள். இப்பாலகன் என் உள்ளங்கவர் கள்வனாக விளங்குகின்றான் என்றாள். அவ்வளவில் வான வில்லைப்போல அக்குழவியின் மேனி ஏழு நிறங்கள். வினாடிக்கு வினாடி மாறி மாறி ஒளிவிசின. அது கண்ட இராவணனும் பெரும் வியப்புற்று. ஒரு மேகமானது கதிரவனைத் தழுவுவதுபோல, குழந்தையை வாரியெடுத்து மடிமீது வைத்து மகிழ்ந்தான். அவ்வளவில் ஐயன் முனிவர்களுக்கு முன் அருளியபடியே அப்புண்ணிய தீர்த்தத்தின நடுவே ஓர் தீப்பிழம்பு எழுந்தது. அதுகண்ட அம்முனிவர் அனைவரும் ஆற்றாது ஒருங்கே திரண்டுவந்து [1]அச்சோதியின் நடுவே வீழ்ந்து மூழ்கி மறைந்தனர்.

அவர்களில் ஒருவர் மட்டும் அவ்வாறு செய்யவில்லை. அவர் ஆண்டால் இளைஞர். அறிவால் முதியர். வேதியர் குலத்தவர். கல்வி கேள்வியில் வல்லவர். வணங்கிய வாயும் நுணங்கிய உள்ளமும் உடையவர். வேதநாயகன் விரும்பியளித்த வேதாகமச் சுவடியைக் கைவிட்டால் விளையுந் தீங்கு யாதாமோ என்று அஞ்சினர். அதைப் பாதுகாத்தல் நம் கடமையெனக் கடைப்பிடித்தார். அத்திருமுறையைக் கைவிடாது பற்றிய படியே அவர் அப்புண்ணிய தீர்த்தக்கரையில் தானே அமர்ந்து விட்டார்.

---

1. ''எய்தவந்திலாதார் எரியிற் பாயவும்'' — திருவாசகம்.

பின்னர் தவமகளும் முதுமகளுமாகிய ஓர் மூதாட்டி, மண்டேதாரி யிடம் வந்து கடவுள் குழந்தையை கைக்கொண்டு போயினள்.

தீப்புனல் வாவியின் நடுவே தீப்பிழம்பினூடே குளித்த தொளா யிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மருக்கும், தெய்வநாயகன் தேவி யோடும் காட்சி கொடுத்து, ''நம் சந்நிதியை அகலாதிருந்து நித்தியா னந்த வாழ்வில் என்றும் நிலைப்பீராக'' என்றருளினன். அன்று முதல் அம்மங்களபுரிநாதருக்குக் [2]காட்சி கொடுத்த நாயகன் என்ற திருநாமமும் வழங்கலாயிற்று. அன்னை மங்களேசுவரிக்கு சுந்தரநாயகி என்ற பெயரும் தோன்றியது.

மேலும் வேதமருளிய திருவாயான் விளம்புகின்றான், முனிவர்களே ''நீவிர் அனைவிரும் செயற்கரும் செயல் செய்தீர். நம் இன்னருளுக்கு இலக்கானீர்கள். இத்தலத்திலே ஒவ்வொருவரும் ஒவ்வொரு இலிங்க மாக உறைவீர்கள். உங்கள் மத்தியில் நாமும் ஓர் இலிங்க மூர்த்தியாய் அமர்வோம். [3]ஆயிர மூர்த்திகளும் புவனம் புகழ்ந்தேத்தும் சிறப்புடைய மூர்த்தங்களாக விளங்குவோம். ஒருவரொருவர் தூய மனம் உடையவராய், அன்பில் கரைந்துருகி, வாயார வாழ்த்திப் பணிந்து பரவுகின்றார்களோ அவர்கட்கு, அவரவர் பக்குவநிலைக்கேற்ற வரமருளுவோம்''.

போதநூலாகிய வேதநூலைப்பற்றிய வண்ணம், புண்ணியப் பொய்கைக் கரையில் அங்கும் இங்கும் பெயராது, தன்னந்தனியே தவ மிகுந்த முனிவரை நோக்கி, திங்கள் சூடிய தெய்வநாயகன் திருவாய் மலர்ந்தருளுகின்றான்:—

''நாம் அளித்த சிவகாமத் திருமுறையை — ஞானக் கருவூலத்தை உன் உயிரினும் இனிதாக ஓம்பினாய் உயிருக்குயிராகிய எம்மினுமினிதாக எண்ணினாய். ஏனைய முனிவர்களுடன் சென்று நீ அடையும் பேற்றினும் பெரிதாகப் பேணினாய் என்னே நின் செயல்! நீ இத்தவக்கோலத்தோடு எம்மை யகலாது எமது இதயமுருக்கும் இன்னிசைப் பாடலால்—இன்பப் பாக்களால் நம் புகழைப் பன்னெடுங் காலம் பாடுவாயாக! தேவ வருடம் ஒரு நூறு சென்றதும், நம் அருளால் இப்பாண்டி நாட்டிலே ஓர் பழம்

---

2 ''உத்தரகோச மங்கையிலிருந்து, வித்தகவேடங் காட்டிய இயல்பும்'' இம்மணிவாசகம் அதனை மெய்ப்பிக்கிறது.

2. இன்னும் அத்தலத்திற் காணப்படும் சகஸ்திரலிங்க மூர்த்திகள் இவ்வரலாற்றை மெய்ப்பிக்கின்றன.

பதியிலே மறையவர் குலத்திலே அவதரிப்பாய்! அப்போது எம்மால் தடுத்தாட்கொள்ளப்படுவாய்! மாணிக்கவாசகன் என்று உன்னை மாநிலம் புகழும்! நாம் அமரும் தலங்கள் தோறும் சென்று, சென்று, வழிந்து செந்தேன் உகுவனபோல் உன் மதுரங்கனிந்த தமிழ்ப் பாடலால் நம்மை மகிழ்விப்பாய்' அன்று நீ, ஒப்பாரும் உயர்வாருமில்லாத உத்தம ஞானபானுவாய் உலகத்துலவுவாய்! அக்காலத்திலும் இதே என் தெய்வ சந்நிதியில் உனது தேனினுமினிய பாகினுங் கனிந்த திருவாசகத் தீம்பாடல்கள் தெவிட்டாமல் நம்மைத் தித்திக்கச்செய்யும். உன்னால் சைவமும் தமிழும் தழைத்தோங்கும். யோகசாதகர்களும் ஞானவான் களும் பெருகுவார். அதன் பேரில் எத்தலத்தில் உன்னைத் தடுத்தாட் கொள்வோமோ அந்த உன்னத ஞானதலத்திலே, நீ வேறு நாம் வேறு என்பதின்று, உன்னை நம்மிலே நாமாக ஐக்கியமாக்கிக் கொள்வோம்.'' இவ்விதம் மறைமுனிவருக்கு வரம்ருள் செய்தான். அது முதல் ஆதி கங்கை, அக்கினி தீர்த்தம் என்ற அருந்திரு நாமத்தால் அழைக்கப்படுவ தாயிற்று

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியாம் அனாதி முதல்வன், அத்தலத்தில் ஆனந்த நடனம் புரிகின்றான். ஆதலால் ஆதி சிதம்பரேசன் ஆனான். அவன் சந்நிதிக்கு நேர்கிழக்கே, மங்கை நாயக னுக்கு ஈசானத்தில், தேவர்கள் தலைவனாகிய இந்திரன் வந்து, தேவர்கள் தேவனைச் சேவித்து, சாப வினையெலாம் அகற்றும் தயாபரனாகப் பாவித்து, பாரிசாத மலர்களால் அர்ச்சித்துப் பன்னெடுங்காலம் தவம் புரிந்து கௌதமனிட்ட கடுஞ்சாபத்தினின்றும் உய்ந்தான். அதனறி குறியாக அவனமைத்த இந்திர விமானம் — விண்ணிழி விமானம் அங்கிருப்பதை யின்று என்றுங் காணலாம் கடவுள் சந்நிதிக்கு நேர் வடக்கே அக்கினி தீர்த்தத்தின் நேர்மேற்கே.

இராதந்திர கற்பகாலத்திலே பிரமன் தவம்புரிந்து பேறு பெற்றான். ஆதலால் அப்பதி பிரமபுரம் என்ற பெயரும் உடைய தாயிற்று என்று முன்னே சொன்னோம். தேவர்கட்கெல்லாம் அரசி யாகிய தேவநாயகிக்கு அவர் ஓர் திருவிழா எடுத்தான்—பெருவிழா—[4]ஊஞ்சல் விழா; பவளக்கால் நாட்டி, மரகதவிட்டமிட்டு, முத்துவடம் பிணித்து, பசும்பொன் பலகையாலாகிய ஊஞ்சல்.

சூரியன், தனுர் லக்கினத்தில் சேர்கின்ற மார்கழி மாதத்துத் திரு

---

4. மாணிக்கவாசகர் பாடிய திருப்பொன்னூசல் இதை உறுதி செய்கிறது.

வாதிரையில் சந்திரன் சந்திக்கின்ற தினத்தில், பூரணை திதியில் பொன் விழாத் தொடக்கம் தலைவிழா முதல் இறுதி விழா வரை வேதவிதிப்படி தெய்வீகம் திகழ்ந்தோங்கியது. கடைசியாய் பதும தீர்த்தத்தில் நீராடு விழாவும் நிறைவேறியது. பதும தீர்த்தமென்பது முக்கரணங்களையுங் கடந்த முதல்வன் கோவிலுக்கு கிழக்கே, ஓர் அம்புவீழ் தூரத்தில், தாமரை மலர்கள் மொய்த்து வண்டுகள் ஒலிக்கும் தனி அழகுடையது ஆராயுமிடத்து அதன் பெருமை எம்மால் இசைக்க இயலாது.

நவபிரமாக்களில் ஒருவனுகிய தக்கன் முற்காலத்தில் ஒரு யாகம் செய்தான் தக்கவிதமான யாகம்—தக்க யாகம் ஒப்புயர்வற்ற யாகம் அதில் திருமால் பிரமன் இந்திரன் முதல் தேவர் அனைவரும் முனிவர் குழாம் இருடியர் குழாம் எல்லோரும் வந்து குழுமினர். பார்த்தான் தக்கன் தன்பெருமை கடல்போற் காணப்பட்டது. தேவரும் மூவரும் யாவரும் தனக்கீடில்லையென்று மதித்தான். தானே நாயகன் என்று தருக்குற்றுன் எவ்வுயிர்க்கும் இறைவனையும் இறைவியையும் மதித்தா னில்லை. இகழ்ந்து புறக்கணித்தான் புன்மதியால் அவ்வாறிருக்க, எந்தை யாகத்தைக் காணும் பொருட்டு நாம் இருவரும் செல்லவேண்டும் இல்லையேல் எனக்கேனும் போவதற்கனுமதி வேண்டும் என்று இறைவி வேண்டினுள். இறைவன் அதற்கு அருள் செய்தானில்லை — வாளா இருந்தான். அந்நிலையில் தேவியானவள் கணநாதர்கள் புடைசூழ தந்தையாம தக்கன் வேள்விச்சாலை புகுந்தாள். தக்கன் வரவேற்கவில்லை வாவென்று சொல்லவில்லை ஏனையர்களும் ஏனென்று கேட்கவில்லை. புல்லிய அறிவால் மேல்விளைவ தொன்றையும் எண்ணுது இகழ்ந்தனர்.

அவர்கள் இகழ்ந்தது கண்ட அம்பிகை, சீற்றமேற்கொண்டு, இறைவனிடம் செல்லவும் அஞ்சி, மூலாக்கினியை மூண்டெழச்செய்து, அதிலே தன் உருவம் மறைந்துபோகுமாறு பண்ணினுள். இதனை யுணர்ந்த இறைவன் சினந்தான். நெற்றித் தனிக்கண் நெருப்பி னின்றும் தோன்றிய அகோர வீரபுத்திரனை நோக்கி அருமை மைந்த! தக்கன் வேள்வியைத் தகர்த்து, அவன் சேனையை வேள்வித் தீயில் தள்ளி திருமால், பிருமன் முதலியவர்களைக் கொடுங்கோல் மன்னன் குடிகளைப் போல் நடுங்க வாட்டிவா! என்று ஏவி, இமயமலை சென்று இறைவன் யோகத்தில் அமர்ந்தான் இமயவேந்தன் இயற்றிய தவ மகிமையால் அவனது அரும்பெறல் மகவாக இறைவியுதித்தாள் இமயமன்னன் வேண்டுகோட்கிரங்கி இறைவன் இறைவியைத் திருமணம் புரிந்தான். பின்னுட் சென்றதும் "நீ என் சொல்லை யிகழ்ந்து உன் தந்தையின்பால்

சென்ருய். அவனுல் புறக்கணிக்கப்பட்டாய் குற்றம் உன்பால் உள்ளது. அத்தவறு நீங்குவதற்கு நீ மண்மேல் சென்று தவம் புரிந்தாலன்றி வேறு வழியில்லே இல்லேயேல் அப்பிழை உன்னே விட்டகலாது அதற் கோர் சிறந்த இடம கூறுவோம். ஆயிரக்கணக்கான சிகரவரிசைகளே யுடைய நாவலந் தீவிலே தென்றிசையிலே உத்தரகோசமங்கை யென்ற ஒப்பற்ற புனித தலம் உள்ளது. இக்காலத்தில் இலந்தை வனம் என்று எண்டிசையிலும் ஏற்றமும் தோற்றமும் உடையது. பெண்ணே! அத் தகைய பதியில்போய் நீ. நூறு தேவயாண்டுகள் வரை ஆர்வத்தோடு நம்மை நாடி அருந்தவ மேற்கொள்வாயாக "நாம் அப்போது உன்னே அங்கே ஆட்கொள்வோம்".

இதனைக் கேட்ட தேவி, தன் பிழையையுணர்ந்து முதல்வன் மொழியைத் தலைமேற்கொண்டு அம்மூதூரை யடைந்தாள். ஓர் இலந்தை மரத்தை நட்டு வளர்த்தாள் நாதவடிவாயுள்ள வேதநாயகன் வீற்றிருக்கும் திருக்கோவிலுக்கு ஈசான கோணத்திலே மணமிக்க நறு மலர்கள் செறிந்து அழகு தவழும் ஓர் பூம்பொய்கை புண்ணிய தடாகம் புதிதாயமைத்தாள் அதன் பெயர் சீதளவரவி என்று செப்புவார்கள். தேவி தீர்த்தம் என்ற திருநாமமும் உண்டு. அதன் கீழ்பால் ஒரு பன்னசாலே அது உருவத்தால் சிறியது. உயர்வால் பெரியது. அருளால் அறிவால் அரியது அதில் யோகத்தில் அமர்ந்தாள். அன்னே அருந்துவது, பருகுவது அகன்ருள். காற்றே உணவாக உட்கொண்டாள். ஐம்புலப் பகையை அடக்கினுள். அறுவகைக் குறும்பை அறுத்தாள். அருவுருவான தலைவனையும் அருச்சித்தாள் எவ்வுலகும் புகழ்ந்தேத்தும் இறைவியையும் வழிபட்டாள். "தூங்கிக் கண்டார் சிவயோகமும் தன்னுள்ளே, தூங்கிக் கண்டார் சிவபோகமும் தன்னுளே. தூங்கிக் கண்டார் சிவபோகமும் தன்னுளே தூங்கிக் கண்டார் சிவலோகமும் தன்னுள்ளே" என்று மலையரசன் மகள் சிவயோகச் சிகரத்தில் வீற்றிருந்தாள்.

அம்பிகை நட்ட இலந்தை, ஆதியுகத்திற்கு அடுத்த யுகத்தில் தேன் துளிக்கு மலர்க் குருந்தாய்த் திகழ்ந்தது. துவாபரத்தில் காது உதிரும் சண்பகமாய்ச் சார்ந்தது. நாலாங் கலியுகத்தில் பூவிரியும் மகிழாகப் பொலிகின்றது.

ஏழைகளின் பங்கிலிருப்பவனும், ஏழை பங்காளனுமாம் மங்கைப் பெரியோனே பிரமன் முன்னே பேணி வழிபட்டான் வியாச முனிவன் வேண்டித் தவம்புரிந்தான். இமயம் ஈன்ற தாய் இனிது பூரித்தாள். அமுதக் கடலிற் பிறந்த திருமகள் அடிசார்ந்து தவமிருந்தாள் இந்தப்

பன்னரும் பெருமையைப் பார்த்த பின்னர், எண்ணற்ற முனிவர்களும் இருடியரும் வந்து, இலந்தைவனக் கனியைத் தொழுது எல்லையற்ற நல் வினைகள் மேற்கொண்டு இன்பப் பெருவாழ்வு பெற்றனர். மேலும், யாகம் புரிந்தவர்களும், தியான யோகம், சமாதி யோகம் முதலிய எண்வகை யோகத்தில் அமர்ந்தவர்களும், தவம்பல சார்ந்தவர்களும், நறுமணங்கமழ நந்தவனம் வைத்தவர்களும், அகதிகட்கு அன்னதானம் புரிந்தவர்களும், நியமநிட்டை தவருதவர்களுமாய், இப்படி இறையோன் உளம் மகிழ இருப்பவர்கள் அத்தலத்தில் எண்ணிறந்த பேராவர்.

வானுயர்ந்த பலமாளிகை சூழ்ந்த அப்பதியில் நிகழ்ந்ததோர் வரலாற்றைக் கூறுவோம். மறையவன் ஒருவன், நியமநிட்டை தவரு தவன். வேதமுழுதும் ஓதியுணர்ந்தவன்; மந்திர விதியினை வகையுறத் தெரிந்தவன். சிவார்ச்சனைத் (குருக்கள்) தொழிலைச் செய்து வருபவன் மங்களநாயகன் மலரடிகளில் முதிர்ந்த அன்பினன். அறவோரையும் அன்புடன் ஆதரிப்பவன். இலைதழைகளாலியன்ற சீரையுணவு கொள் பவன் அதிக சுந்தரன் எனப் பெயர் பெற்றவன். அன்னவன், கோவி லுக்குக் கீழ்புறம், இரண்டு அம்புவீழ் தூரத்தில் ஓர் பர்ணசாலையமைத்து அதில் நீண்டநாள் வாழ்ந்து வந்தான். கார்காலம், தூற்றல் கதவு சாளரமெல்லாம் துளைக்கடித்தது, மழை சோவென்று பெய்தது காற்றும் கலந்து கடுகி வீசியது. திங்கள் சூடிய மங்கையங் கடவுளைப் பூசித்துவிட்டுத் தனது இல்லம் வந்தடைந்தவன், தியான யோகத்தி லமர்ந்துவிட்டான்; ஓர் நிலையில் நீண்ட நேரம் பகல் போய் இரவு பத்து நாழிகையுங் கடந்துவிட்டது. அவ்வமயம், பசியால் வெதும்பி, மழையால் நனைந்து, குளிரால் வருந்தி வந்தான் ஓர் பிராமணன் பாடிகன் என்பவன்—புரோகிதம் செய்பவன். அவன் அதிக சுந்தரன் அருந்தவச்சாலையை அடைந்து, விரைந்து எனக்கிடமளிக்க வேண்டும் என்று ஓலமிட்டான். அதுகேட்ட அதிக சுந்தர அர்ச்சகன், சமாதி கலைந்து சரேலென்று தலைவாசல் வந்து அன்னவனைக் கண்டான், பரிவு கொண்டான் பாதங்களில் வணங்கினன், தாள் கழுவினன், ஆச்சிரமத் தின் ஓர் மூலையில் அழைத்துப்போய் ஆசனத்தமரச் செய்தான். நல்வரவு கூறினன். தான் உண்பதற்காக இருந்த கீரையுணவு அளித்து உபசரித்தான் வெறுங் கீரையல்ல. அருங்கீரை—அன்பு கலந்த கீரை—இன்சொல்லோடு கூடிய கீரை—மனமுவந்து, முகமலர்ந்து உபசரித்து உண்மை பேசி இட்ட கீரையைப் பாடிகன்போல் வந்த பரமன்—உயிருக் குயிராகிய உரவோன் உண்டு களித்தான்; அனைத்துயிரும் களித்தன.

பாடிகன்போல் வந்த பரமாத்மா, அர்ச்சகனுக்கு சிவஞான போதத்தைத் திடீரென்று கொடுத்துவிட்டு மறைந்தார் என்றால் சன்மார்க்க நெறியில் மேம்பட்ட அர்ச்சகவேதியன் பக்குவ நிலையை யாரால் விரித்துரைக்க முடியும்!

பின்னர்; அப்பிராமணன், சிலகாலம் அங்கு வசித்து, மக்களும் பிற மன்னுயிரும் வருந்தியிரங்க இவ்வுலக வாழ்வை யொழித்துப் பரவுலகத்தில் பரம்பொருளோடு இரண்டறக் கலந்து இன்பப் பேறெய்தினன்.

## ஒன்பதாவது திருமணம் புரிந்த அத்தியாயம்.

வளம் பல பெருகி நலம்பல நல்கும் [1]சிரிம்பினி நாடு செய்தவப் பேறென்று பூதலம் போற்றும் புதுமை சிறந்தது மாமதில் சூழும் மங்கையம்பதி. அதன் கீழ்த்திசையில் ஆறு [2]கடிகைத் தூரத்தில் திருப்புல்லணையாம் திருப்பதி தோன்றும் அதில், திருமால் திருமாமகளுடன் தெய்வீகக் காட்சி கொடுப்பதைக்கண்டு களிப்பது கண்பெற்ற பேறேயாகும் திருமால் கோயிலின் அணித்தே கீழ்பால் சக்கரதீர்த்தம் காணப்படும். அதில் மூழ்கினால் முத்தியும் சித்திக்கும் தீண்டினால் செல்வம் பெருகும், சீரோங்கி வாழலாம், பார்த்தாலும் பலனுண்டு. அதிலிருந்து நான்கு காததூரங் கடந்து கிழக்கே சென்றால் இடையறாது ஒலிக்கும் இரு கடல்கள் வந்து இணைவதை எவரும் காணலாம் ஒன்று வடகடல், மற்றொன்று தென்கடல், இவ்விரண்டின் நடுவே நிலவுவதுதான் கந்தமாதன பர்வதமாம். அதில் மலைவளர் காதலியுடன் இராமலிங்கன், உலகெலாம் உவந்து வந்து சேவிக்க திருவீற்றிருக்கின்றான் திருக்கோயிலில். அதுவே இராமேசுவரம் எனப்படும் இமயப் பொருப்பையும் இந்து மகா சமுத்திரத்தையும் இரண்டற இணைத்துக்கொண்டிருப்பது அதற்கடுத்து உயரிய தீர்த்தமொன்றுள்ளது. அது ஒரு பெரிய நாட்டின், ஒரு கோடியோடு மற்றொரு கோடியை ஒன்றுபடச்செய்யும் தனுக்கோடியென்று தரணியெலாம் தலைமுழுகும் தனித் தீர்த்தம்.

பல கோணங்களிலிருந்தும் பார்க்கப்போனால் திருப்புல்லணை திருவிராமேசுரம், பூவேந்திர நாதராலயம்! திருச்சுழியல், திருவாலவாய், திருமருதூர், திருப்புனவாசல் இவைகள் நாற்றிசைப் பெருந்தெய்வ தலங்களாக விளங்க, நடுவே வீற்றிருப்பதன்றோ கங்கை சூடிய மங்கை நாயகன்பதி.

---

1 இப்பெயர்தான், செம்பிநாடு என்று மருவியதாகத் தெரிகிறது.
2. நாழிகை.

மேலும் இத்தலத்திலிருந்து தென்றிசையாக நோக்கினல் பத்து நாழிகைத் தொலேவில் ஓர் ஆச்சிரமம் காணப்படும். வேதவியாச ஆச்சிரமம் என்பது அதன் பெயர். அதன் நாற்பரப்பும் ஒன்றுக்கொன்று, ஒரு கூப்பிடு சதுர தூரத்தில் அமைந்தது. அதிலிருந்து மூன்று கூப்பிடு தூரம் வடக்கே வந்தால், மலர்கள் சொரிந்து, நாற்றிசையு மணங் கமழ்து, வருவாரை வரவேற்கும் பூஞ்சோலேகள் சூழ்ந்ததோர் பழம்பதி தென்படும் அஃதோர் பூர்வபதி. புரூரவனுல் நிருமித்தது. இம் மண்ணுலகத்தில் இராசமாணிக்க சதுர்வேதபுரம் என்று நல்லோரும், பொல்லோரும் எல்லோரும் புகழ்ந்துரைப்பர்.

அவ்வூரிலோர் அந்தணன், மூன்று வேளேயும் நீராடி முத்தீ வளர்த்து நாள்வினே புரிபவன் ஆசான் அடிபணிந்து ஆணேவழி நடப்பான். நாள்தோறும் வேதமோதுவான். இல்வாழ்பவன் இல்லறமல்லது நல்லறமல்ல என்பவன். வெகுநாள் மக்கட்பேறில்லே, மக்கட்பேறில்லாத இல்லத்தில் மகிழ்ச்சியேது வாழ்க்கை வெறிச்சென்றிருந்தது. உடற்கின்பம் மக்கள் மெய்தீண்டல் செவிக்கின்பம் மற்றவர் சொற் கேட்டல். அவர் சிறு கையளாய கூழ் அமிழ்தினும் ஆற்ற இனிது குடும்ப வாழ்க்கைக்கு குழந்தை கொம்பு—படர் கொடிக்குப் பந்தலேப்போல், கல்விக் கடலாகவும், வாலிபத்தின் பூங்காவாகவும், வயோதிகத்தின் ஊன்றுகோலாகவும் நல்ல பிள்ளேகள் — ஞானப்பிள்ளேகள் வேண்டுமென்று தம்பதிகள் இருவரும் அல்லும் பகலும் இலந்தை வனத்து ஆண்டவனே எண்ணி அடிசார்ந்தனர். துன்போடு தவம்புரியத் தொடங்கினர். அறிவாலறிந்து தன் இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களேவோனுகிய அறுமுகப் பெருமான் அனுமதி பெற்று, குமார தீர்த்தத்தில் நாளுமூழ்கி, ஐந்து அக்கினி மத்தியில் நின்று அருந்தவம் ஆற்றினர். மனிதன் வேண்டும்போதெல்லாம் தெய்வம் வரங்கொடுக்க வராவிட்டாலும், அது திருவுள்ளம் பற்றும்போது அருள் கிடைக்கத்தான் செய்கிறது. இறைவனருளால் மூவர் மைந்தரையும், ஓர் தவ மகளேயும் நாளடைவில் ஈன்றெடுத்தார்கள். இந்நால்வரும் பிள்ளேக் கலி தீர்க்கவந்த பெருமக்களாயினர். சிறுர் மூவருக்கும் மங்களநாயகன் பெயர் சூட்டினன் பொற்கொடிக்குப் பூண் முலேயாள் என்ற நாமம் புனேந்தான். மக்களில்லாத மனக் குறைநீங்கி, ஊரார் புகழ, உற்ருர் உறவின் முறையார் மதிக்க உவகையோடு வாழ்ந்தான் வேதியன்.

ஒரு மகளும் திருமகளாய் வளர்ந்தாள் திருமகளின் பேரழகு வாசுகியின் மனநலம், அருந்ததியின் கற்பெலாம் பூண்முலேயாளிடம் அடைக்கலம் புகுந்திருந்தன. பூங்கொடிபோல் நாளும் புதுமையாய்

வளர்ந்து மணப்பருவம் நெருங்சியது. மலரும் பருவத்தை நோக்கி வண்டுகள் வருவதுபோல், நாலு மறைஞானம் நிறைந்தவன்; ஆறங்கம் முற்றக் கற்றவன், தத்துவநூல் தருக்க நூல் தேர்ந்தவன். பேரழகும் பெருந்திறலும் பெற்ற பிராமண இளைஞன்—பிரமசாரி ஒருவன் வந்து மனைப் புகுந்தான். வந்த இளைஞனை மறையவன் வரவேற்று நல்வரவு கூறி உபசரித்து ஆசனந் தந்து அமரச் செய்தான். அகமகிழ்ந்தான், முகமலர்ந்தான், ஐயனே! குணம் பெரிய என் தவமகளை மணம்புரிய வேண்டுமென்று குரைவிரந்தான் சடைமறைத்தி கடிமலர்க் கொன்றை யின்றி. விடைநிறுத்தி, விடநாகக் கலம் அகற்றி வேதியர்போல் வந்த ஆதியர்—ஆதிபகவன், ஓம் என்று தலையசைத்தான் முத்தீயின் மத்தியில் வேதவிதியால் மணவினையும் மகிழ்வினையாய் நடந்தேறியது. தீக் கடவுள் தானே, தீ வளர்ப்பவனும் தானே அவிபெய்பவனும் அவனே, அதனை யேற்பவனும் அவனேயாகி எங்கும் நிறைகின்ற இறைவன் மண வினையாகிய மாயவினை முடித்தான் என்றால், மனம் வாக்குக் காயங்களுக் கப்பாலான அப் பெரியோனது அருள் விளையாடல்கள் யாவரால் உணர முடியும்! உரைக்க முடியும்!

கரும்பும் கசக்கும் மொழியும், கனியும் வெளிறும் வாயும், அன்னம் பழகும் நடையும் உடைய அம் மணமகளும் மணமகனும் பொன்னூஞ்ச லாடியருளினார்கள். ஆடும்போது மணமகன்போல் வந்த மங்கை நாயகன் மின்னல்போல் கடிதில் விசும்பிலே மறைந்தான். அக்கம் பக்கம் நின்றவர்கள் அதிசயித்தார்கள். மாமனாகிய மறையவனும் மருண்டான்; பதைபதைத்தான், மயங்கினான். ஆழிய கடலிடையே மாணிக்கத்தை யிழந்தான்போல் அயர்ந்துவிட்டான். அறிவாகி, அறிவுக்கறிவாகி, அப்பாலுமாகிய அய்யன். அம்மையோடு வெள்ளிய விடையின்மீது விண்ணிலே தோன்றி மறையவ வருந்தாதே! முன்னைப் பெருந்தவத்தால் ஞானப்பூங்கோதையை நம் இச்சையின்படி ஞானத் திருமணம் புரிந்தோம் நின் குடியுள்ளோர் குளத்துள்ளோர் அனைவிரும் திருநீறணியுங்கள்! கண்டிகை தாங்குங்கள்! ஐந்தெழுத் தோதுங்கள்! சைவ சமயமே சமயம் என்று எங்கும் சாற்றுங்கள்! நாம் இவளோடு இவ்விலிங்கத் துருவாய் இந்நகரில் இருப்போம். இதுமுதல் நப்பெயர் கலயாண சுந்தான் இவள் பெயர் கல்யாண சுந்தரி இந்நகர்ப் பெயர் கல்யாணபுரம் என்று இயம்பினான்.

நான்மறையோன் நவில்கின்றான். விண்ணிலே நிறைந்தருள்புரி வேதநாயகனே; தமியேன் விண்ணப்பமொன்று:- வேதியர் விவாக முறையில் நான்காம் நாள் நடத்தும் சடங்கொன்றுண்டு. சேட ஓமம்

என்பது. அதையும் தேவரீர் ஆற்றியருள வேண்டும். அது கேட்ட வேதநாயகனும் அதற்கிசைந்து, அந்தகர்க்குத் தென்றிசையில், இரண்டு நாழிகை தூரத்தொல்லையில் அக்கினி காரியம் புரிந்தபடியால் அவ்விடத் தைத் தீயனூர் என்றும், அங்கேயுள்ள இலிங்கப்பெருமானை அக்கினீச்சுரர் எனவும் அம்பாளை கயிலாய சுந்தரியாகவும் காசினியோர் கைதொழு வார்.

அடியார்க்கெளியனாகிய ஐயன். "உருவாய், அருவாய், உளதாய், இலதாய், மருவாய், மலராய், மணியாய். ஒளியாய், கருவாய், உயிராய், கதியாய், விதியாய்" வருவானாகிய பெருமான் இவ்வித விளையாடல் புரிந்து விண்ணும். மண்ணும் வியப்புற விண்ணிலே மறைந்தருளினான்.

## பத்தாவது பிருகு சாபந் தீர்த்த அத்தியாயம்.

சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவன்—அலைகடல் குடித்த அகத்தியன், அடியார்களும் முனிவர்களும் அருகே சூழ ஆச்சிரமத்தில் நடுநாயகமாக அமர்ந்திருக்கின்றான். துருவாசனிட்ட பெருசாபமுற்ற பிருகு, யானை வடிவோடு கண்ணீர் மலங்க வருதிக்குக் காத்து நிற் கின்றான். அவன் தந்தை வருணனும் அப்படியே. பிருகுவே! வருணா! பேதுறல் வேண்டாம் ஈசனுக்கிழைத்த குற்றம் தேசிகன் எண்ணினால் தீர்க்கலாம். தேசிகற்கிழைத்த குற்றம் தேசிகனே தீர்ப்பதன்றிப் பேசுவது யாது, கருவாசமற்ற துருவாசனிட்ட சாபந்தீர ஒரு வாசகம் உரைப்போம் கேளுங்கள்! பாண்டிய நாட்டில் பழம்பதிகள் பலவுள்ளன. அவற்றில் அம்பிகை கேட்டருள் ஆகமப் பொருளின் உண்மையை ஐயன் உத்தரவு செய்த உபதேசித்த ஆதித்தலமொன்றுண்டு உத்தரகோச மங்கையென்று உயர்ந்தோர் புகழ்ந்துரைப்பர். இந்திரன், பிரமன் முதலிய தேவர்களும், அரித்துவசன், நளன் முதலாம் அரசர்க்கரசர் களும், வியாசனேயுள்ளிட்ட வேத முனிவர்களும் கந்தர்வ கன்னியர்களும் நல்வினைகளாற்றி சாபமும் பாவமுமாகிய வல்வினைகள் தீர்ந்த மாதல மாகும் அது. அங்கே பொன்னார் மேனியன்—புண்ணியன்—சுயம்பு மூர்த்தி வீற்றிருக்கின்றான். மேலும் அங்கு மணிமன்று ஒன்று உள்ளது. சிதம்பரப் பொன்மன்றைப் பார்க்கிலும், மதுரை வெள்ளியஞ்சபையை பார்க்கிலும் காலத்தால் கோலத்தால் கடந்து ஒளிர்வது—ஆதிரத்தின சபை. அதில் அருளானந்த நடனம் புரிகின்றான் ஆதிரெத்தின சபாபதி

வருணனே; நின்மகன் பிருகுவை, அங்கே அழைத்தேகு, அதில் உள்ள அக்கினி தீர்த்தத்தில் நியதிப்படி நீராட்டு! மகன் பெற்ற யானை

யின் உருவம் நிச்சயம் அகலும். பின்னர், காலனைக் காலால் உதைப் பித்த கடவுள் முனிவன் மார்க்கண்டன் சந்நிதியில் சென்று வந்தித்து, ஐந்தெழுத்து மந்திரத்தைச் சிந்தித்து ஓதச்செய்! அதன் பின்னர், கல் லாலில் அமர்ந்து, நால்வருக்கும் அறநெறியைச் சொல்லாமல் சொன்ன மூர்த்தியாகிய தெட்சணாமூர்த்தியைச் சேவித்து அவன் திருவுருவைச் சிந்தையில் பாவித்துத் திரிகரண சுத்தியுடன் பஞ்சாக்கரத்தை ஆறு லட்சம் உருச்செபித்தால் அக்கணமே அச்சாபம் அடியோடொழியும். அப்பால் ஆருயிர் நாயகன்—வரதன் காட்சி தந்தருள் புரிவான் அவன் ஒரு கட்டளையிடுவான். அதன்படி அங்கே இன்னறுங் கனிச் சோலைக ளோடு இனிய நீர்த்தடாகம் ஒன்று உண்டாக்குவாய்! இதில் நீ ஐயப் படாதே! செல்வாயாக/ என்று மந்தமாருதம் வந்துலாவும் மலயமாமலை மாதவன் ஓதினான்.

அவ்விதமே தந்தையும், தனயனும் அத்தலம் சென்றார்கள். என் னிடம் மூழ்குகின்றவர்களின் வெவ்வினையை எடுத்தெறிவேன் என்று ஒலிப்பதுபோல், அலைகள் எறிகின்ற அக்கினி வாவியில், வினையாவும் போக்கும் எனையாளும் எந்தையே என்று பிரார்த்தித்து மகனை மூழ்கு வித்தான். மூழ்கி எழுந்ததும் பழைய வடிவோடு புதிய அழகு திகழ நின்றான். கற்கண்ட காகம்போல் கரியுருவம் நீங்கியது கண்டான். ஆனந்தப் பெருக்கால் ஆடினான், பாடினான், அழுதான் தொழுதான், விம்மினான் மெய்மறந்து நின்றான். ஈதன்றோ அகத்தே தோன்றும் அன் பால் புறத்தே தோன்றும் புறநிகழ்ச்சிகள்! அப்பால் மார்க்கண்டன் திருமுன்போய்ப் பஞ்சாக்கர உபதேசம் பெற்றான் கல்லாலின் புடை அமர்ந்த கருணையங் கடலாய் தெட்சணாமூர்த்தியின் சேவடி தொழுது அமர்ந்து அகத்தியன் அருளியபடியே ஆறு லட்சம் உருச்செபித்தான். அவ்வளவில், திங்களும் கங்கையும் சூடிய செஞ்சடையும், நீலகண்டமும் புலித்தோலாடையும் உடைய கோலத்தோடு பார்வதி சமேதனாய் முக்கட் பரமன் முன்னின்று காட்சி வழங்கினான். "பேரன்புடைய பிருகுவே! நீ இன்று முதல் சிவன் முத்தனாயினை" என்று தெரிவித்தான் தேவாமுதம் போன்ற இம்மொழி செவிப்படவும் சிந்தை நெகிழ்ந்துருக மெய்மயிர் பொடிப்ப கண்கள் நீர்வார்ந் தொழுக கரங்கள் சிரமேற் குவிய இறைவனுடைய எல்லையற்ற குணங்களைக்கூறி எல்லார்க்கு முன்னவனே நீ முன்னின்றால் முடியாத செயல் உளதோ என்று அவனது பேரருளையும் புகழ்ந்து பாடிப் பரவசமெய்தினான்.

பின்னர் [1]வாருணி கேட்ட வரங்கள் யாவையும், தேரணி

---

1. வாருணி=வருணன் மகன்.

கொண்டுசென்று திரிபுரம் எரிந்த தேவன் திருவாய் மலர்ந்தருளிவிட்டு திருவுருக் கரந்தான் வரம்பல பெற்ற மகனை, வருணன், மகன் வாஞ்சை யால் மார்புறத் தழுவி, மைந்தனே; அல்லல் எல்லாம் அகன்றனை அருளெல்லாம் பெற்றனை. நிரந்தரமாய் நித்தியனாய் நீடூழி வாழ்வாய்; பிறப்பில் பெறவேண்டிய பெரும்பயனைப்பெற்ற பேர்களிலே உனக்கு நிகர் யாருளரோ! துறந்த முனிவர் தொழும் தூயதோன்றலே! நீ அறம் தழையும் இத்தலத்தே அமர்க! என்றனன்.

சித்தர்கள் வாழ்கின்ற செல்வப்பதியாகிய அத்தலத்திலே, வருணி தீர்த்தம் என்ற அற்புதவாவி யொன்றமைத்து அதன் மேல் கரையிலே, ஓர் சிவக்குறி நிறுவி, வில்வ இலைகொண்டு நியமந்தவறாது அந்தியும் சந்தியும் அன்பால் அர்ச்சித்து மூன்று மாதங்கள் தங்கினான் பிருகு முனிவன். இதனையுணர்ந்த மார்க்கண்ட முனிவன், அன்பால் இன்பால் அவன்பால் அடைந்தான். அவனை ஆர்வத்தால் வரவேற்று அடிபணிந்த பிருகுவை நோக்கி, முனிவ! யாவனொருவன் புகலுவன் வில்வ இலைகொண்டு வேதப்பொருளாய் விளங்கும் பெரியோன் பாதத் துணைகளில் பரிந்து அருச்சித்தால், அப்பலன் வேறு எத்தலத்திலும் இத்தலத்தில் ஒன்று பலவாகப் பெருகும்.

இப்புண்ணியப் புனலாடி திருநீறணிந்து மூலமந்திரத்தை ஓதிய படியே வில்வத் [2] தருவை மும்முறை, ஐமுறை, ஏழுமுறை, ஒன்பதுமுறை அல்லது பதினொரு முறை இவைகளில் ஏதேனும் ஒரு முறையில் வலமாக வந்து, அடிபணிந்து அதன் மீதேறியிருந்து தழை கொய்யவேண்டும். அத்தழையால் ஆதிபகவனை எல்லாக் காலமும் அர்ச்சிக்கலாம் என்ற தோர் பொதுநியதி கையாளப்பட்டு வந்தாலும், பௌர்ணமி, திங்கட் கிழமைகள், மாதப் பிறப்பு, சிவராத்திரி, பிறந்தநாள் ஆகிய இந்நாட் களில் அர்ச்சித்தல் உத்தமமாகும். பெற்றோர்களாகிய தென்புலத்தார் திவச நாட்களில் தெய்வம் பேணி விரதங்காத்து விதிப்படி வில்வார்ச்சனை புரிந்து வழிபாடு மேற்கொண்டால் அதன் பயனாக அவர்கள் நிரயத்தி லிருப்பினும் விடுதலைபெற்றுச் சிவலோகம் சேர்ந்து இன்புறுவர். வில்வத் தருவின் அடியிலிருந்து தென்புலத்தார்கட்கு நீர்க்கடனாற்றிப் பிண்டம் வழங்கினால் பரமனுலகில் பல்லாண்டு வாழப்பெறுவர், எனவே அலைகடல் சூழ் அவனியிடையே அமரற்கமரன் அமரும் பதிகளிலே தலைமை பெற்றது இப்பதியாகும் என்று தலமகிமை கூறினான் மாதவச் சிவஞான மார்க்கண்டன். அவ்விதமே வருணனும் மகனும் வழிபாடு

---

2. தரு=மரம்.

மேற்கொண்டார்கள். சுவாமி சந்நிதியின் தூண்டா மணிவிளக்கு வேண்டுமே என்று விரும்பினார்கள் மாணிக்கக் கற்கள் பலவற்றைச் சிவலோகநாதன் திரு முன்பு எண்ணெயின்றித் திரியின்றி இராப்பகலாக நின்றெரியும் தீபமாக வைத்துவிட்டு சிவானுக்கிரகம் பெற்றுத் தங்கள் தெய்வ உலகு சேர்ந்தனர்.

## பதினோராவது வலை வீசிய அத்தியாயம்.

மேலும் ஓர் மகிமை கேளுங்கள் என்று சூதமாமுனிவன் சொல் கின்றான்.

அண்டங்களெல்லாம் அவற்றின் சராசரங்களெல்லாம் ஈன்றும் இன்னமும் கன்னியென மறைபேசும் அன்னை [3](மங்கை) வேதாகமங் களின் உண்மை [2] கோச)ப் பொருள் யாதென வேண்டினாள். எவ்வுயிர்க் கும் இறைவனாகிய மங்கைநாயகன் அருள்கூர்ந்து உபதேச [1] (உத்திர)ம் செய்தான் அப்போது திருமால் மருகன்—முருகன், தேவியின் கூந்தலில் ஓர் தேன் வண்டாயமர்ந்து அதனை ஒற்றுக்கேட்டான். அவ்வுண்மையை யுணர்ந்த ஐயன். நீ இவ்விதம் இருண்ட கூந்தலில் ஒளிந்திருந்து ஒற்றுக் கேட்ட பிழையால் இதோ இருண்ட இந்நெடிய கடலிடையே மறைந்து வாழும் மகர மீனாகக்கடவாயாக! என்று சபித்தான்.

இறைவியை நோக்கி நீ என் உபதேச தர்மத்தை இகழ்ந்து குமரன் செய் குற்றத்திற்கு உடந்தையாயிருந்தபடியால் நீயும் ஆழிய கடலி னிடையே நீர்மகளாக என்று சாபமிட்டான். அது கேட்ட அம்பிகை அஞ்சினாள், வெம்பினாள், அல்லலுற்றாள். ஐயனே! புவனநாயக! கருணை வெள்ளமே! ஆதரவற்றவர்களுக்கு அபயமளிப்பவனே! என் பிழையைப் பொறுத்தருள வேண்டுகிறேன். இக்கொடுஞ்சாபம் நீங்கும் வழியாது? கூறியருள வேண்டுமென்று குறையிரந்தாள். நறுமணங் கமழும் கோதையே! நீ கடல் சார்ந்ததும் பரதவர் தலைவன் ஏவலால் வினையில் வல்ல வலைஞர்கள் வலை வீசுவார்கள். அதில்படும் நீ, அந் நெய்தல் நிலத் தலைவன் அதிசய மகவாக வளர்க்க வளர்வாய். அப்போது நாம் வந்து மணம் புரிவோம். குமரனையும் ஆட்கொள்வோம். மனம் மறுகவேண்டாம் என்றருள் புரிந்தான்.

சாபத்தின்படியே. உலகீன்ற தாய் நீர்மகளாய் மச்சகந்திபோல் கடலிடைக் கலந்தாள். குமரன், கூரிய கோடுடைய சுறுவாகக் குலவி

---

1. உத்தர 2. கோச 3 மங்கை.

ஞன். விக்கிரமபுரத்து விக்கிரமன் என்னும் நெய்தல் வேந்தன் ஓர் நாள், அலைவாயருசில் பரதவர் குழாம் சூழ உலாவினன். வலைஞர்கள் வலையில் மீன் குழாத்தோடு சேர்ந்து வந்த மயில்போலும் சாயலையுடைய ஓர் விந்தை மகளை எடுத்து வந்து தங்கள் வேந்தனிடம் ஈந்தனர். அந்த அதிசயப் புதல்வியை வாங்கிய வேறு மக்கட்பேறில்லா அரசன் வியப்புங் கொண்டான். பூங்கொடி போன்ற இச் சிறிளம் பாவை தேவமகளோ? நீரரமகளோ? யாவர் மகளோ? யான் செய்தவமே! யான் பெற்றபேறே! என்று களித்தான். கனிந்தான். இரு கரங்களாலும் ஏந்தியபடியே பளிங்குமாடம் புகுந்தான் பிள்ளைவரம் வேண்டிப் பெருந்தவம் புரிந்து வருகின்ற அவளும் வாங்கிப் புளகித்தாள். பூரித்தாள். ஆ! இப் பூமகள் யார் மகள்? தெய்வம் தந்த என் மகளே என்று [4]இறும்பூதெய்தி னள். குழந்தையை இருவரும் வளர்த்தனர். ஆணிப் பொன் கொம்பில் படர்கின்ற [5]மாணிக்க வல்லியாய் வளர்ந்தது. அதன் பருவ வளர்ச்சி யையும் கண்ட [6]அரச தம்பதிகள், இத் திருமகளுக்கேற்ற திருமகன் இந்நிலவுலகத்து இருப்பானோ! இவளை மணப்பதற்குரியவன் யாவனோ? கன்னியர்க் கமைந்த கட்டழகன் இல்லையானால் பின்னர் இன்னல் உறுகிறவர் பெற்றோரல்லவா? என்று சிந்தை நொந்திருந்தனர்.

மகர மீன் வடிவெடுத்த குமரவேற் பெருமானும் மச்சராசனாய் மீன் குலங்களையெல்லாம் கதிகலங்கச் செய்துகொண்டிருந்தது. கடல் வழியே செல்லும் படகுகளையும், தோணியையும், மரக் கலங்களையும் அலைத்து அல்லற்படுத்தியது. கப்பல் வணிகரும், மீனவர்களும் கலக்க முற்றனர். வர்த்தகர்களின் போக்குவரத்து மறிபட்டது. துறைமுக மன்னனிடம் முறையீடு செய்தனர். மன்னன் மனத்திலோர் எண்ணம் எழுந்தது. ''இக் கொம்பன் சுறுவினை அப்பெய்தி மாயப்பவர் என் பெருந்திரு மகளைப் பெறுதற்குரியவர்'' என்று சபதங்கூறிச் சாற்றினான் முரசம். பேரிகை யோசை பாரெலாம் படர்ந்தது.

அம்பிகையையும் அறுமுகப் பெருமானையும் சாபத்தினின்றும் தடுத்தாட்கொள்ளும் காலம் சந்தித்தது—தயவு வைத்தான் தயாபரன்

பார்க்க ஒரு இறைவனடியாரராகக் காணப்படுகிறார். தலை முதல் கால்வரை தவக்கோலம். வலைகளும் தொங்குகின்றன. இந்த புதிய மனிதன், புதுமைப் பித்தன் அரண்மனை புகுந்தான் அரசனை அணுகி னன். கடற்கரைக் காவல! நாம் இருப்பது வடதேசம். முரசொலி

---

4 வியப்பு. 5. மாணிக்கக்கொடி. 6. அரசன்—வருணமதி அரசி—அருணவல்லி.

கேட்டு விரசில் வந்தோம். இன்று நாம் அச் சுருமீனின் வல்லமையை அறியப் போகின்றோம். அது நம்மால் அழியப் போகின்றது. அப்பால் நும் மங்கையை சவதப்படி நமக்களிப்பீரல்லவா என்றான். அதில் ஐயம் ஏன் என்றான் அரசன். 'எல்லோர்க்கும் முன்னவனே முன்நின்றால் முடியாத செயலுளதோ?'' அலை சுருட்டும் ஆழிய கடலிடையே வலை வீசப்பட்டது மகரமீன் பிடிபட்டது. அவ்வதிசயச் செய்தி காற்றெனப் பரவியது. அரசனும் பரிவாரத்தோடு வந்தான். அலைவாய்க் கரை மக்களனைவரும் ஏழுமினர்—மீனவர்களும், வணிகர்களுங் கூட மன்னன் முதல் வணிகர் வரை களிப்பு கழிநடமாடியது. மக்கள் தோள் தட்டி, மார்தட்டி ஆர்ப்பரித்தனர்.

மன்னரே! வஞ்சிக் கொடி போன்ற நும் மங்கையை நமக்கு வதுவை செய்து வாக்கினைப் பாதுகாக்கலாமே என்றான். அடியார்போல் வந்த ஐயன். அரசன் அதற்குட்பட்டு ஆவன செய்ய முற்பட்டான். அது கண்ட அன்னையும், கன்னியும், அரசன் உறுதியறிந்து, இல்லங்கள் தோறும் இரந்துண்டு வாழும் இவ்விரவலனுக்கோ மணம் புரிவது என்று ஏங்கி யிரங்கி வருந்தி அவ்விருவரும் யாவரும் அறியாது, விடமுண்டு இறந்தனர். அது கண்ட அரசன் அளவற்ற துயரமெய்தி அடியாரை நோக்கி அருந்தவரே! உங்களுக்குரியவள் உயிர் துறந்தாளே, நான் என் செய்வேன் என்று அழுது புலம்பி அங்கலாய்த்தான். மனம் மறுக வேண்டாம் மன்னரே! உன் மகள் உயிர் துறந்தாளாயினும் பழுதில்லை, ஊழ்வினைப்படி அவ்வுடலும் நமக்குரியதே என்றார் அடியார். மன்னவன் விதியுந்த மதிமுந்த கன்னியின் கரத்தைத் தொட்டுத் தவசியின் கையில் வைத்துத் தாரைவார்த்தான். உயிர்களாய், உயிருக்குயிராய் எங்கும் நிறைந்திலகும் இறைவன் கரந்தீண்டியதும் துயில் உணர்ந்து எழுந்தது போல் எழுந்தாள். அது கண்டதும் கடற்கரைத் [7] தலைவன் விக்கிரமன் வியப்பால் விம்மிதமுற்று உரோமம் சிலிர்ப்ப, உள்ளம் குளிர்ப்பக், கைகள் உச்சிமேற் குவிய கண்கள் மணற்கேணிபோல் சுரந்து நீர் பாய, பேரானந்த வெள்ளத்தில் மூழ்கினன். ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியே இந்த அடியவர் உருவாகி நம்மை யாட்கொள்ள வந்தான் என்றெண்ணி அடியற்ற மரம்போல் அடிகளில் விழ்ந்து பணிந் தான் சடைமறைத்து ஆத்தி கொன்றையின்றி, மான் மழுக் கரந்து வந்த மூவா முதல்வ! அவமே மாயையில் மூழ்கி ஆழ்வினைப்பட்டு அழுந்தும் அறிவிலியாகிய நான், தேவரீர் பெருமையை யுணராது

---

7. விக்கிரம நகரிலிருந்து ஆட்சி செய்ததால் விக்ரமன் என்று பெயர் பெற்றிருக்கலாம்.

போயினேன். எளியனேன் இல்லாளும் உயிர்பெற்று எழுமாறு இன்னருள் புரியவேண்டும் என்று பிரார்த்தித்தான். அன்பர்களை அஞ்சேல் என்றருள் புரியும் அருட்கடலாகிய ஆத்மநாயகன், அவ்வளவில் வில் போன்ற புருவத்தைச் சிறிதே வளைத்து நோக்கினன். அக்கணமே அரசியும் பொருக்கென எழுந்து பொன்னார் திருவடிகளை வணங்கி நின்றாள்.

யான் பெறுது பெற்ற தவமகளைத் திருமணம் புரிந்தருள வேண்டு மென்று வேண்டினன் மீனவர் தலைவன். இப்பதிக்கு (விக்கிரம நகர்) வடதிசையில் மூன்று கூப்பிடு தூரத்தில் அதை நாம் முடிப்போம் என்று பரவர் தலைவனோடு சென்று, அவ்விடத்தில் மணக்கோலத்தோடு வீற் றிருந்து பரதர் குழாம் புடைசூழ மங்கை நல்லாளை மணம் புரிந்தான். அக்காரணத்தால் அவ்விடம் அன்று முதல் கலியாண மங்கலம் என்ற பெயருடன் விளங்குவதாயிற்று. அன்றியும், மக்கள் பலர் பெருந் திரளாகக் கூடித் தங்கியபடியால் அவ்விடம் யூதிகாக் கிராமம் என்றும் அழைக்கப்படுகின்றது. அன்னை உமையம்மை, கடல் மகளாகச் சேர்ந் திருந்த காரணத்தால் திரைசேர் மடந்தை என்ற திருநாமம் பெற்றாள்.

நெய்தல் நில மன்னனே! நின் சுற்றத்தோடு இம்மைப் பயனையும் நீ இனிதே பெறுவாயாக என்று வரமருளி ஐந்தெழுத்து மந்திரத்தையும் உபதேசித்துவிட்டுத் தேவியுடன் திருவுருக்கரந்தான் மங்களநாதன். அக்கணமே அவ்விடத்தில் பேரொளியைப் பரப்பிக்கொண்டு ஓர் சிவலிங்கம் திவ்விய வடிவோடு ஓங்கி உயர்ந்தெழுந்தது அதன் பெயர் கலியாண நாயகன் என்றும், அதன் பக்கத்தில் எழுந்தருளிய அம்பிகை யின் நாமம் கல்யாண சுந்தரி எனவும் அழைக்கலாயினர். வானுயர்ந்த மாளிகை சூழ்ந்த விக்கிரம நகருக்கு வெகுதூரம் வடதிசையில் சுருவோடை என்று ஓர் ஓடை என்றும் காணப்படுகின்றது அது இந் நிகழ்ச்சியை மெய்ப்பிக்கும் சின்னமாக விளங்குகின்றது.

பொய்த்துறை கடிந்து மெய்த்துறை பற்றிய ஞானசீலர்களே! இதுவரை உத்தரகோசமங்கைப் பெருமானின் வித்தக விளையாடல்களை விரித்துரைத்தேன். இனி அப்பதியில் வாழும் வேதியர்களின் மேன்மையைச் சுருங்கக் கூறுகின்றேன்.

அவர்கள் கொலை புலை யிரண்டுங் கடிந்தவர்கள் உயிர்களின்மீது பேரிரக்கம் கொண்டவர்கள். புல் பூடு வாடியிருப்பதைக் கண்டாலும் மனம் பொறாதவர்கள் அம்மறையவர்கள். அப்பேர்பெற்ற பெருங்

குணம் படைத்திருந்தபடியால் கைகூப்பி எல்லா உயிரும் தொழும் பெருமையுடையவர்கள்.

ஒழுக்கம் உயிருக்கும் உயர்வைத் தருகிறது உயிர் வாழ்க்கைக்கு ஒழுக்கம் போன்றது வெறொன்றுமில்லை. ஒழுக்கமில்லாமல் வாழ்வது உயிரில்லாமல் வாழ்வது போலாகும். ஆகையால் உயிரினும் உயர்ந்தது ஒழுக்கம் என்று சிறந்தவர்கள். புனிதத்தால் ஒப்பற்றவர்கள். மூன்று வேளை நீராடி ஆறுவேளை அம்மையப்பனை ஆராதிப்பவர்கள்.

வேதம் வேதாகமங்களை முற்றக் கற்றறிந்தவர்கள். சமயதீட்சை முதல் நால்வகைத் தீட்சையையும் பெற்றவர்கள். சைவ சமய ஞான நூல்கள் [8]இருபத்தெட்டையும் பழுதற ஓதியுணர்ந்தவர்கள். ஆகமம் உபாகமம் அறிந்தவர்கள். அதன்படி நடப்பதிலும் உறுதியானவர்கள்.

தேவர்களிலே ஒரு வகுப்பாராகிய விசுவதேவ கிரியைகளை விரும்பிச் செய்பவர். ருத்திராக்கத்தால் செய்த குண்டல முதலிய ஆபரணங்களை யணிந்தவர்கள். வெண்ணீறு அகலாது அணிந்திருப்பவர். கையில் மலரும், மெய்யில் தூய ஆடையும், மார்பில் பூணூலும் உடையவர் வேறுபடாத உள்ளமுடையவர்கள். எவற்றிலுந் தெளிவு பெற்றவர்கள்.

அவர்களைக் கண்டாலும், அகத்திருளாகிய அஞ்ஞானமானது சூரியனைக்கண்ட பனிபோலகலும் தான தருமங்களை யேற்பதற்கு அவர்கள் சற்பாத்திரராவர். அவர்கள் கையில் கொடுக்கும் தாழ்ந்த மாந்தர் கைப்பொருளும் அதன் களங்கம் ஒழிந்து தூய பொருளாகத் துலங்கும். அவர்களிடம் அணுவளவு பொருளை அளித்தாலும் அது நூறு மடங்கு பலனைத் தரும்.

முனிவர்களே! அத்தகைய அறவோர் வாழ்பதியாம் உத்தரகோச மங்கையில் வீற்றிருக்கும் வித்தகன் விளையாடல்களை நம் குருநாதர் நமக்கு அருளியபடி நுமக்கு எடுத்துரைத்தோம். இப்புனித வரலாற் றைப் பிறருக்கு எடுத்துரைப்பவரும் அவர்கள்பால் அன்புருகக் கேட்ப வரும் முன்பும் பின்பும் செய்த தீவினையாவும் தீரப்பெறுவர். கல்வியும் செல்வமும் வளரப் பெறுவர். அருளும் ஆயுளும் ஓங்கப் பெறுவர். மங்கல நன்மணம் பெறுவர். அறிவுடைய புதல்வர்களைப் பெறுவர். இன்பமே எந்நாளும் துன்பமில்லை. பகையை வெல்வர். சுற்றம் பெருகிச் சூழ வாழ்வர். அப்பால், அப்பாலுக் கப்பாலான அமரவாழ்வு பெற்று இன்பந்துய்ப்பார்கள்.

முற்றிற்று.

ஓம்.

# புராண காலத்துக்குப் பின்
# இத்தலத்தில் அண்மையில் நிகழ்ந்த
# உண்மைச் செய்திகள்.



எழுதியது :-
பசும்பொன் வித்வான்,
**கு. ஆறுமுகம் பிள்ளை,**
ஓய்வுநிலைத் தமிழாசிரியர்,
அரசர் உயர்நிலைப்பள்ளி,
இராமநாதபுரம்.





## பொருளடக்கம்:







ஓம்.
திருச்சிற்றம்பலம்.

## பித்துநிலை தீர்த்த பேரருள்.

"பத்தரெல்லாம் பார்மேல் சிவபுரம் போல் கொண்டாடும் உத்தரகோசமங்கை ஊரில்" வாழ்பவர்.

தமிழக அரசுப் பொதுப்பணித்துறை ஒப்பந்த அலுவல் புரிபவர். இவ்வூரில் வாழையடி வாழையாக வாழ்ந்து வருகிற நற்குடிவேளாளர்களில் ஒருவர். தந்தையார் பெயர் சுப்பையா பிள்ளை. இவர் பெயர் கோபால் பிள்ளை. வயது 39 இருக்கும். மங்களநாதனை மறந்தனர் போலும்! இன்னவருக்கு 1962-ம் ஆண்டு திடீரென்று இவர் தம் உடலில் ஒரு பெரும் அச்சம் தரும் மாற்றம் ஏற்பட்டது. உள்ளம் உணர்வை இழந்தது. சோர்ந்து போய்விட்டது தலை சுழலத் தொடங்கிவிட்டது. உடல் நடுக்கமுற்றது. மிகுதியாகப் பேச முடியவில்லை. மெய், வாய், கண், செவி முதலிய பொறிகள் கலக்கமுற்றுவிட்டன.

வானொலி கேட்டாலும் நடுக்கம் ஏற்படுவதும் மின்சார ஒளிகளைக் காணினும் இதயம் பதைபதைப்புற்று படபடவென்றாடுவதும், "அச்சத்தால் விழுங்கப்பட்டு" என் உயிர் போய்விடும் போலிருக்கிறதே! யான் என் செய்வேன்! என்று அலறுவதுமாயிருந்தார்.

இத்தகைய நிலையில் இராமநாதபுரத்தில் சிறந்த ஆங்கில மருத்துவ அறிஞர்களை நாடிச்சென்றார். அவர்கள் கருவிகள் வழியாக ஆழ்ந்து சூழ்ந்து ஆராய்ந்து பார்த்தார்கள் ஏதேதோ மருந்துகள் கொடுத்தார்கள் பலனில்லை. அவர்கட்கு இன்னதென்று புலப்படவில்லை. ஏதென்று சொல்லலவும் முடியவில்லை ஆனால் நோயாயில்லை. இதன் தீர்வுகாண எங்களிடம் மருந்தில்லை மறு வழியுமில்லை என்று கைவிட்டு விட்டார்கள். அப்பால் மதுரைக்குச் சென்றார். அங்கும் மேல்நாடு, கீழ்நாடு சென்றுவந்த மருத்துவப் பெரியார்களைத்

தேடிப் பல இடங்களுக்குச் சென்ருர். பலரைக் கண்டார். அவர்கள் எல்லோரும் இவர்படும்நிலேக்கு இரங்கி ஆழ்ந்து ஆராய்ந்தார்கள். (பல வழியில் சிகிச்சை செய்தும் பலனில்லே) அவர்களுக்கும் இது புதிராக இருந்தது ஒன்றுமே புலப்பட வில்லே. இன்னநோய் என்று சிறிதும் தோன்றவில்லே. எனவே பின்னர் மருத்துவமும் ஒன்றும் நடைபெறவில்லே. நோய் தீரும் வழியும் புலப்படவில்லே. பல ஆயிரக்கணக்கான ரூபாய் செலவானதைத் தவிர பயன் எதுவும் இல்லே.

அடா ஊழ்வினேயே! என்று மீண்டும் உத்தரகோச மங்கை வந்து சேர்ந்தார் அப்பதியில் உள்ள சில ஆத்தீக அறிஞர்கள் (கடவுள் மெய்யன்பர்கள்) இவரைக்காண வந்தார்கள் அவர்கட்குத் தருமமாய்ப் போக என்ன தோன்றியதோ தெரியவில்லே. பிள்ளேயை நோக்கினுர்கள். அன்பரே! ஒன்று சொல்கிருேம். "நம்பினுேர் கெடுவதில்லே நாலு மறைத் தீர்ப்பு".

ஐயா! யாவராலும் அறியமுடியாதிருக்கிற இக்கொடிய நோய், எவர்களாலும் அறிய இயலாதவனுயிருக்கிற பரம் பொருளால் தீர்ந்தாலன்றி வேறு வழியில்லே இந்தத் தலத்தில் கோயில்கொண்டிருக்கிற அருளாளனுகிய மங்களநாதனே மறந்தீர்கள். இவன் மாபெரும் வைத்தீசுவரனுவான். இது போன்ற தீராத வல்வினேகளேயெல்லாம் எத்தனேயோ பேருக்குத் தீர்த்திருக்கிறுனென்று மூதாதையர் வழி மொழிந்து வருகிருர்கள். இக்கோயிலில்உள்ள தட்சிணுமூர்த்தியை நேர்த்திகடன் செய்துகொண்டு அபிடேக ஆராதனேகள் செய்துவந்தால் உறுதியாக இந்நோய் உங்கட்கு குணமாகும் ஐயா" என்று மொழிந்தார்கள்.

தாங்கள் கூறியது என்னுள்ளத்தில் ஒரு பெரும் திருப்பத்தை ஏற்படுத்தி இருக்கிறது. அதை முழுவதையும் ஏற்றுக் கொண்டேன். இன்றே அவ்விரதத்தைக் கடைப்பிடிக்கிறேன் இப்பொழுதே மங்களநாதனுடைய சந்நிதியில் அடைக்கல

மாகின்றேன் என்று சொன்னார். அவ்வண்ணமே உடும்புப் பிடியால் தட்சணுமூர்த்திக்கு அபிடேக ஆராதனை செய்வதும் அவருக்கிட்ட ஆராதனை அமுதுகளை அருந்துவதும் ஆங்குள்ள அரசகோபுர வாயிலின் நீங்காது சரணாகதியாகக்கிடப்பதும் ஆகிய இந்நல்வினைகளையே விடாது செய்து வந்தார். இவ்வினையில் நுழைந்த தொடக்கத்திலேயே இந்நோய் உறுதியாகத் தீரும் என்பதற்குரிய விடிவெள்ளி தோன்றியது. நம்பிக்கை அரும்பியது உணர்ச்சி பொங்கியது. ஊக்கம் உந்தியது விடாது சலிப்பின்றி, சோர்வின்றி பக்திப்பரவசராய் இறைவனது அருளை ஒருமையுடன் பற்றி நின்றார். ஓராண்டு முடிந்தது. துன்ப இருள் விடிந்தது. பகலவன் உதயம்போல் சுகமே வீடு போய்ச் சேர்ந்தார். இல்லத்தில் மகிழ்ச்சி மறுமலர்ச்சி பெற்றது. இன்று இனிதே வாழ்கின்றார்.

வாழ்க மங்களநாதன் திருவருள்!

---

## வயிற்றுவலி தீர்த்த மாபெரும் மகிமை.

“அழுத பிள்ளைக்கே பால் உணவு அளிப்பாள் அன்னை” என்பார்கள். இப்படியும் ஒரு மகிமை, உத்தரகோசமங்கைத் தலத்திலே மங்களநாதனுடைய சந்நிதியிலே, இக்கலியுகத்திலே அதுவும் அண்மையிலே நிகழ்ந்த செயலொன்றை இங்கே எடுத்துப் பேசுவோம்.

மனிதன் வினையின் விளைவால் இவ்வுலகில் தோன்றியவன். மீண்டும் பிறக்கின்றான். பிரபஞ்சமாயையாகிய கருநாகந் தீண்டியதும் அழுகின்றான். அழுதுகொண்டே பிறக்கின்றான். இவ்வுலகை விட்டுப்போகும் போது அழுதுகொண்டே போகின்றான். இது எதைக் குறிக்கிறது? அந்தோ! ஒரே இன்ப துன்பம் நிறைந்த இக்சுன்ம உலகில் ஏன் பிறந்தேன்? என்ன பயன் பெற்றேன; இனியாது பயன்பெறப் போகிறேன்? இதைத்தானே குறிக்கிறது! பிறந்த மண்மீதில் பிணியும் துன்பமும் துயரமும் உற்று பேரின்பத்தை மறந்து சிற்றின்

பந்தின்மேல் மையலாகி நரை திரை நோய் மூப்புற்று அனியா யமாய் அவமே மடிகின்றேம். இந்தக்கொடுந் துன்பத்தினின் றும் தப்புவதற்கு ஒரு மாற்று வழியில்லையா? ஆற்றவும் மருந்துதான் இல்லையோ? என்பவருக்கு, ஏன் இல்லை? இருக் கிறது என்கிறார் மகான் சோதி இராமலிங்க சுவாமிகள் "வம்மின் உலகியலீர்! மரணமில்லாப் பெருவாழ்வு வாழ்ந்திட லாங் கண்டீர்" என்கிறார்.

நோயும் பாயுமாய்க் கிடந்து புரளும்போதுகூட மனைவி யுங் மக்களும், தமையனும், தம்பியும் கைவிட்ட நிலையிலுங் கூட மேலான தாயும் தந்தையுமாகிய அம்மையப்பனை நினைக் கின்றேமில்லை. "அழுதால் உன்னைப் பெறலாமே" என்கிறார். சுவாமி மாணிக்கவாசகர் இதுபோல் அவனருளை நினைந்து அழுதழுது, ஒரு கொடுநோயின் முதலைப் பிடியிலிருந்து தப்பிய ஒருவரது வரலாற்றைக் காண்போம்.

இலங்கைவாசி யாழ்ப்பாணத்தருகேயுள்ள வல்வெட் டித்துறையில் வாழ்பவர். பெருங்குடி வேளாளர். தந்தையார் பெயர் கந்தசாமி பிள்ளை. இவர் பெயர் வேலுச்சாமி பிள்ளை. இவரது 16-வது வயதில் வயிற்றில் வலியேற்பட்டது. பரி காரங்களும் நடந்தன. விடுவதும் மீண்டும் தொடர்வதுமாக இருந்தது. இந்த நிலையிலேயே B. A பட்டதாரியுமாகிவிட் டார். மேலும் மலேயா நாட்டில் சிங்கப்பூரில் ஒரு புகை வண்டி நிலையத்தின் அதிகாரியுமானார்.

நோயும் அதிகரிக்கத்தொடங்கியது. சிகிச்சையும் உரம் பெற நடந்தது அமெரிக்கா இங்கிலாந்து, ரஷியா முதலான மேல்நாட்டு கீழ்நாட்டு மருத்துவ நிபுணர்கள் இதில் படாத பாடுபட்டுப் பார்த்தார்கள். இவ்வழியில் பல ஆண்டுகள் கால விரையமானதும் பணம் பாழானதும் தவிர பயனொன்றும் இல்லை. மருத்துவங்கள் செய்துசெய்து மனம் சோர்வுற்றது. உணவு மறுத்தது. வாந்தி அதிகரித்தது உடல் மெலிந்தது நரம்பு நாடிகள் தளர் வெய்தின. விதியே என்று நொந்து

போய் தம் தாயகம் (யாழ்ப்பாணம்) வந்து சேர்ந்தார்.

ஓய்வொழிவின்றி குடலை பிசைந்து புரட்டிக்கொண்டிருக்கும் வேதனை முன், மரண வேதனை என்ன? இதற்கு எம் மாத்திரம்? என்ற நினைப்பை மூட்டியது. இனி என்செய்வோம் என்று திகைத்தார். ஏங்கினர், நம் வாழ்க்கைப் பயணம் நெருங்கிவிட்டதாக மதித்தார். அந்நேரம் பெரியார் ஒருவர் வந்தார்; நோயாளியை நோக்கினர்; அப்பா என்றழைத்தார் ஒன்று சொல்லவந்தேன் கேள்! அதன்படி நட; உனக்குற்ற இவ்வல்வினை நோய் தீர்வது உறுதி. இது திருவருளாணை என்று குறி சொல்வதுபோல் சொன்னர்.

வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டுச் செல்பவன் கையில் அகப்பட்டதை தாவிப்பற்றிப் பிடித்துக் கரையேற முயற்சிப்பவன் போல் வேலுச்சாமிபிள்ளை மரணத்தின் வாயிலிருந்து தப்ப வழிமேல் விழிவைத்திருந்தது, வியப்பல்லவே! "திருவருளாணை" என்ற சொல் சிந்தையைத் துருவியது. பெரியாரை வணங்கினர். ஆணையின்படி நடக்கிறேன், என்று உறுதிமொழி பேசல் சொன்னர்.

பெரியார் கூறியது:

நமது முன்னையோர்கள் இந்தியாவில் சேதுபதிகளின் சீமையில் உத்தரகோசமங்கை என்னும் தலத்தில் வாழ்ந்தவர்கள் முஸ்லீம் கொலை கொள்ளைகளினின்றும் உயிர் உய்ய அதைவிட்டுக் குடிபெயர்ந்து இந்நாட்டை அடைக்கலமாய் வந்தடைந்தார்கள். நாம் அத்தலத்தில் அமர்ந்திருக்கும் இலவந்திகை நாதனுகிய மங்களநாதனுக்கு ஆட்பட்டவர்கள் அவன் நமது ஆண்டான். நாம் அவனது அடிமை. இந்த ஆண்டான் அடிமை உரிமையை உன் தந்தையார் தலைமுறை வரை ஆண்டுகள்தோறும் அத்தலத்தை அடைந்து மங்கள நாதனை பணிந்து பக்திப் பரவசமாய் அர்ச்சித்துப் பூசித்து அடிபணிந்து விடாது பேணி வந்தார்கள்.

உன் காலத்தில் அத்தெய்வ வழிபாடு தவறிவிட்டது. சென்றதைக் கருதவேண்டாம். இனிச்செய்வதில் சிந்தனை செய். நாளைபின்னை என்று நாட்கழிவு கூடாது. இன்றே உத்தரகோசமங்கை செல்க! மங்களநாதன் சந்நிதியில் ஒருமையுடன் சரணுகதி புகுந்துவிடு நிச்சயமாய் உன் நோய் தீரும். இதில் துளியும் ஐயப்பட வேண்டாம் என்று ஏவினுர். வேலுப்பிள்ளையும் அதை வேதமொழியாக ஏற்றுப் புறப் படலானுர். 1936ம் ஆண்டு ஏப்ரலில் வழிச்செலவுக்கு ரூபா 300 எடுத்துக்கொண்டு உத்தரகோசமங்கை வந்துசேர்ந்தார். கருணையின் கடலாகிய அப்பன் சன்னதியைச் சிறிது தூரத் தில் கண்ட அளவில் தாயைப் பிரிந்த கன்றுபோல் கைகள் உச்சிமேல் குவிய நாவு குழற மங்களநாதா! மங்களநாதா! என்று சொல்லிக்கொண்டு சன்னதியில் வீழ்ந்து புரண்டார். ஏழு நிலைக்கோபுரத்தின் கீழ் அமர்ந்திருக்கும் முருகன் சந்நிதியில் படுகிடையாகக் கிடந்தார். உடும்புப் பிடியாய் பற்றிக் கொண்டார். நோய் முதுமை அடையும்போது இடையிடையே அலறிக்கொண்டும் துடிதுடித்துக்கொண்டும் கிடந்தார் இவரது வேதனைமிக்க அழுகுரல் அவ்வூரார் அனைவரையும் அந்தோ என்று இரங்கி வருந்துமாறு செய்தது. அப்பொழுது அன்னவருக்கு வயது 45.

இவ்வூரில் ஓர் அம்மையார் வேளாள மரபைச் சேர்ந்தவள். இன்று வயது 63. இன்னும் வாழ்ந்து கொண்டிருக் கிருர் அந்த அம்மையாருக்குப் புண்ணியமாய்ப்போக என்ன எண்ணம்ஏற்பட்டதோ தெரியவில்லை நாளும் நோயாளிக்குக் கழிவிரககங்காட்டி கஞ்சி வார்த்து வந்தார் மங்களநாதா! மங்களநாதா! என்று அல்லும் பகலும் ஓலமிடும் அவர் ஆவியுடன் நோயுடன் போராடிக்கொண்டிருந்தார் இந்நிலையில் 15 நாட்கள் கழிந்தன. 16-ம் நாள் இரவு நடுநிசி நேரம் இருக்கும் அலறும் ஒலி அடியோடு அணைந்துவிட்டது.

இப்பிணியாளியின் பேரில் பேரிரக்கம் செலுத்திவந்தவர்களிலே திரு. கா. முனியாண்டியா பிள்ளையும் ஒருவர்.

உள்ளூர் வாழ்நர் நல்ல சித்தவைத்தியர் ஆலயத்துக்கு அக்கம் பக்கத்து வீட்டுக்காரர் இரவில் எழும்போதெல்லாம் புண்ணுளியின் பேரில் கண்ணேட்டங்காட்டுவார். அன்றும் அந்த நள்ளிருளில் நடுச்சாமம் எழுந்தார். உற்றுக்கேட்டார். ஒலி இல்லை, ஐயமேற்பட்டது. ஆ! இறந்துவிட்டார் போலும் என்று அழுங்கினர். உடன்வந்த அன்பர்களுடன் நோயாளியை அக்கணமே அணுகினர். சோதனை செய்தனர். வாசி நன்முக நழுவியது. ஐயம் அகன்றது. கழிபேருவகையாயினர். ஆ! அதோ வீற்றிருக்கும் கருணையங்கடல் துளியத்தனை கருணை வழங்கினன் போலும் என எண்ணினர். ஆழ்ந்த தூக்கம் அல்லற்படுத்தலாகாது. பொழுது புலரட்டும் என்று போயினர்.

விடிந்தது 10 மணிவரையும் எழவில்லை சொப்பனவத்தையுங் கடந்து சழுத்தி அவத்தையில் கிடந்தார். அப்பால் மெல்ல விழித்தெழுந்தார். அருகில் அன்பர்கள் பலர் தன்னை மலர் முகத்துடன் இமை கொட்டாது பார்த்துக்கொண்டிருப்பதை கண்டார். கண்டதும் "என்பக்கமிருந்த பெரியாரெங்கே? எங்கே? நீங்கள் கண்டீர்களா?" என்று வினவினர். இல்லையே! என்ன! ஏதுவிபரம் என்றூர்கள் அந்தப் பெரியார் என்பக்கம் வந்தமர்ந்தார். "நான் உன் பக்கமிருக்கிறேன் நீ சுகமாக தூங்கு" என்று தம் கரத்தால் என் வயிற்றைத் தடவினர்.

அவரைக் காணவில்லையே! நான் என் செய்வேன்? என்று காண்பேன்! என்று ஏங்கினர். வயிற்றைத் தடவிப் பார்த்தார். உடம்பெல்லாம் உற்றுநோக்கினர். திகைத்தார் வியப்புற்றூர். எமன் பிடியிலிருந்தும் விடுதலை கிடைத்து விட்டது என்பதை உணர்ந்தார் கருணைக் கடலான மங்கள நாதனது திருவருள் திறத்தை சிந்தித்தார். ஆ! "தீராநோய் தீர்க்கின்ற செல்வர்" என்று நெடுமூச்செறிந்தார் விம்மிதமுற்றூர் உடம்பெல்லாம் உரோமம் சிலிர்த்தன. அன்பு சுரந்து ஊறித்ததும்பி இருவிழிகழிளும் நீர் சொறிய ஆரம்பித்தன. தன் உணர்வு அற்றூர். பரவசமாகி விட்டார்.

அவ்வளவுதான் மங்களநாதா! என்ற மகா மந்திரத்தைச் சொல்லியபடியே ஓலமிட்டுக்கொண்டு ஆனந்த மேலீட்டால் ஆடினுர்; பாடினுர்; அழுதார். இவ்விதம் பித்துப் பிடித்தவர் போலானுர். அன்பு அதிகப்படும் போது பாலர்கள் போலும் பேயர்கள் போலும், பித்தர்கள் போலும் மாறிவிடுவார்கள் என்பது பெரியார் இலக்கணம். ஆலயத்தைச் சூழ்ந்தபடியே நான்கு பெரிய ரத வீதிகளையும் கீழே வீழ்ந்து புரண்டபடியே (அங்கப்பிரதட்சணம்) வீதிவலம் வந்தார். இந்தத் தொழும்பு மூன்று நாட்கள் தொடர்ந்து நடந்தது ஓரளவு சுய நிலைக்கு வந்தார். ஆருமையும், பேராமையும் பெற்ருர். இலவந்திகை நாதன் திருமுன்னின்று இரு கரமேந்திப் பிரார்த்திக்கலானுர்.

"என் உடலுக்குற்ற துணையே! உயிர்த்துணையே! வாழ்க்கையின் வழித்துணையே! உன்னை நான் மறக்கலாமா? மறந்தால் யாதாவேன்? உன்னை வேண்டும் வரம் ஒன்றுண்டு அதுதான் உன்னை மறவாவரம்'' என்று பிரார்த்தித்தார்.

தான் கொண்டுவந்த பணத்தில் எஞ்சியதை ஏழைகளுக்குத் தானமும் செய்தார். மங்களநாதனுடைய மலரடிகளை மறவாது மனத்தில் இருத்தியபடியே தன் நாடு போய்ச் சேர்ந்தார். அடுத்த ஆண்டும் வந்து இலவந்திகை நாதனை அர்ச்சித்துப் பூசித்து ஆராதித்துச் சென்ருர். அப்பால் வரவில்லை.

வளர்க மங்களநாதன் திருவருள்!

---

## வாதநோய் நீக்கிய வரதன்

கடவுள் என்பவருளரோ. அவரைக் கண்டதுண்டோ? என்று அன்று ஒரு விவேகானந்தர் குரல் ஒலித்தது. இன்ருே எத்தனையோ விவேகானந்தர்கள் தோன்றியிருக்கின்றனர். அவர்களை ஒன்று நான் கேட்கிறேன். உயிர் என்பது என்று

உளதோ? அப்படியானுல் அதை எவரேனும் பார்த்த துண்டோ? கையால் பற்ற இயலவில்லையே! கருத்தாலும் உணர முடியவில்லையே! அதை உண்டென்று எவ்விதம் நம்புவது?

மனிதன் அண்ட பகிரண்டங்களையெல்லாம் துருவி ஆட்சிபுரிய முற்படுகிருன். அவன் ஒரு அதிசயப் பிறவி! எதனுல்? அவனுள்ளே இருக்கும் ஆன்மாவால் அது இயக்க இயங்குகிருன, அது இயற்றுவிக்க இயற்றுகிருன் அது வெளியேறிவிட்டால் காலத்தச்சன் வெட்டிமுறிக்கும் மரம் போல் வீழ்ந்து படுகிருன். அவ்வளவுதான் அவன் ஆடல் பாடல்கள். அப்படியானுல் அது கண்ணுக்குத் தோன்ற வில்லையே? கருத்துக்கு எட்டவில்லையே? என்பதுகொண்டு அத்தகைய ஆன்மா என்ற ஒரு பொருள் இல்லையென்று துணிந்து கூற முடியுமா எவராலும்?

இவ்வுடலினுள்ளே மறைவாக உயிர் என்பது ஒன்றிருந்து இயக்குவது போல இவ்வுலகினுள்ளே புலன் பொறிகளுக்கெட்டாமல் அறிவாராய்ச்சிக்கு அப்பாற்பட்டு உலகினுக்குயிராய் ஒரு பொருள் இருந்து இயக்க அண்டங்களெல்லாம் அதனதன் எல்லைக்கோடுகளின் வழியே அனுப் பிசகாமல் இயங்குகின்றன. இல்லையேல் அவை தாமாகவே இயங்குவது எப்படி?

*"வழியடியோம் கண்ணகத்தே*
*நின்று களிதரு தேனே! கடலமுதே*
*கரும்பே! விரும்பு அடியார் எண்ணகத்தாய்*
*உலகுக்கு உயிரானுய், எம் பெருமான்*
*பள்ளி எழுந்தருளாயே"*

என்ற மணிவாசகப் பெருமான் வாசகம் இதனை வலியுறுத்த வில்லையா?

நோயிலும் கவலையிலும் அமிழாத ஒருவனைக் காணல் உலகில் அரிது:-

ஆண்டி முதல் அரசர் வரை எவரையும் கவலை, நோய் விடவில்லை. கவலை உலகைக் கறையானாய் அரிக்கிறது. கவலை நோய் உயிரோடு தொடர்பு கொண்டே நோயாகிவிட்டது. அதற்கொரு மாற்று மருந்துதான் ஆற்றும் வழிதான் இல்லையா? இருக்கிறது என்கிறான் ஒரு தெய்வப் புலவன். எவருக்கு ''தனக்குவமை இல்லாதான் தாள்-(அடி) சேர்ந் தார்க்கு'' மற்றவர்களுக்கு? ''மனக்கவலை மாற்றலரிது'' என்று தெய்வநிச்சயத்தை ஆணித்தரமாக அறைந்து வைத் திருக்கிறான். தெய்வப்புலவன் திருவள்ளுவன். அவன் வகுத்த வாழ்க்கைச் சட்டத்தை எடுத்தெறிந்துவிட்டு நாத்திகத் துறையில் இறங்கி நலிந்து மெலிந்து விடுதலை காணாது உழன்று ஒரு கொடும் நோயினின்று மீட்சிபெற்ற ஒரு அன்பரது வரலாற்று உண்மையைக் காண்போம்.

திருஉத்தரகோசமங்கையில் இருளாண்டிப் பிள்ளை என்பவர் இல்லறம் செலுத்தி வந்தார். இல்லறம் நல்லற மாக நடந்தது. அவர் மனைவியார் பெயர் இலக்குமி என்பது. இவர்களது இல்லறப் பூங்காவில் 1926ம் ஆண்டில் ஒரே ஒரு மகன் அரும்பினான். அவன் பெயர் நாகரத்தினம். தொழில் கல்தச்சு வேலை. அவ்வேலையில் திறமைபெற்று விளங்கினான். ஈரோடு அருகிலுள்ள ஆவல் பூந்துறை என் னும் தலத்தில் ஆலயத்திருப்பணிவேலை அதிவிரைவாய் நடந்தது. வேலைத் திறமையால் நாகரத்தினம் அங்கு பணி புரிய அழைக்கப்பட்டார்.

அப்போது சுயமரியாதை இயக்கம் கையோங்கிய காலம். அதன் கூட்டமும், நாட்டமும் கோலாகலமாக அடிக்கடி நடந்தன அதன் பெரியார்கள் பலர் அங்கு நிகழ்த் திய சொற்பொழிவுகளைச் செவி மடுத்தார். அம்மட்டில் அவ ரது உள்ளம் அவர்கள் பக்கம் திரும்பியது. அவ்வளவுதான். தான் பிறந்த மதத்தைப்பற்றி இழித்துரைக்க ஆரம்பித்தார். ஆலய வழிபாடு அவருக்கு வேப்பங்காயாகிவிட்டது அப்

பெரியார்களிடம் பற்று வைத்தார். வாழ்வின் வழிகாட்டி களாக அவர்களைப் பாவித்தார். அவர்களிட்ட ஆணையைச் சிரமேற்றுங்கி நடக்கலானார். பிள்ளையார் சிலைகளைக் கிணற்றிலும், குளத்திலும் வீசியெறிந்து விளையாடினார். எப்போது பார்த்தாலும் உருவ வழிபாட்டை நிந்தித்துப் பேசுவதே கடமையாகக் கொண்டார். அந்தக் குழுவினரை திருக் கூட்டத்தாராகப் பாவித்தார். எனவே அக் கொள்கையில் வெறிபிடித்தவர்போல் நடந்து வந்தார். அப்போது வயது 35.

1961-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஒரு நாள் மாலையில் உத்தரகோசமங்கையில் உள்ள தன் தோட்டத்தைப் பார்க்க சென்றார். சென்றவர் மறுநாள் விடியும்வரை திரும்பி வர வில்லை. பெற்றோரும், மற்றோரும் தேடிச் சென்றார்கள். இவர் ஓரிடத்தில் தன்வசம் அற்றுப் பிணம்போல் கிடந்தார். மூச்சு ஓடிக்கொண்டிருந்ததே தவிர வேறு உணர்ச்சி ஒன்று மில்லை காலும், கையும் செயலற்று செத்துப் போய்விட்டன அவ்வளவில் வாரி எடுத்துக்கொண்டு வந்து வீடு சேர்ந்தார் கள். விரைந்து சிகிச்சைகள் நடந்தன. சிறிது உணர்ச்சி வந்ததும் புலம்ப ஆரம்பித்தார். மதியும் தன்னிலையில் இல்லை நாவும் சரியாகப் பேசவரவில்லை. நாவு உளறிக் கொண்டு பேசத் தொடங்கினார். மங்கள நாதா! மங்கள நாதா! என்ற சொல்தான் முதல் ஒலியாய் வெளிவந்தது. யாரும் சொல்லிக்கொடுக்காமல் இது தானாக வெளிவந்தது. இந்த ஒலி இடையறாத ஒலியாய் ஒலித்தது. படுத்த படுக்கை யிலே கிடந்தார். நாட்டு முறையில் சிறந்த சித்த வைத்தியர் களைக்கொண்டு சிகிச்சை அளிக்கப்பட்டது. அவைகளினால் யாதொரு பயனும் சித்திக்கவில்லை. மங்கள நாதருடைய நாமத்தை அச்சத்தோடும் உளங்கனிவோடும் இடையறாது ஒலிக்கும் ஒலிமட்டும் ஓயவில்லை. இதனால் ஒன்றரை ஆண்டுக் குப் பின் அசைவற்றுக்கிடந்த கால்கள் சிறிது உணர்ச்சிவந்து அசைய ஆரம்பித்தன. நாளடைவில் கால்களின் நரம்புப்

பிணிப்புக்களும் கட்டவிழ ஆரம்பித்தன. அவர் ஒன்று கேட்டுக்கொண்டார். தன்னை அந்தியும், சந்தியும் இலவந்திகை நாதனுடைய சந்நிதியில் எடுத்துச்சென்று அடைக்கலம் செய்யுங்கள் என்பதுதான். அதன்படி அங்கே எடுத்துப் போய் வைப்பதும் அப்பால் எடுத்து இல்லம் கொண்டுவந்து சேர்ப்பதுமாய் இருந்தார்கள். இதைத் தவிர வேறு பரிகாரங்கள் ஒன்றும் நடைபெறவில்லை. இப்படி சிலகாலம் செல்லவே, தனக்குத் தானுகவே எழுந்து நிற்கவும் நடக்கவும் ஆரம்பித்தார். இது பலருக்கு வியப்பையும், உவப்பையும் தந்தது. நாளடைவில் கோலூன்றியும், காலூன்றியும் நடச்க ஆரம்பித்தார் ஆண்டவன் ஆலயத்துக்குத் தானே பையப்பைய நடந்துபோய் வரத் தலைப்பட்டார். போகப் போக உடம்பின் பூட்டுகள் கட்டவிழ்ந்தன. இப்போது கோலூன்றிக்கொண்டு வேகமாக ஆலயம் போய்ச் சேவித்து வருகிறுர். ஆலயத்தினுள் புகுந்ததும் திருவாசகம், தேவாரம் திருவருட்பா முதலிய தெய்வீகப் பாடல்கள் பரவச நிலையில் ஒலித்த வண்ணமாக இருக்கும்.

இளமையில் நெறியல்லா நெறிச் சென்று செய்த பிழைகளுக்கெல்லாம் இப்போது, பெருமான்—அருளாளன் இலவந்திகை நாதன் சந்நிதியில் மனம் கலங்கி அவர் சிந்திய கண்ணீர் கொஞ்சமல்ல. மெய்யன்பர்களே! மங்களநாதன் ஒருமையுடன் அடைக்கலம் அடைந்தவர்களுக்கு மகா வைத்திய நாதன்—கண்கண்ட கலியுக வரதன் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு இல்லையா? எடுத்துக்காட்டு இல்லையென்று யாவரும் சொல்லவும் இயலுமோ? அல்லது சொல்லத்தான் சொல்லலாமா? வாழ்க மங்களநாதன் திருநாமம்!

---

## கண் கொடுத்த கடவுள்

கண்களில் இருவகையுண்டு. ஒன்று முகக்கண். மற்ருென்று அகக்கண். அகக் கண்ணை மனக்கண்ணென்றும்.

அறிவுக்கண்ணென்றும் சொல்கிறார்கள். அறிவுக்கண் மண்ணையும், விண்ணையும் துருவிக்கொண்டு அண்டங்களையும், பகிரண்டங்களையும் அறியவும், ஆளவும் முனைந்திருக்கின்றது. இந்த அகக் கண்ணுற்றலால் மனிதன் தெய்வ மனிதனாக மாறுகிறான். அக்கண்ணைப்பற்றி அதிகம் ஆராய ஈண்டு இடமில்லை.

முகக்கண் ஒன்றைப் பற்றியதே இத்தலையங்கத்தின் முக்கிய நோக்கமாகும். ''எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்.'' அங்கே அமைந்திருப்பது கண். எல்லா அங்கங்களிலும் சிறந்தது கண். தன்னை வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டவளைக் காட்டிலும் சிறந்த சுற்றத்தார் யாரும் இல்லை. தான் பெற்ற மக்களைப் பார்க்கிலும் மேலான செல்வம் யாதுமில்லை. பெற்ற தாயைப் பார்க்கிலும் மேம்பட்ட தெய்வம் எதுவும் இல்லை. இவைபோல கண்ணிற் சிறந்ததோர் உறுப்பு யாதுமில்லை கண்ணிழந்து வாழும் வாழ்வும் ஓர் வாழ்வாமோ? இதைப்பற்றி நானென்ன சொல்வது? சுவாமி சுந்தர மூர்த்திகளே சொல்லி அழுகிறார்!

இவர் திருவொற்றியூரில் சங்கிலியாரை விட்டுப் பிரிவதில்லை என்ற உறுதி கொடுத்து மணந்தார். சில காலம் செல்லவே அவ்வுறுதி மொழியைச் சட்டை செய்யாது ஒற்றியூரின் எல்லையைவிட்டு ஓரடி எடுத்துவைத்தார். அவ்வளவிலே இரு கண்களும் மறைந்துவிட்டன. திரும்பினார் திருவொற்றியூர் ஆலயத்துள் ஆங்கெழுந்தருளியுள்ள எழுத்தறியும் பெருமான் சந்நிதியின் எதிரே நின்று முறையிடலானார்.

வீட்டில் பெண்களை நோக்கி, நான் ஒன்று சொன்னால், அவர்கள் அழையாதே போ குருடா என்றால் நானா உயிர் தரித்திருப்பேனா! என்ற கருத்தமைத்து,

> ''அகத்தில் பெண்டுகள் நான் ஒன்று சொன்னால்
> அழையேல் போ குருடா எனத்தரியேன்,
> முகத்தில் கண்ணிழந்து எங்ஙனம் வாழ்வேன்!
> முக்கணா முறையோ பரஞ்சோதி.''

என்று அழுது முறையிடுகிறார்.

தம்பிரான் தோழராகிய சுந்தரர் நிலையே இதுவானால் ஏனைய மக்களது கண்ணிழந்த வாழ்க்கையை எவ்விதம் வருணிப்பது? கண்ணிழந்த ஒரு கிழவியின் கதையை இங்கே கேளுங்கள்.

''பாண்டி நாட்டே பழம் பதியாகும்'' என்று மணிவாசகப் பெருமான் பல இடங்களில் பாராட்டியுள்ள பாண்டிவள நாட்டிலே இராமநாதபுரம் மாவட்டத்திலே சேதுபதிகள் சீமையிலே உத்தரகோசமங்கைக்கு மேல்பால் 5-கல் தொலைவில் கடம்பனோடை என்றதோர் சிற்றூர் உள்ளது அதைக் கடம்படையோடு என்றும் சொல்கிறார்கள். ஆனால் இன்று அது கடம்படை என்றே மக்களால் மருவி வழங்கப்படுகிறது. அவ்வூரில் வாழ்பவர்கள் பெரும்பாலும் யாதவர்களே. அவர்கட்குப் பயிர்த் தொழிலே பரம்பரைத் தொழில்; ஆடு வளர்த்தலும் அவர்களது உபதொழில். அம்மரபிலே இன்றைய இளைஞர்கள் சிலர் கல்வியில் முன்னேறியும், பல்கலைக் கழகப் பட்டதாரிகளாகியும், மாவட்ட வணிகவரி முதல்வர்களாய்ச் சிறந்த பதவிகளிலமர்ந்தும் அரசுபணி புரிந்து வருகிறார்கள். அவர்களில் நிலபுலமில்லாது உழைத்தே உண்டுவாழுங் குடிகளும் உண்டு. இக்குடிகளிலே சாத்தக்காள் என்றதோர் நரை மூதாட்டி; வயது (50) இருக்கும் உடலுழைப்பால் உயிர் வாழ்பவள். சளைக் கொட்டும், புல் செதுக்கியும், கொத்து வாளுந்தான் தொழிலின் துணைக் கருவிகள். முதற்கருவி அவளது உடல், அதுதான் அவளது அசல் மூலதனம். அவை கொண்டே பகலெல்லாம் மாடாயுழைப்பாள், மண்வெட்டியாய்த் தேய்வாள். ''உழைத்தவன் கூலி பெறுவான் ''என்ற பழமொழிப்படி அன்றாட வாழ்க்கை நடத்தி வந்தாள்.

வயதாகிவிட்டது, பார்வையும் வரவரத் தேய்ந்து முழுவதும் மறைந்துவிட்டது நாட்டுமுறையில் சில சிகிச்சைகள் செய்தும் பயனில்லை. ஆங்கில மருத்துவ மனையில் அடியிடவும் முடியாது ஏன்? இல்லாரை எல்லாரும் எள்ளுவா

ரல்லவா? எனவே, மங்கைத் தலத்து மங்கள நாதனைப் பிரார்த்தித்து வேண்டிக்கொள்ளுமாறு எல்லாரும் ஒன்று போல் சொன்னார்கள். அதில் அவள் நம்பிக்கை வைத்தாள், "நம்பினோர் கெடுவதில்லை நான்கு மறைத் தீர்ப்பு" நல்ல காலம் நம்பினாள்.

அவளுக்கோர் பேத்திப் பெண் இருக்கிறாள். இளம் பருவம் வயது 15 இருக்கும் அவள் பெயர் "செகப்பி" அவளுக்குக் காது கோளாறு, செவிடு, ஆனால் ஊமையல்ல. 1964-ம் ஆண்டு டிசம்பர் மாதம் அவள் துணையில் சாத்தக்காள் உத்தர கோசமங்கை வந்தாள். குருடரும் முடவருமாகிய இரட்டையர் போல கண்ணுங் காதுமில்லாத இவர்களிருவரும் வந்தனர் அக்கினி தீர்த்தத்தில் நீராடினாள். ஈரச் சேலையுடன் மங்கள நாதன் சந்நிதியை அடைந்தாள். முழந்தாள் மண்டியிட்டபடியே இரு கரங்களையும் பரப்பிக்கொண்டு மங்களநாதா! கலியுக வரதா! கண்கண்ட தெய்வமே! முகத்தில் கண்ணிழந்து எவ்விதம் வாழ்வேனையா? எனக்கு வந்த இக்குறையை சுவாமி திருவருளால் தீர்த்தாலன்றி வேறு யார் துணை யாவாரையா? வேறு மருந்தறியேன். வகையறியேனையா? நானோ ஏழை! நீயோ ஏழைப் பங்காளன்! நான் உன் சந்நதியில் அடைக்கலமானேன். இனி இத்தலத்தைவிட்டு அகலப் போவதில்லை. சரணாகதி புகுந்துவிட்டேன், எனக்கு நீ பார்வை கொடுக்கவில்லையானால் எனது பழியேற்றுக்கொள் என்று கசிந்துருகிக் கண்ணீருகுத்து வேண்டினாள்.

பேத்திப் பெண் உதவியினால் வீடுகள் தோறும் பிச்சை ஏற்பது இருவரும் உண்பது புறத் திண்ணைகளில் உறங்குவதுமாக அந்தியும், சந்தியும், உச்சியுமாய் அழுதழுது மங்களேசுவரனை சேவித்து வந்தாள். 15ம்நாள் பகலவன் ஒளி தோன்றியது. அதன் மறுவாரம் விளக்கொளிகள் தெரிந்தன. ஆக ஒரே மாதத்தில் உருவங்கள் புலனாயிற்று, தானே வழிதெரிந்து

பேத்தியின் துணையின்றி தானே வழிகூடி நடக்கலானுள் வழக்கம்போல் தோன்ருத் துணையாகிய மங்களேசுவரன் திரு முன்போய் ஊற்றிருந் தொழுகும் கண்களோடு நின்ருள். எனக்குக் கண்கொடுத்த தெய்வமே! நான் உனக்கு என்ன கொடுக்கப்போகிறேன்! "காணுர்க்கும், கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே" என்று பெரியார்கள் உன் பெருமையை பேசுகிருர்கள். அதை நான் கேட்டிருக்கிறேன். இன்று என் எதிரே என் கண்ணெதிரே கண்டேனையா! இனி உன்னை மறந்து உயிர் வாழ்வேனு? மறப்பறியேனையா? மறந்தால் உயிர்விடுவேன் சுவாமி! என்று பல பல சொல்லிப் பாடினுள். என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே என மகிழ்ச்சி மீதூரப் பெற்று காலையும், மாலையும் ஆராமையால் ஆராதித்தும் மனம் பேராமையால் பிரியா விடை பெற்றும் தானும் தன் பேத்தியுமாய் வழிக்கூடி நடந்து தன் ஊர்போய்ச் சேர்ந்தார்கள்.

பேத்தியாகிய செகப்பிக்கும் அத்தலம் வந்து சேர்ந்த 15-ம் நாளில் செவிட்டுத் தன்மை முழுதும் தீர்ந்துவிட்டது. அண்மையில் நிகழ்ந்த இவ்வுண்மையை உத்தரகோசமங்கை பெரிதும் அறியும்.

ஓங்குக மங்களநாதன் பெருமை!

---

## பெரும் வழக்கருளிய பெருமான்.

சேர சோழ பாண்டிய மூவேந்தர் காலத்திலும் சரி அவர்களின் பிற்காலத்திலும் சரி சைவ, வைணவ மதங்களை வளர்க்கவும் அவைகளைப் பாதுகாக்கவும் பற்பல மடாலயங்கள் நம் தமிழகத்திலே தோன்றலாயின அவைகளில் ஒன்று குன்றக்குடி மடாலயம். அது சைவசித்தாந்த சமயத்தை—திருவருள் நெறியைச் சார்ந்தது.

ஒவ்வொரு மடாலயமும் பல பல தேவாலயங்களைத் நம் தம் பொறுப்பில் வைத்துப் பாதுகாத்து வந்தது போன்றே குன்றக்குடி மடாலயமும் ஐந்து தேவாலயங்களை தம் உரிமையில் வைத்து வாழையடி வாழையாய்ப் பாது காத்து வந்தது. இன்றும் வருகின்றது. ஆனல் இடையில் திடீரென்று அவற்றிலோர் பெரும் திருப்பமேற்பட்டது. நாட்டுக்கோட்டை நகரத் (வைசியர்கள்) தார்கள் குழுமி, அந்த ஐந்து தேவாலயங்களும் தங்கள் நிர்வாகத்திற்கு மாற வேண்டும் என்று பெரும் வழக்கொன்று தொடர்ந்தார்கள் வாதிகள்: நகரத்தார். பிரதிவாதி அப்போது அவ்வாதீன முதல்வராயிருந்த பண்டார சந்நிதி அவரை மகா சந்நிதான மென்று சொல்லுவார்கள். பாவம் பரம சாது. தமது ஆதீன தேவாலய கடமைகளைத் தவிர வேறு கோடு நாடொன்றையும் அறியாதவர் என் செய்வார்! வழியொன் றும் தெரியவில்லை வழிகாட்டுவாருமில்லை. திகைத்தார். மனந்தடுமாறினர். தீராநெஞ்சிற்குத் தெய்வமே துணை யென்பார்கள். அவ்வாறே கடைப்பிடித்தார்.

முருகனை ஒருமையுடன் நினைந்தார். ''திருமுருகன் திரு வடியே சிந்தை கொண்டோம். சென்று நாம் சிறு துணைகள் சேரமாட்டோம் என்றுமே குறையுடையோமல்லோம். இரு நிலத்தில் எமக்கெதிர்வார் யாருமில்லை.'' என்ற உணர்வு பொங்கியது, ஊக்கம் உந்தியது, குன்றக்குடிக் குன்றிலேறி னர். குன்று தோறுடும் குமரன் சந்நிதியைக் குறுகினர். அடியற்ற ஆலமரம்போல் தமது முடியுற்ற சடைகள் தரையில் புரள தாமும் வீழ்ந்து வணங்கி எழுந்தார். இரு கரங்களையும் ஏந்தியபடியே, விண்ணப்பம் செய்தார். ''அயி லேறும் கையினனும் மயிலேறும் பெருமானே! அடியார்க்கு நல்ல பெருமாளே! நின்னுமங் கூறியும் நின்னருளே இச் சித்தும் பன்னுளருச்சித்தும் பாதந்தலை சுமந்தும் நீயே தஞ்ச மெனச் சார்ந்திருக்கும் நின் மெய்யடியார்கள் பலர்

இங்குளார் என்பது நீ அறியாததல்லவே. அவர்களிலே அடியேனும் ஒருவனன்றோ? யான் இவ்வுலகில் பிறர் யாருடைய உடைமையையோ, உரிமையையோ கவர்ந்திலேனைய! எனக்குப் பகையாவர் யாருமே இல்லையையா! நின் சந்நிதிகள் தோறும் எனக்கு தொன்மை மரபுத் தொடர்புடனிருந்துவரும் உரிமையைப் பறிப்பதற்காக ஒரு பெரும் செல்வக் குழாத்தார் என்மீது வல்வழக்கொன்று தொடர்ந்திருக்கின்றனர். ஒரு பெரும் திகைப்பைத் தருகிறது.

"பகைமையும், துன்பமும் நின் மெய்யடியார்க்கோ? பாரினில் மேன்மைகள் வேறு இனியார்க்கோ? தஞ்சமென்றடைந்தேன் கைவிடலாமா! தாயுந்தன் குழந்தையைத் தள்ளிடப்போமா" நீயே துணையையா! வேறு யார் துணையும் இல்லையையா? என்று முறையீடு செய்துவிட்டுக் கவலையுடன் மடாலயம் திரும்பினர். அன்று அருந்துதல் பருகுதல் இன்றி உண்ணு நோன்பு கொண்டு அயர்ச்சியால் உறங்கிவிட்டார். அன்றிரவே ஆழ்ந்த உறக்கத்தில் ஒரு பெரியார் கனவில் தோன்றினர். "அன்ப! நீ உத்தரகோசமங்கை செல்! அங்கமர்ந்திருக்கும் நர்த்தன கணபதியை வேண்டிக் கொள்! உன் வழக்கு வெற்றியாகும்" என்று கூறி மறைந்தார்.

அக்கணமே துண்ணெனத் துயிலுணர்ந்தெழுந்தார். வைகறைக் கடமைகளை முடித்தார். விரைந்தார் உத்தரகோசமங்கை நர்த்தன கணபதியின் சந்நிதியை அணுகியதும் உரோமம் சிலிர்த்தது. உள்ளம் அனலின் மெழுகாயுருகியது. நெருங்கண்கள் நீர்வார ஊற்றிருந்தொழுகு கண்களோடு வீழ்ந்து வணங்கி எழுந்தார். "என்னை யாட்கொள்ள வந்த எந்தை பெருமானிரே! என் பெரும் வழக்கிலும் அருளும் பிரணவப் பெரும்பொருளே! தமியேன் கனவு நனவாகிய பின்னர் தேவரீரது இத்திரு முன்னிலையில், ஏழைகட்கு அன்னம் பாலிப்பு முதலாகிய பூசனைகள் சிறப்புற நடை

பெறுவதற்கும் எந்தையே! இன்னருள் பாலிக்கவேண்டும் என்று எம்பித்துவிட்டு தேவனையும் தேவியையும் வழிபாடு செய்துகொண்டு குன்றக்குடி போய்ச் சேர்ந்தார்.

வழக்கு விபரம் ஈண்டு இடம்பெற வேண்டும் என்பது மிகை, விரிக்கிற் பெருகுமென்று விடுக்கின்றேன். விவரத்தை ஒடுக்குகின்றேன். வழக்கு விரைவில் சிக்கல் நீங்கி வெற்றிகரமாக முடிந்தது.

இவ்விடத்தில் மிக இரத்தினச் சுருக்கமாக ஒரு இன்றியமையாத செய்தியைத் தந்து செல்கின்றேன். மன்னிக்க வேண்டும்! மனுநீதி மன்னவன் வரலாற்றில் வருகிற— இறந்து கிடந்த மகன் வீதிவிடங்கன், பசுவின் கன்று, மந்திரி இம் மூவரும் உறங்கி எழுந்ததுபோல எழுகின்றனர். இந்த இடத்தில் பெரிய புராணத்தில் சேக்கிழார்— ''எல்லார்க்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ?'' இதுபோன்று நர்த்தன கணபதியாம் முன்னவனே முன்னின்றபோது இவ்வழக்கு வெற்றியாக முடிந்தது என்பது ஒரு பெரும் வியப்போ?

குன்றக்குடி ஆதீன முதல்வர் தாங்கமுடியாத பேரானந்தப் பெரும் வெள்ளத்தில் மிதப்பவர்போல் உத்தரகோசமங்கை வந்து சேர்ந்தார். நர்த்தன கணபதிக்கு ஆயிரம் தேங்காய் சிதறுகாயாகப் பலியிட்டார். பல நூற்றுக் கணக்கான ஏழைபாலகளுக்கு அன்னம் பாலிப்பு செய்தார். மங்களநாதன் மங்களேஸ்வரிக்கு அபிடேக அலங்கார ஆராதனைகளைச் சிறப்பாக நடத்தி பிரியாவிடை பெற்று ஊர்போய்ச் சேர்ந்தார்.

*''அந்தி நிறத்தனை யானை முகத்தனை*
*புந்தியில் வைத்தடி போற்றுவோம் யாமே''.*

"Om Namahshivaye"

# THE SUPREME GRACIOUS LORD MANGALESHWARA

## TEMPLE AT THIRU-UTTARAKOSAMANGAI.

Persons of this country as well as of foreign countries embarking on pilgrimage appear to be quite ignorant about the SITE, IMPORTANCE and other relevant particulars of THIRU-UTTARAKOSAMANGAI. Consequently, they return back to their respective destinations from Rameshwaram

Hence it is deemed quite indispensable to guide the pilgrims with some most essential facts pertaining to this sacred place, so that they may not be deprived of the benefit, of worshipping the SUPREME LORD MANGALESHWARA

### SITE.

Upon a plain grassy land, the temple stands like a vast amphitheatre, with its turrets and pinnacles up above. The grand panorma of the long looked for temple, in the form of mighty crescent, breaks upon one's wondering gaze.

It stands about ten miles apart and to the south west of Ramanathapuram City. Please see the plan of the temple showing the LAY-OUT of the various shrines within the temple precincts. Each shrine has got its detailed history for which "STHALA PURANAM" in tamil is available in the temple library.

## TRANSPORT FACILITY.

This place is annexed to Ramanathapuram City. through metalled road bus route and the bus services are available from 4 a. m. to 10-30 p. m , at a modest charge of 0-55 N. P.

## UTTARAKOSAMANGAI.

According to the erudite editor of our holy book "TIRUWACHAKAM" the term UTTARAKOSAMANGAI is interpreted universally this way:-

It is stated that our SUPREME LORD SHIVA has exhibited 64 sports in SOUTHERN INDIA; Consequently there fore, after displaying 57th sport, he repaired to this place with GRACIOUS GODDESS UMA Here he taught HER the "AGAMAS" (Agama sastras) once again as requested by Her. Thus, the Uttara-Agama-Kosa expounded here, at the request of Mangai (Lady, i. e., UMA) gave to this place the name of UTTARA-AGAMA-KOSA-MANGAI which with the dropping of AGAMA, has come to be known brieses as UTTARAKOSAMANGAI.

## IMPORTANCE.

In the crowded galaxy of all the holy places in India, this sacred place shines with a lustre of its own. It is a thrice blessed spot beneath the heaven to be associated with an ideal of all that is pure and holy. The dreamland of the Devout Hindus longing for salvation from an earthly existence from the repeated birth and death, the very abode of place and joy eternal, lies here.

The atmosphere of harmony and peace here, renders this sacred place an object of unique and genuine admiration.

Some holy places grant to an intelligent aspirant only purification of mind and heart, after performing the most difficult austere penance for a long chain of succession of periods and strictly adhering to the gospel expounded by shastras and even a slight deviation, turns all the efforts of the aspirant futile.

Some other holy places assign to an intelligent aspirant only perishable worldly pleasures if he performs an austere penance as enjoined in shastrais but salvation can never be dreamt of by such aspirants.

Now at this sacred place, even if a poor aspirant aspires, the Grace of our SUPREME LORD starts immediately, bestowing upon him the guiding light, enables him to march on progressively, by leaps and bounds, starts burning his "STORED" and "FUTURE" KARMAS which are the seeds of future birth, brushes aside all the obstacles raised by the fortune of the aspirant, in his aspiration. Thus by and by, leads the aspirant to such a stage, where the aspirant becomes familiar with the wisdom of the SUPREME LORD; here his merits and demerits get counter balanced and he is set free from "ANAVA" "MAYA" and "KARMA-MALA" and attains "EQUALITY", "WISDOM" and "SOLACE". Now he starts adoration of the SUPREME LORD with the above quoted three flowers. Finally, he loses his individuality and gets united with the SUPREME LORD which is the main goal of life.

The greatest glory of a building is neither in its stones nor in the gold; but its true glory is in its age and in that deep sense of voice fullness of stern watching and mysterious sympathy, nay, even of approval or condemnation

which we often feel in walls that have long been washed by the passing waves of humanity.

It is in this golden stain of time that we have to look for real light, colour and the precious ness of architecture This fundamental truth has been fully justified by this sacred place.

The age of this temple is unaccountable, even many more times ancient than the Rameshwaram temple, whereas the Rameshwaram temple has got "JYOTIRLINGA" as the form of the "SUPREME LORD" This temple has got "SWAYAMBHU LINGA (Self produced) as the form of the "SUPREME LORD", the manifestation of LORD MANGALESHWARA and the GODDESS MANGAL-ESHWARI being the originating and ever sustaining energy of the universe.

Akin to Rameshwaram temple, this temple is also having PEETHAM.

An old sage "KAKBHUSUND'S SAMADHI existing under the shade of one five thousand years old tree, reminds us of the vivid accounts of the remotest past.

Lord NATARAJA'S temple, the first Chidambaram is established here and the idol of the lord is made of the most precious green (emerald) stone. On the auspicious occasion of the "ARDRA DARSHAN" day, falling by the end of December, a huge multitude assembles here and worships the lord. Above all, this place is celebrated by the saints all over the land as SHIVA-PURAM itself.

In conclusion, it is stressed that not even the least margin has been allowed for any exaggeration in any nook or corner of this note; but it is purely the practical experiment of the aspirant and the publie, in general, is requested to rest assured of this fundamental truth.

Despite being such an important historical and religious centre, this sacred place was shrouded with a thick veiled sheet of obscurity so long, which is the matter of great surprise.

However, it is anticipated that the widest publicity and circulation of this note, would undoubtedly achieve wonderful results intended.

East Tower,
T. U. MAUGAI.
13—12—'73.

*(S-d.)* Suresh Prasad Swamigal.



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 30 | லருவ தாக | வருவ தாக |
| 13 | 8 | இலவத்திகை | இலவந்திகை |
| 14 | 2 | நோக்கினுள் | நோக்கினுல் |
| 14 | 18 | மரங்களையும் | மரங்களையும் |
| 114 | 21 | தலங்களிலே | தலங்களிலே |
| 115 | 23 | காத்துவிகம் | சாத்துவிகம் |
| 116 | 1 | மபைப் | மறைப் |
| 123 | 30 | தலத்தில் | தவத்தின் |
| 126 | 23 | ஞன | ஞான |
| 127 | 12 | உரோமச் | உரோமஞ் |
| 128 | 12 | பேண்கள் | பெண்கள் |
| 130 | 18 | மொழியுடைபீர் | மொழியுடையீர் |
| 131 | 25 | உடையுமாய் | உடைமையுமாய் |
| 132 | 32 | 1 துரிசி | 1 துரிசு |
| 138 | 20 | தீர்த்தத்துல் | தீர்த்தத்துள் |
| 139 | 25 | மண்ணுயி | மன்னுயி |
| 142 | 17 | நலனும் | நளனும் |
| 143 | 6 | நாகமும் | தாகமும் |
| 143 | 24 | நகாரமாய் | சிகாரமாய் |
| 148 | 16 | நளக்கெதிரே | நளனுக்கெதிரே |
| 156 | 4 | கெசிகன் | கௌசிகன் |
| 158 | 21 | திருமுடிவில் | திருமுடியில் |
| 165 | 15 | சிரை | கீரை |
| 168 | 8 | சடைமறைத்தி | சடைமறைத்து |
| 180 | 10 | ஆக்திக | ஆத்திக |
| 185 | 14 | சழுத்தி | சுழுத்தி |
| 194 | 23 | அவர்களில் | அவர்களின் |
| 196 | 25 | நெருங்கண்கள் | நெடுங்கண்கள் |
| 28 | 23 | நம்பாடி | நாம்பாடி |
| 29 | 3 | பத்தழெல்லாம் | பத்தரெல்லாம் |
| 29 | 3 | கொண்டாடு | கொண்டாடும் |

# திருவுத்தரகோசமங்கை ஆலயம்




விபரம்

1. ஸ்ரீ. மங்களநாதசாமி ஆலயம்
2. „ மங்களநாயகி அம்பாள் ஆலயம்
3. „ நடனசபாபதி „
4. „ உமாமஹேஸ்வரர் „
5. „ ஸகஸ்ரலிங்கமும் தலவிருக்ஷமும்
6. „ மாணிக்கவாசகர் ஆலயம்
7. கல்தேர்
8. ஹரித்துவஜ தீர்த்தம்
9. தேவி தீர்த்தம்
10. அக்கினி தீர்த்தம்
11. பிரும்ம „
12. தேவஸ்தானமயாத்திரீயர்கள் விடுதி

